# ஸ்ரீஹரிகதாம்ருதஸார
# பல-ஸ்துதி ஸந்திகள்

(தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

தமிழில் உரை எழுதி வெளியிட்டவர்
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

**ஸ்ரீஹரிகதாம்ருதஸார**
**பல-ஸ்துதி ஸந்திகள்**
(தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

ஸ்ரீஹரிவாயுகுருகளின் ஆசியுடன்
ஜேஷ்ட பகுள த்ரயோதசி – (16–6–2023),
ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தரின் ஆராதனை நாளன்று
வெளியிடப்பட்டது

தமிழில் உரை எழுதி வெளியிட்டவர்
‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

**இந்தப் புத்தகத்தை வெளியிட பொருளுதவி செய்த**
**அனைத்து ஹரிபக்தர்களுக்கும் நன்றி!!**

**|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||**

# முன்னுரை

கன்னட ஹரிதாஸ ஸாகித்யத்தின் மேரு கிருதி - ஸ்ரீஹரிகதாம்ருதஸாரம். இதனை இயற்றியவர், தாஸ சதுஷ்டயரில் ஒருவரான - ஸ்ரீஜகன்னாததாஸர். ஸ்ரீவிஜயதாஸரின் ஆணைப்படி, ஸ்ரீகோபாலதாஸர் அருளிய 40 ஆண்டு கால ஆயுள் தானத்தை பெற்றுக் கொண்டு, அந்த ஆயுளில் தன்னை தாஸ மார்க்கத்தில் முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டு, ஸ்ரீஜகன்னாததாஸர் இயற்றியதே இந்த அற்புத கிரந்தம். 32 ஸந்திகளில், 988 பாமினி ஷட்பதி பத்யங்களில் இயற்றப்பட்டுள்ள இந்த கிருதி, கன்னடமாகவே இருந்தாலும், பல சம்ஸ்கிருத சொற்களையும் கொண்டிருப்பதால், இதனை படித்துப் புரிந்து கொள்வது என்பது மிகவும் கடினமான செயலே ஆகும் என்பதை, இந்த கிருதியை படித்தவர்கள் அனைவரும் ஒப்புக் கொள்ளும் விஷயம் ஆகும்.

மத்வ ஸித்தாந்தத்தின் ஹரி ஸர்வோத்தமத்வம், வாயு ஜீவோத்தமத்வம், தாரதம்ய, பஞ்சபேத முதலான கருத்துக்களை மிகவும் அற்புதமாக விளக்கும் இந்த கன்னட கிருதிக்கு முதன்முதலில் உரை எழுதியவர் ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரு. அதுவும் சம்ஸ்கிருதத்தில். பின்னர், கன்னடத்தில், ஆங்கிலத்தில் என பல்வேறு உரைகளும் இந்த கிருதிக்கு வந்துள்ளன. பாகவத, புராண மேற்கோள்களைக் கொண்டு எழுதப்பட்ட உரையான - ஸ்ரீபத்மனாப தாஸர் இயற்றிய பாவபிரகாஷிகெ - என்னும் உரை, மிகவும் விளக்கமான ஒன்றாகும் என்று அனைத்து அறிஞர்களாலும் போற்றப்படுகிறது. பின்னர், இந்த உரைகள், பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு, உலகம் முழுக்க உள்ள ஹரிபக்தர்களால் படிக்கப்பட்டு வருகிறது.

இத்தகைய கிருதியினை படிப்பதால் என்ன பலன் வருகிறது என்பதாக ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர் இயற்றிய பல-ஸ்துதியையே, ஹரிகதாம்ருதஸாரத்தின் 33வது ஸந்தியாக, அதனுடன் சேர்ந்து பாராயணம் செய்யும் வழக்கம் வந்திருக்கிறது. ஸ்ரீஸ்ரீத விட்டல

தாஸரைப் போலவே, மேலும் சில ஹரிதாஸர்களும் இந்த கிருதியின் பல-ஸ்துதியினை இயற்றியிருக்கிறார்கள். அந்த அனைத்தையும் தொகுத்து, அவற்றின் அர்த்தங்களுடன் கொடுப்பதே இந்த புத்தகத்தின் நோக்கம் ஆகும். இந்த ஹரிதாஸர்களின் பல-ஸ்துதிகளுக்கு முன்னர், ஸ்ரீஜகன்னாத தாஸரே இயற்றிய - தாரகவிது - என்று துவங்குவதான தேவரநாமாவே, ஒரு பல-ஸ்துதியாக இருக்கிறது என்பதையும் அறிகிறோம். அத்தகைய பல-ஸ்துதிகளை இயற்றிய ஹரிதாஸர்களின் பட்டியல் இவ்வாறு உள்ளது.

1. ஸ்ரீஜகன்னாத தாஸர் (தாரகவிது ஹரிகதாம்ருதஸார ஜனகெ)
2. ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்
3. ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டல தாஸர்
4. ஸ்ரீமனோகர விட்டல தாஸர்
5. ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்
6. ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்
7. ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்

இவை அனைத்தையும் முதலில் பாராயணத்திற்காக என்றும், பின்னர் அர்த்த விளக்கங்களுடன் என்றும் இரு பகுதிகளாக இந்த புத்தகத்தை தொகுத்து கொடுத்திருக்கிறோம். ஹரிகதாம்ரு தஸாரத்தை படித்து, பின்னர் இந்த அனைத்து பல-ஸ்துதிகளையும் அதன் அர்த்தங்களுடன் படித்து, உணர்ந்து கொண்டு, அந்தந்த பலன்களை முக்யபிராணாந்தர்கத பகவந்தனின் அருளால் பெறுவோமாக.

18.01.2023
பெங்களூரு

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**
**89044 58276**

# ஸ்ரீஹரிகதாம்ருதஸார கிரந்தத்தின்
# பல ஸ்துதிகளின் தொகுப்பு
# (மூலம் மட்டும்)

## தாரகவிது - ஸ்ரீஜகன்னாத தாஸரின் கிருதி

தாரகவிது3 ஹரிகதா2ம்ருதஸார ஜனகே

கோ4ரதர அஸார ஸம்ஸாரவெம்ப3
ஶரதி4கெ3 (தாரகவிது)

ஶ்வான ஸூகராதி3 நீச யோனிக3ளலி ப3ந்து3 நொந்து3
வைனதேய வாஹனன ஸன்னிதா3ன பே3கு எம்பு3வரிகெ3
(தாரகவிது)

ப்ரிய வஸ்துக3ளொளு பாண்ட3வ ஸக2னெ
அதி4க எனகெ3 ப்3ரஹ்ம
வாயு உச்ச ஸூரரு தந்தெ3 தாயி எந்து3 அரிதவரிகெ3 (தாரகவிது)

ஸ்ரீமுகுந்த3 ஸர்வ மம ஸ்வாமி அந்தராத்ம பரந்தா4ம
தீ3னப4ந்து3 புண்ய நாம வெந்த3ரிதவரிகெ3 (தாரகவிது)

க்3ஞேய க்3ஞான க்3ஞாத்ரு பா3த3ராயணாக்2ய ஹரிய வசன
காய மனதி3 மாடி3த3 கர்ம ஸ்ரீயரஸனிக3ர்ப்பி ஸுவகெ3 (தாரகவிது)

பூ4தப4வ்ய ப4வத்ப்ரபு3 அனாத2 ஜனர ப4ந்து3 ஜகன்னாத
விட்டல பாஹியெந்து3 மாதுமாதிகெ3ம்பு3வரிகெ3 (தாரகவிது)

****

## ஸ்ரீதவிட்டல தாஸரின் பல ஸ்துதி

ஹரிகதா2ம்ருதஸார ஸ்ரீம
த் கு3ருவர ஜக3ன்னாத2தாஸரு
கரதலாமலகவெனெ பேளித3 ஸகல ஸந்திக3ள |

பரம பண்டி$^{3}$தமானிக$^{3}$ளு ம
த்ஸரிசலெதெ$^{3}$ கி$^{3}$ச்சாகி$^{3}$ தோருவ
த$^{3}$ரஸிகரிகி$^{3}$து$^{3}$ தோரி பேளுவுத$^{3}$ல்ல த$^{4}$ரெயொளகெ$^{3}$ ||1

பா$^{4}$மினி ஷட்பதி$^{3}$ய ரூபத$^{3}$
லீ மஹாத்பு$^{4}$த காவ்யதா$^{3}$தி$^{3}$யொ
ளா மனோஹர தரதமாத்மக நாந்தி$^{3}$பத்$^{3}$யக$^{3}$ள |
யாமயாமகெ படிஸுவவர ஸு
தா$^{4}$மஸக$^{2}$ கைபிடி$^{3}$யலோஸுக$^{3}$
ப்ரேமதி$^{3}$ந்த$^{3}$லி பேள்த$^{3}$ கு$^{3}$ருகாருண்யகேனெம்பே$^{3}$ ||2

ஸாரவெந்த$^{3}$ரெ ஹரிகதாம்ருத
ஸாரவெம்புது$^{3}$தெ$^{3}$ம்ம கு$^{3}$ருவர
ஸாரித$^{3}$ல்லதெ$^{3}$ திளியதெ$^{3}$னுத மஹேந்த்$^{3}$ர நந்த$^{3}$னன
ஸாரதி$^{2}$ய ப$^{3}$லகொண்டு$^{3}$ ஸாரா
ஸாரகள நிர்ணயிஸி பேள்த$^{3}$னு
ஸார நடெ$^{3}$வ மஹாத்மரிகெ$^{3}$ ஸம்ஸாரவெல்லிஹுதோ$^{3}$ ||3

தா$^{3}$ஸவர்யர முக$^{2}$தி$^{3}$ நிந்து ர
மேஶனனு கீர்த்திஸுவ மனத$^{3}$பி$^{4}$
லாஷெயலி வர்ணாபி$^{4}$மானிக$^{3}$ளொலிது$^{3}$ பேளிஸித$^{3}$ |
ஈ ஸுலக்ஷண காவ்யதொ$^{3}$ளு யதி
ப்ராஸக$^{3}$ளிகெ$^{3}$ ப்ரயத்னவில்லதெ$^{3}$
லேஸுலேஸெனெ ஶ்ராவ்ய மாதுதெ$^{3}$ குருஹு கவிக$^{3}$ளிகெ ||4

ப்ராக்ருதோக்திக$^{3}$ளெந்து$^{3}$ ப$^{3}$ரிதெ$^{3}$ ம
ஹா க்ருதக்$^{4}$னரு ஜரிவரல்லதெ$^{3}$
ஸ்வீக்ருதவெ மாட$^{3}$த$^{3}$லெ பி$^{3}$டு$^{3}$வரெ ஸுஜனராத$^{3}$வரு |
ஶ்ரீக்ருதீபதியமல கு$^{3}$ணக$^{3}$ளு
ஈ க்ருதியொளுண்டாத$^{3}$ ப$^{3}$ளிகிது$^{3}$
ப்ராக்ருதவெ ஸம்ஸ்க்ருதத$^{3}$ ஸடக$^{3}$ரவேனு ஸுகு$^{3}$ணரிகெ$^{3}$ ||5

ஶ்ருதிகெ$^{3}$ ஶோப$^{4}$னவாக$^{3}$தொ$^{3}$டெ$^{3}$ ஜட
மதிகெ$^{3}$ மங்க$^{3}$லவீயதொ$^{3}$டெ$^{3}$ ஶ்ருதி

ஸ்ம்ருதிகெ3 ஸம்மதவல்லதி3த்3தொ3டெ3 நம்ம கு3ருராய |
மதிஸி மத்4வாக3ம பயோப்4தி3ய
க்ஷிதிகெ3 தோரித3 பி3ரம்மவித்4யா
ரதரிகீ3ப்ஸித ஹரிகதா2ம்ருதஸார ஸொாக3யிஸதெ3 ||6

ப4க்திவாத3தி3 பேள்த3ரெம்ப3 ப்ர
ஸக்தி ஸல்லது3 காவ்யதொ3ளு புன
ருக்தி ஶுஷ்க ஸமாஸ பத3 வ்யத்யாஸ மொத3லாத3 |
யுக்தி ஶாஸ்திரவிருத்3த4 ஶப்4த3 வி
ப4க்தி விஷமக3ளிரலு ஜீவ
ன் முக்தயோக3விதெ3ந்து3 ஸிரிமத3னந்த மெச்சுவனெ ||7

ஆஷுகவிகுல கல்பதரு தி
க்தே3ஷவரியலு ரங்க3னொலுமெய
தாஸகூடஸ்தரிகெரகி3 நா பே3டி3கொம்பு3வேனு |
ஈ ஸுலக்ஷண ஹரிகதா2ம்ருத
மீஸலளியதெ3 ஸார தீ3ர்க்க4
த்4வேஷிக3ளி கெ3ரெயத3லெ ஸலிஸுவுதெ3ன்ன பி3ன்னபவ ||8

ப்ராஸக3ள பொந்தி3ஸதெ3 ஶப்4த3
ஸ்லேஷக3ள ஶோதி3ஸதெ3 தீ3ர்க்க4
ஹ்ராஸக3ள ஸல்லிஸதெ3 ஷட்பதி3க3திகெ3 நில்லிஸதெ3 |
தூ3ஷகரு தி3னதி3னதி3 மாடு3வ
தூ3ஷணவெ பூ4ஷணவு எந்து3 உப
தே3ஶக3ம்யவு ஹரிகதா2ம்ருதஸார ஸாத்3யரிகெ3 ||9

அஶ்ருதாக3ம பா4வவிதர ப
ரிஶ்ரமவு ப3ல்லவரிகா3ன
ந்த3 ஸ்ருக3ள மளெக3ரிஸி மைமரெஸுவ சமத்க்ருதியு |
மிஸ்ரரிகெ3 மரெமாடி3 தி3விஜர
ஜஸ்ரத3லி காய்தி3ப்பரித3ரொளு
பஶ்ருதிக3ளை தப்புவெ நிஜப4க்தியுள்ளரிகெ3 ||10

நிச்ச நிஜஜன மெச்செ நெலெகொ
ண்டச்ச பா4க்3யவு பெச்செ பெர்மெயு
கெச்செ கேள்வரு மெச்சி மலமன முச்சலெந்தெ3னுத ।
உச்சவிக3ளிகெ3 பொச்சபொஸதெ3ன
லுச்சரிஸிதி3 ஸுச்சரித்ரெய
நுச்சரிஸெ ஸிரிவத்ஸலாஞ்சன மெச்சலேனரிது3 ।।11

ஸாது4ஸபெ3யொளு மெரெயெ தத்வஸு
போ4த3 வ்ருஷ்டியக3ரெயெ காம
க்ரோதபீ4ஜவ ஹுரியெ களரெதெ3 பி3ரியெ கரகரிய
வாதி4க3ள பல்முரியெ பரம வி
நோதி3க3ள மைமரெயலோஸுக3
ஹாதிதோரித3 ஹிரிய ப3ஹுசாதுர்ய ஹொஸபரிய ।।12

வ்யாஸதீர்த்தர ஒலவோ விட்டலோ
பாஸக ப்ரபு3வர்ய புரந்த3ர
தாஸராயர த3யவோ திளியது3 ஓதி3 கேளத3லெ ।
கேஶவன கு3ணமணிக3ளனு ப்ரா
ணேஶக3ர்ப்பிஸி வாதி3ராஜர
கோஶகொப்புவ ஹரிகதாம்ருதஸார பேளித3ரு ।।13

ஹரிகதாம்ருதஸார நவரஸ
ப4ரித பஹுக3ம்பீ4ர ரத்னா
கர ருசிர ஶ்ருங்கா3ர ஸாலங்கார விஸ்தார ।
ஸரஸ நர கண்டீ2ரவாசா
ர்யர ஜனித ஸுகுமார ஸாத்1வீ
கரிகெ3 பரமோதா3ர மாடி3த3 மரெயது3பகார ।।14

அவனியொளு ஜ்யோதிஷ்மதிய தை
லவனு பாமரனுண்டு3 ஜீர்ணிஸ
லவனெ பண்டி3தனொ கரிப விவேகியப்பந்தெ ।
ஶ்ரவணமங்க3ல ஹரிகதா2ம்ருத
ஸவிது நிர்கு3ணஸார முக்கிஸ
லவ நிபுணனை யோக்3யக3ல்லதெ3 த3க்கலரியதி3து3 ।।15

அக்கரதொ3ளீகாவ்யதொ3ளு ஒ
ந்த3க்கரவ ப3ரெதோ3தி3த3வ தே3
வர்க்க3ளிகெ3 து3ஸ்த்யஜனெனிஸி த4ர்மார்த்த2 காமக3ள |
லெக்கிஸதெ3 லோகைக நாத2ன
ப4க்தி பா4க்3யவ படெ3வ ஜீவ
ன் முக்தக3ல்லதெ3 ஹரிகதா2ம்ருதஸார ஸொாக3ஸுவதெ3 ||16

ஒத்தி ப3ஹ விக்4னக3ள தடெ3த3ப
ம்ருத்யுவிகெ3 மரெமாடி3 காலன
ப்4ருத்யரிகெ3 பீ4கரவ புட்டிஸி ஸகலஸித்திக3ள |
ஒத்திகொ3ள்ளிஸி வனருஹேக்ஷண
ந்ருத்ய மாடு3வனவன மனெயொளு
நித்யமங்க3ல ஹரிகதாம்ருதஸார படி2ஸுவர ||17

ஆயுராரோக்3யைஶ்வர்ய மா
ஹா யஶோதை4ர்ய ப3ல ஸமஸ
ஹாய ஶௌர்யோதா4ர்ய கு3ணகா3ம்பீ4ர்ய மொத3லாத3 |
ஆயதக3ளுண்டாக3 லொந்த3
த்4யாய படி2ஸித மாத்ரதி3ம் ஶ்ரவ
ணீயவல்லவெ ஹரிகதா2ம்ருதஸார ஸுஜனரிகெ3 ||18

குருட3 கங்க3ள படெ3வ ப3தி4ரனி
கெ3ரடு3 கிவி கேள்வஹவு பெ3ளெயத
முருட3 மத3னாக்ருதிய தாள்வனு கேள்த3மாத்ரத3லி |
ப3ரடு3 ஹைனாகு3வது3 கேள்த3ரெ
கொரடு3 ப1ல்லைஸுவுது3 ப்ரதிதி3ன
ஹுருடி3லாத3ரு ஹரிகதாம்ருத ஸாரவனு படி2ஸெ ||19

நிர்ஜர தரங்கி3ணியொளனுதி3ன
மஜ்ஜனாதி3 ஸமஸ்தகர்ம வி
வர்ஜிதா ஶாபாஶதி3ந்த3லி மாடி3த3தி4கப2ல |
ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெகெ3 தொ3ரெயதி3ப்பவெ
ஸஜ்ஜனரு ஶிரதூகு3 வந்த3தி3
க4ர்ஜிஸுதலி ஹரிகதாம்ருதஸார படி2ஸுவகெ3 ||20

ஸதியரிகெ3 பதிப4குதி பத்னி
வ்ரத புருஷரிகெ3 ஹருஷ நெலெகொ3
ண்டதி மனோஹரவாகி3 கு3ருஹிரியரிகெ3 ஜக3தொளகெ3 |
ஸதத மங்க3லவீவ ப3ஹு ஸு
க்ருதிக3ளெனிஸுத ஸுலப4தி3ம் ஸ
த்க3திய படெ3வரு ஹரிகதா2ம்ருதஸாரவனு படி2ஸெ ||21

எந்து வர்ணிஸலென்னளவெ ப4க3
வந்தனமல கு3ணானுவாத3க3
ளெந்து பரியலி பூர்ணபோ4த3ர மதவ பொந்த்3யவர
சிந்தனெகெ3 ப3ப்பந்தெ ப3ஹு த்3ரு
ஷ்டந்த பூர்வகவாகி3 பேள்த3 ம
ஹந்தரிகெ3 நரரெந்து3 ப3கெ3வரெ நிரயபா4கி3க3ளு ||22

மணிக2சித ஹரிவாணத3லி வா
ரண ஸுபோ4ஜ்ய பதா3ர்த்த2 க்ருஷ்ணா
ர்ப்பணவெனுத பஸித3வரிகோஸுக3 நீடுவந்த3த3லி |
ப்ரணதரிகெ3 பொங்க3ட3 வரவா
ங்மணிக3ளிம் விரசிஸித3 க்ருதியொளு
உணிஸி நோடு3வ ஹரிகதா2ம்ருதஸார வனுதா3ர ||23

து3ஷ்டரென்னதெ3 து3ர்விஷயதி3ம்
புஷ்டரென்னதெ3 பூ4தகர்ம
ப்4ரஷ்டரென்னதெ3 ஶ்ரீத3விட்டல வேணுகோ3பால
க்ருஷ்ண கைபி3டி3யுவனு ஸத்ய வி
ஶிஷ்ட தா3ஸத்வவனு பாலிஸி
நிஷ்டெயிந்த3லி ஹரிகதா2ம்ருதஸார படி2ஸுவர ||24

***

## ஶ்ரீகுரு ஶ்ரீஷ விட்டல தாஸரின் பல ஸ்துதி

தா3ஸவர்யர தாஸகர்ஜகி3
தா3ஸரெம்ப3ர ஈ ஸுவாக்யவு
தா3ஸீனவமாட3தி3ரி ஶ்ரீஹரிதா3ஸராத3வரு |

காஶி மொத3லாத3 ஸுக்ஷேத்ரதி3
வாஸமாட3லு ஈ ஸுஜன ஸஹ
வாஸப2ல தொ3ரகுவதெ3 ஶோதி4ஸெ ஸகலஶாஸ்த்ரத3லி ||1

ஶ்ரீவரன தா3ஸரிகெ3 ப4குதிலி
ஸேவகனு நானெந்து3 பேளுவ
ஜீவனவ ஸஜ்ஜீவி அவஹரிதா3ஸனெந்த3ரிது3 |
ஆவனாத3ரு ஆதி3யலி இத3
பா4வஶுத்3த4தி3 ஓதி3ப3ரெயலு
காவனய்யனு கருணிஸுவனு ஸதா3வகாலத3லி ||2

ஹரிகதா2ம்ருதஸார நோடு3வ
பரமப4க்தர ஞான த்3ருஷ்டிகெ3
வர ஸுலோசனத3ந்தெ இப்பவு ஈ ஸுபத்3யக3ளு |
அரஸிகரிகி3து3 பேளலாக3து3
முரஹரன தாஸரிகெ3 தப்பதெ3
ஹருஷ ஸுரிஸுவனிஹபரதி3 குருஶ்ரீஶவிட்டலனு ||3

***

## ஶ்ரீமனோகர விட்டல தாஸரின் பல ஸ்துதி

ஸிரிவர ஜக3ன்னாத2விட்டலன
சரணப4ஜக ந்ருஸிம்ஹதா3ஸன
வரமுகா2ம்பு3ஜதி3ந்த3 பரிமளத3ந்தெ பஸரிஸித3 |
ஹரிகதா2ம்ருதஸார புஸ்தக
ப3ரெது3 ஓது3த கேள்வ ஸுஜனர
து3ரித பரிஹர முகுதியவரிகெ3 கரதலாமலக ||1

இது3 ஸுதா4மணி சிந்திஸுவவரி
கி3து3 அபீ4ஷ்டவனீவ ஸுரதரு
விது3 மனத3காமிதவ கரகொம்ப3த3க்கெ ஸுரதே4னு |
இது3 சதுரவித4வாத3 புருஷா
ர்த்த2த3 ஸுமார்க்க3வ ப4க்தியிந்த3லி
ஸுத3மல ஶ்ரீஹரிகதா2ம்ருதஸார கேள்வரிகெ3 ||2

பதிதபாவன மாள்பதி3து3 ஸம்
ஸ்ருதிய பா3தெ4ய களெவதி3து3 ஸந்
தத விமல ஸுக்ஞான வைராக்3யாதி3 பா4க்3யவனு |
அதிஶயதி3 ஸத்ப4குதியித்த
ச்யுதனபாத3வ தோர்ப்பதி3து3 ஸம்
ஸ்துதிஸலோஶவே ஹரிகதா2ம்ருதஸார ஸம்ஸ்ருதிய ||3

ஹரிகதா2ம்ருதஸார பூர்வா
பரதி3 ரசிஸித3 விஷ்ணுதா3ஸர
நரரிவரு திட3வெந்து3ப3கெ3வரு மூர்க்க2ரிளெயொளகெ3 |
ஸுரரே லோகோத்தா4ரகோஸுக3
நரஹரிய ஸத்கு3ணக3ணங்க3ள
நருஹலுதி3ஸித3ரெந்து3 கொண்டா3டு3வரு கோவித3ரு ||4

ஶரதி2மத2னதொ3ளந்து3 ஸுதெ4 த1ம
க3ரெயலு நரஸிம்ஹதா3ஸரு
கருணதி3ம் தத்ஸுதெ4ய ஸுஜனரிகு3ணிஸபே3கெந்து3 |
ஹரிகதா2ம்ருதஸார நிஜமுக2
வரகலஶதி3ந்தி3த்து ரஸ ஸவி
தி3ரலு ஶாஶ்வத லோகதொ3ள ஜரமரண வெனிஸுவது3 ||5

பரமதத்வாஸார யோகீ3
ஶ்வரர மனகெ விஹார ஸஜ்ஜன
நெரவிக3ள ஶ்ருதிகோ3ஷபதிஹ ஸ்ருங்கா3ரலங்கார |
ஶரணஜன மந்தா3ர வெனிஸுவ
ஹரிகதா2ம்ருதஸார கேள்த3ரெ
து3ரித பாராவாரவனு தி3ட1 பாரகாம்பு3வனு ||6

ரோக3ப4யவெந்தெ3ந்து3 பா3ரது3
ஆக3த3பஜய து4ரதி3 ப3யஸித3
போ4க3 ஶுப4 கல்யாணவப்பது3 ஸர்வகாலத3லி |
ஶ்ரீகி3ரிய மந்தி3ரன கதெ2 லே
ஸாகி3 கேளலு தி3னதி3னதி3 ஶத
யாக3ப2ல ப3ஹுதா3யுராரோக்3யாகி3 ஸிரிப3ஹுது3 ||7

வாதி3க3ள எதெ3 ஷூல குமதவ
பே4தி3ஸுவ கரவால காம
க்ரோத4 தரிதா3னந்த3வேமது3 ஹரிகதா2ம்ருதவு |
பாத3மாத்ரவ படி2ஸுவகெ3 க3ங்
கா3தி3 ஸ்னானப2லவு ப3ஹுது3 மே
ணோதி3த3வனே த4ன்யதம மஸ்தக ஸமக்3ரவனு ||8

ஏனு த4ன்யரு நம்ம கு3ரு பவ
மான மததொ3ளகெ3ஸெவ சதுர ம
ஹானுபா4வரு எனிப வெங்கட நரம்ருகே3ந்த்3ராக்2ய |
ஞானநிதி4 முக2தி3ந்த3லுதி3ஸித3
ஸ்ரீனிவாஸன சரிதெஸுதெ4யனு
பானகெ3ய்யலு மனத3ணியரெந்தெ3ந்து3 ஸஜ்ஜனரு ||9

அண்டஜாதி4ப துரக3னடி3 கர
தி3ண்ட3க3ளனனவரத ப4ஜிஸுத
பண்டிதரிகிது3 ஸொகு3ஸுதோ3ருவத3த4ம மனுஜரிகெ3 |
கெண்ட3 ஸத்3ருஶவு முட்டலாபதெ3
ப3ண்டு3ணியு சம்பக ஸுபுஷ்பவ
கண்ட3வோல் குஜனரிக3ஸாத்3யவு ஹரிகதா2ம்ருதவு ||10

பரமதத்வ ரஹஸ்யவித3னு
ச்சரிஸலு ப3ரெத3 வைஷ்ணவரிகி3து3
கரகரிய ஸம்ஸாரவெம்ப3ப்3தி4யொளு முணுகி3ருவ |
நரரிகொ3ரெயலு பா3ரதெ3ந்தி3கு3
கரணஷுத்3தி4க3ளிந்த3 சரிஸுவ
ஹரிய தா3ஸோத்தமரிக3ருஹலு ஸப2லவாகு3வுது3 ||11

ஸ்னான ஸந்த்யாவந்த3னேதக்கெ
மௌன ஜபதப ஹோமவேதக்கெ
தா3ன காயக்லேஶ தீர்த்த2 க்ஷேத்ரயாத்ரெக3ள |
தானெஸக3லேகமல ப4க்தி
ஞானபூர்வக ஹரிகதெ2ய ஸ
ன்மானதி3ம் கேளித3ரெ ஸர்வவு ஸித்3தி4யாக3வுது3 ||12

ஹரிகதா2ம்ருதஸார புஸ்தக
ஸுரமஹீருஹ அத3க்கெ ஶாகெ2க3
ளெரடு3 நால்கெரடெ3ம்ப3 ஸந்தி4க3ளித3கெ முன்னூரு |
எரடு3 முன்னூரிப்பத்து அரவத்தெண்டு பத3க3ள
வரமது4ரப2ல வருணவாக3லு
ஹருஷதி3ம் ஸவிஸவிது3ருசிக3ள பொக3ள்வரே பு3த4ரு || 13

த3ஷ ஸுஸந்தி4யொளிப்ப ஸ்லோக1க3
ளெஸெவ நவரத்னாதி3 மணிக3ள
ப்ரஸர மணிக3ஞ்ஞான ப4க்திகளெம்ப3 கரதி3ந்த3 |
எஸகி3 நவரத்னக3ள மொடிக3
ளஸம ஶ்ரீ ஜகன்னாத2விட்ட2லன
பி3ஸஜ பாத3க்கிட3லு ஸேவெயனொட3னெ கைகொம்ப3 ||14

நவரஸாலங்கார ஶாஸ்த்ரவ
விவரிஸலு ப3ஹுத3தி1 சமத்க்ருதி
கவித1வனு வர்ணிஸலு ப3ஹுதீ3 ஶ்ரீமனோஹரன |
ஸ்தவன கு3ணக3ள தத்வஸாரவ
அவனிஜனரிகெ3 பேளலொஶவே
தி3விப4வரிக3ல்லத3லெ ஹரியகதா2ம்ருத ஸ்னான ||15

ஶ்ரீமனோஹர விட்டல தா3ஸன
ப்ரேமதி3ம் கரவிடி3த3 கு3ண நி
ஸ்ஸீம ஶ்ரீஜக3ன்னாத2விட்ட2லன ப4ஜகரெந்தெ3னிப |
ஆ மஹாத்மர ஞானவித்4யெய
நாமவனுதி3ன ஸ்மரிஸலவரிகெ3
காமிதார்த்த2க3ளு தொ3ரெவவு ஸந்தே3ஹவேனித3கெ ||16

இருளுஹக3லருவத்து க4ளிகெ3ய
பரிபரிய தி3வஸத3லி ஸந்தத
நிரந்தர ஸம்ஸாரவெம்ப3ப்3தி4யொளு முளுகி3ரதெ4 |
அரெக4ளிகெ3 ஸத்ப4க்தியலி ஶ்ரீ
ஹரிகதா2ம்ருதஸார ஸவித3ரெ
ஸிரிமனோஹர விட்ட2லனடிதா3வரெய ஸேருவரு ||17

## ஸ்ரீபீமேஶ விட்டல தாஸரின் பல ஸ்துதி

ஹரிகதா2ம்ருதஸாரஸந்தி4க3
ளருஹுவேனு தத்க்ருத மஹாத்மர
சரண கருணாப3லவிரலு ஸன்மங்க3ளாசரணா ।
ஸரஸஸந்தி4ய பேள்த3 ஸுஜனரி
க3ருஷ கொடு3வுதுயெந்து3 பரமா
த3ரதி3 கருணஸந்தி4 வ்யாப்த ஸுஸந்தி4 போ4ஜனதா3 ।।1

ஸந்தி4ஸுக2த3 விபூ4தி ஸிரிகோ3
விந்த3னாக்ஞதி3 பேளித3ரு ஆ
நந்த3 நீடு3வ பஞ்சமஹாயக்3ஞத3 ஸுஸந்தி3யன ।
ச2ந்த3தி3ந்த3லே பஞ்சதன்மா
த்ரெந்து3 கரிஸுவ ஸந்தி4 பேள்த3ரு
இந்தி3ரேஷன ப்ரீதி ப3டி3ஸுவ மாத்ருகா ஸந்தி4 ।।2

வர்ணப்ரக்ரிய ஸந்தி4 ஸுஜனர
கர்ணக3ளிக3தி ஸ்ராவ்யவெனிபுது3
தோர்ணத3லி ஸர்வப்ரதீக த்4யானப்ரக்ரியவா ।
நிர்ணயிஸித3ரு நாடி3யனு ஸம்
பூர்ண கு3ண நாம ஸந்தி4யனு
ஸ்வர்ணனாபி4 ப்ரமுக2 ஜீவன ப்ரக்ரியா ஸந்தி4 ।।3

வாஸுதே3வன கருணதி3ந்த3லி
ஶ்வாஸ ஸந்தி4ய பேளித3ரு ஜக3
தீ3ஷனிந்த3லி த3த்த ஸ்வாதந்த்ராக்2ய ஸந்தி4யனா ।
லேஸெனிப ஸ்வாதந்த்ர விப4ஜன
தா3ஸரு ஸரித3ரெல்ல பி3ம்போ3
பாஸனத3 ஸந்தி4யனு ஹரிய ஸ்தோத்ர ஸந்தி4யன ।।4

ஸுகு3ண தரதம பா4வ ஸந்தி4யு
மிகி3லு ஆவேஷாவதாரவ
நக3த4ரன ப4க்தாபராத3 ஸஹிஷ்ணு ஸந்தி4யனு ।
ஹக3லு இருளென்னதெ3லெ பிரியரு

ப3கெ3ப3கெ3ய ஶாஸ்திரவனு ஶோதி4ஸி
ஸுக3திப்ரத3 ப்3ருஹத்தாரதம்யத3 ஸாத4னத3 ஸந்தி4 ||5

தே3வனங்க்4ரிய நெனெவுதலி க்ரீ
டா3 விலாஸவரோஹ ஸந்தி4யு
தே3வதானுக்ரமணிகா விக்4னேஷ ஸந்தி4யன |
பா4வவுள்ளணு தாரதம்யவ
தா விரசிஸுத தை3த்யதரதம
பா4வ நைவேத்3ய ப்ரகரண ஸந்தி4 பேளித3ரு ||6

நீரஜாக்ஷன நெனெது3 கக்ஷ
தாரதம்யத3 ஸந்தி4 பேளுத
ஸ்ரீரமண க3ர்ப்பிஸுதலிரெ பீ4மேஶ விட்டலன
சாருசரணவ நெனெவுதனுதி3ன
தா4ருணீயொளு மெரெத3 நம்ம
கு3ருதொ3ரெ ஜக3ன்னாதாக்2ய தாஸர நெனெவெனனவரத ||7

***

## ஸ்ரீ குருஸ்ரீனிவாஸ விட்டல தாஸர் இயற்றிய நிர்குணஸார ஸந்தி

ஸ்ரீஹரி தான் எந்த செயல்களுக்கும் கட்டுப்படாமல், அனைத்து ஜீவர்களிலும் இருந்து, அவரவரகளின் கர்மபலன்களுக்கேற்ப, இப்பிறவியில் அவர்களிடம் நற்செயல்களை செய்வித்து, அவரின் தகுதிக்கேற்ப மோக்ஷாதி பலபுருஷார்த்தங்களைக் கொடுக்கிறான் என்று இந்த சந்தியில் தாசர் விவரித்துள்ளார்.

**வார்த்திக ஷட்பதி.**

ஸ்ரீரமணி குசகுங்குமாம்கிதத3 ஸொப3கி3னிம்
வாரிஜ ப4வேர ருசிதுதிஸுதிஹ பா4க்3யதி3ம்
சாருதரவாணி பா4ரதி ப2ணிப விஹக3பதி கி3ரிஜா ரமண முக்2யர |
பூ4ரி வந்த3னெய ஸம்பத3தி3ந்த3 மெரெயுதிதூ
தா3ரஞானானந்த3 கு3ணபூர்ண வ்யாப்தி ஜக3

தா4ர கு3ருவர ஸ்ரீனிவாஸ விட்டல பொரெவ தனகெ3தானே த4ரெயொளு ||1

முன்ன கு3ருவர ஜக3ன்னாத2விட்டல பேள்த3
ஸன்னுத கவிதவெனிப ஹரிகதா2ம்ருதஸார
தன்மத்4யதொ3ள் தோரிதோரத3வோலிப்ப நிர்கு3ணஸார ஸங்க3தியனு
இன்னு ஜக3தொ3ளகி3ப்ப ஸர்வஜீவாந்தஸ்த2
தன்ன ஹரி கேளி தோஷிசலெந்து3 த4ரெயொள
த்யுன்னதவதி4க ஸர்வஜீவனியமகனல்லி நிந்து3னுடி3வனு த4ரெயொளு ||2

அனபி4மத கர்ம ப்ரவாஹதொ3ள் ஜீவததி
யனுபமன வஷவாகி3யிருவ காலக3ளல்லி
ஸலெ ஜீவரெல்ல நிஷ்க்ரிய சேதனாபா4ஸரெந்து3 கரெஸுவரு ப3ளிக
அனுபம சரித்ர ஹரி பாலிஸுவனனவரத
தனமட3தி3யதி4 தெ3ய்வவெனிப ஜட3ரூபதா3
தனுவித்து ஜீவக்ருத கர்மக3ளனாசரிஸி ஸுக்ருத து3ஷ்க்ருதக3ளுண்டே ||3

தன்ன மனப3ந்த3 தெரெத3ந்தெ ஜீவரொளித்து3
பி4ன்னகு3ணரூப க்ரியாதி3க3ள தோருவம்
ஸன்னுத ஸுமார்க்க து3ர்மார்க்க3 மத்4யமவெந்து3 கரெஸுதிப்பம் த4ரெயொளு |
தன்ன மனப3ந்த3 தாமஸவ ஸ்வீகரிஸுவம்
தன்னமதவல்லதி3ஹ ஸாத்விகவனோகரிப
தன்ன மனவாரெ ராஜஸவெந்து3 கரெது3 நடெ3வம் தானெ ராஜஸதொ3ளு ||4

ப3லு ஜன்மவீயலோஸுக3 கெலவரலி நிந்து
திளியத3வனோபாதி3 தன்ன தாமரெதி3ஹம்
ஸலெ ஜன்மக3ணனெ தீரித3 ப3ளிக தன்ன தானொளகொ3ம்ப3 சேதனதொ3ளு |

திளிது3 தன்னய ஸேவெ தானெ மாடு3த நித்ய
எளெய மேலித்த3 ஜீவரொளித்து3 தாபொக3ளி
ப3லு புண்யவந்தனிவனெந்து3 ஸந்தஸப3ட்டு தனகெ3தானெ ஒலிவனு

வேத4 மொத3லாத3வர ஸாத்விகரெனிஸலெளஸி
ஸாது4 ஷாந்தத்வ ஸ்வரூபதி3ந்த3ருதிப்ப
க்ரோதி4 ஶம்ப3ரதை3த்ய கலி முக்2ய தா3னவரொளிப்ப நதி1கோபதி3ந்த3
ஈ வஸூந்த4ரெயொளகெ3 கோபஶாந்திக3ளெரடு3
ஆவ தே3ஷதொ3ளாதொ3ட3ம் கூடி3னடெ3த3புவெ
தே3வ மாடு3வ க்ருத்யக3ளனு நிந்தி3பருண்டே ஆவாவ லோகக3ளொளு ||6

தேஹஸ்தா2னத3 ஜீவனு களவனாசரிஸி
தே3ஹக்கெனிக3ள ப3ந்த4னவப்ப தெரெத3ந்தெ
தே3ஹினிகரதொ3ளு ஹரி தானிந்து சேஷ்டெயம் மாட3லத3ரத3ர ப2லகெ1 |
ஈ தே3வவந்த்3ய ஸுக2துக்க2 போ4க்தனு எந்தொ3
டா3தே3வகே3னஹுது3 குந்து3 கொரதெக3ளிந்து
மாத4வனெ ஆசரிஸி நுடி3து3 ஸந்தஸப3டு3வ ஸகல ப்ராணிக3ளொளித்து3 ||7

பூ4ஸுரர தே3ஹதொ3ளகி3ருவ ஜீவனொளிப்ப
வாஸுதே3வனெ விப்ரனெந்து3 தா கரெஸுவம்
ஈ ஸமஸ்த புராணவேத3 சாஸ்திரோக்த கர்மக3ளனாசரிஸுதிஹனு |
ஸ்வோசித ஸுமார்க்க3க3ளனாசரிஸ பே3கெந்து3
வாசிஸுத மூரு வர்ணத3 ஜீவரொளகி3ப்ப
கீ1சகாரிப்ரியகெ3 ஸூசிஸுதனெலஸிஹம் ஆஸெ க்லேஷக்கெ ஸிலுகதெ3 ||8

மானவப தே3ஹஸ்த2னாத3 ஜீவரொளித்து3
தானெ க்ஷத்ரியனெந்து3 கரெஸுதனுதி3ன வன

ஜனாப4 ஸங்கர்ஷணனெ து3ஷ்ட நிக்3ரஹ ஸிஷ்டபரிபாலனெய மாடி3
ஸானுராக3தி3 ஸகலவர்ணாஶ்ரமாசார
ஹீனவாக3த3 தெரதி3 பாலிஸுதலனுதி3னதி3
தானே பூஜிபனு விப்ரஸ்த2னாகி3ஹ வாஸுதே3வனெ வினயதி3ந்த3 ||9

ஈ நளினஜாண்ட3தொ3ளகு3ள்ள வைஶ்யரகாய
ஜாலக3ளொளிப்ப சேதன நிகரதொ3ளு நிந்து
வாணிஜ்ய வ்ருத்திக3ள ஸேவாதி3 க்ருத்யக3ளனாசரிப ப்ரத்4யும்னனு |
தானெ பூஜக பூஜ்யனாதொ3ட3ம் பே3ஸரதெ3
தானெ பூஜிப தானெ இட்டிஹாக்ஞானமம்
ஸானுராக3தி3 ஜீவததிகி3த்து அவர ஸ்வபா4வயெனிஸுவனு கருணி ||10

தாவெ பி3த்துவ பெ3ளெவனித்த தா4ன்யக3ளதா
போவி அவனிபதி மொத3லாத3வர்கீ3யுதிஹ
ஆவி அஜ வ்ருஷப4 மொத3லாத3 ஜீவததிய ஸலஹுவம் ஷூத்3ரனெனிஸி |
ஈ வனஜ க3ர்ப்பா4ண்ட3தொ3ளகு3ள்ள ஜீவரொளு
பா4விதனு அனிருத்த3 நாமந்தி3த3லெ கரெஸி
ஈ வித4தி3 சதுஷ்டாது தானெனிஸிகொளுதிப்ப மாவிதி4 ப்ரமுக2ஸ்துத்ய ||11

கோ3வுக3ளொளிருதிப்பனு உத்கீ3தனாமகம்
ஆவி அஜக3ளொளிஹனு ப்ரஸ்தாவ ஹீம்கா
ரவாஹனாஸ் பத3வாத3 ஹயக3ளொளகி3ருதிப்பனு ப்ரதிஹாரனெனிஸிகொண்டு3 |
ஜீவனப்ரத நித4னனாம மனுஜரொளித்து3
தே3வதா3னவரெனிப ஸகல சேதனருக3ள
யாவதி3ந்த்3ரிய போ4க்3யரஸக3ளனு ஸ்வீகரிப ஸ்தூ2லபு4கு விஶ்வாக்2யனு ||12

கேஶஸாஸிர பா4க3கெ3ய்ஸூலெனிதிஹ ஜீவ
நீஸுத்3ருட3தரவாக3த3வனு பு4ஞ்சிபனெனலெ
வாஸவார்ச்சிதபாத3 ஶ்ரீஷ நக3தி3ஹனெ தன்னய க்ருத்ய தா நெனெது3
ஸூஸிகருணவ தானு கைபிடி3த3 சேதனனொ
ளேஸு காலக3ளாதொ3ட3ம் ஜீவக்ருதவனிஸ
கா4ஸிகொ3ளிஸலு ஜக3த3 ஜீவரொளகி3த்தா3டி3 ஜன்மம்ருதிக3ள கொடு3வனு ||13

ஜீவரந்தர்யாமியாகி3ப்ப ஹரி லிங்க3
தே3ஹத3பி4மானி லகுமியொளிருவ தனகெ3 தா
நோவி ப்ரேரிஸெ ப3ளிக லிங்க3ஸ்த2னாத3 வாரிஜ ப4வாந்தர்யாமிகெ3 |
ஜீவப்ராவரண லிங்காபி4மானியொளித்3து3
மாவிஸுத ஹரி தனகெ3 தானெ ப்ரேரிஸலஹவு
தீ1வியுந்தி3ருவ அனிருத்3த4 தே3ஹதொ3ளிப்ப ஜீவததியொளு நெலெஸிஹ ||14

பா4விஸேஷ பதா3ர்ஹ முக்2யதே3வார்ச்சித
ஶ்ரீவினுத ஹரிகெ3 ப்ரேரணெ ஸ்தூ2லதொ3ளு ஹொளெவ
தே3வதா3னவ ஸேவ்ய விஷ்வாக்2யக3ஹுது3 அனிருத்3த4 தே3ஹஸ்த2னாகி3 |
எணிஸி விஶ்வாக்2யனாசரிப தன்மய ஆக்ஞே
தனகெ3 தானே மீரத3லெ ஸத்ய ஸங்கல்ப
த3னுஸார ஸ்தூ2லதொ3ளகி3த்3து3 தத்3ரூப தன்னாமதி3ம் கரெஸிகொண்டு3 ||15

ஈவிதா4த்யாத்ம தொ3ளகீ3வ ப்ரேரகனாகி3
ஆவகர்மவ ஈஷனாக்ஞெயிந்தா3சரிப
ஆவகர்மவ மாட3லிர்த3புது3 சைதன்ய சேதனாபா4ஸகங்கே3 |
கோவிதோ3த்தமரெனிஸி நியாயபா3ஹிரரெனிஸி
ஆவுதொ3ந்த3ரிய த3க்ஞானமிஸ்ரரு எனிஸி
ஈ வித4தி3 ஜீவரனு மூருகு3ணதொ3ளகி3ட்டு ஸலஹுவம் க்ருதிரமணனு ||16

ஜீவரந்தர்யாமியாகி3த்து3 ப்ரேரிஸுவ
பாவனனெனிப்ப ப்ராணனொளித்து3 ஸாக்ஷியஹ
வோவி கார்யக3ள நடெ3ஸுவ ஸ்தூ2லதொ3ளகி3த்து3 விஷ்வாக்2யனெனிஸிகொண்டு3 |
யாவதிந்த்3ரியத3 வ்யாபாரக3ள நடெ3ஸுவடெ3
ஆவகாலகு ஜீவததிகெ3 ஸ்வாதீ4னவில்ல
பாவனனெனிப்ப ஹரியிட்ட தெரனந்திருவுதே3 ஜீவத4ர்மகர்ம ||17

ஜீவ ஜீவகெ3 பி3ம்ப3னெனிஸி கொம்பு3வுது3ண்டே
பாவனனெனிஸிகொண்டு3 ஹரி தானெ நிந்த1கி2ள
ஜீவரொளு ப்ரத்யேகவாகி3 கரெஸுவ பி3ம்ப3ப்ரதிபி3ம்ப3 நாமதி3ந்த3 |
ஜீவனிகரகெ யோக்3யதெக3ளில்ல விஷ்வஜக3
தீவலய ஜீவரொளகி3த்து3 கர்மவமாடி3
தானேபேளுவ யோக3தி4ஷ்டான நீசரெந்தா3வாவ காலக3ளொளு ||18

ஆதி3யொளு ஸ்ருஷ்டிகாலதி3 ப்ரக்ருதியொளு நிந்து
தா த3யதி3 மூரு கு3ணக3ளஸ்ருஜிஸி மேதி3னிய
மேலெ ஸாத்விக ரஜோதாமஸக3ளெந்து3 பெஸரிடெ3 ஸத்ய ஸங்கல்ப |
ஈ தே3வதே3வகொ3த3கி3து தவஸுஸாரப3ளி
கீசராசர ஜீவததிய கு3ணதொ3ளகி3ட்டு
ஹாதி3 தப்பிஸலுகொ3ட3தெ3 கர்மானுஸார நடெ3வனு ஸத்யஸங்கல்பனு ||19

தானெ கார்யவ மாடி3பாபவெந்த3ருபுவம்
தானெ க்ருத்யவ நடெ3ஸி ஸுக்ருதவெந்து3 ஸுரித3ப
தானரியத3வன தெரதொ3ளகி3த்து3 மிஷ்ரனெந்தா3டு3வம் ஜீவததிய
தானெ தன்னய மனவனித்து ஜீவரபொரெவ
தானெ மதகொ3ட3தெ3 ஜீவர மேலெ கோ1பி1ஸுவ
தானுதா3ஸினகை3த3வன தெரதொ3ளிருத ஹரி கு3ணயுக்த சேதனரொளு ||20

ஜீவரிகெ3 ருணரூபவாத3 கு3ணவனெ ஸ்ருஜிஸி
மாவினுத தன்ன ஆக்ஞுதி ஜீவரிகெ3 ஹோரிஸி
ஈ வித4த3 எரடொ3ந்து3 கு3ணவ ருணகடெ3யாகி3யிரலோஸுக3வெ அவரொளு ||
ஜீவ கர்த்ருத்வ ப3ந்த4கமுக்ருதி ரூபாந்து
பாவனனெனிஸி கொண்டு3 லிப்தனாக3தெ3 நிந்து
ஆவாவ பக்வகாலக3ளரிது கு3ணருணவ ஸாவதா4னதி3தித்3து3வ ||21

ஆவ கு3ணருண பக்வகால ப3ல்லனோஜீவ
ஆவ கர்மக3ள து3ர்மத ப2லவ நெரெப3ல்ல
ஆவ துஷ்க்ருத ஸுக்ருத ப2ல உண்ட3 ப்ரக்ஞா விஶேஷவிப்புதோ3 ஜனுமதொ3ளு |
தீவிகொண்டி3ஹ ஜன்மகு3ணருண மஹாப4யவு
டா2வரிது3 ஜீவரனு பாரகா3ணிஸெ முக்த
ஸ்ரீயரஸனொலியத3லெ ஒலிஸப3ல்லவருண்டே ஜட3சேதனர மத்4யதி3 ||22

நோவொந்து3 தனகா3கி3 பரிஹரிஸிகொளலரியெ
பாவகி3த விஷவ நிர்வஹிஸி கொளலந்தரிய
ஜீவனு ரமாப்ரம்ம ருத்ராத்3யசிந்த்ய ஸத்கு3ணபூர்ண நரஹரியனு
தாவொலிஸி மெச்சிஸி ப4வார்ணவவ தா3டுவுதி3
தா3வ காலகு ஸாத்3யவஹுதெ3 அனஸூயெயம்
தா ஒலிது3 அனிமித்த பொரெவனெனலவனெ நிர்கு3ண ஜீவனீ த4ரெயொளு ||23

ஈ வித4த3 பா4வனெயு ஆவ ஜீவனொளித்து3
தானோவி கருணதி3ம் மாள்பனோ ஶிரிரமண
பூ4வலயதொ3ளகெ3 தச்சேதன கு3ணதோ3ஷக3ளனு தா லெக்கிஸத3லெ
பா4வி ஆகா3மி ஸஞ்சிதக3ளனு களெது3 ப4வ
நோவனீயதெ3 தன்ன ப4க்தி ஸம்பத3வித்து
ஈ வஸுந்த4ரெயொளகெ3 ஸ்ருஷ்டிகெ3 காவ தன்னொளகி3ட்டு ஸுகு3ணி கருணி ||24

தானே கோபிஸி தானே ஷாந்தனாத3பனொம்மெ
தானெ பெ3ய்வம் தானெ த3யகெ3ய்வனொளொம்மெ
தானெ நரகவனித்து மரளி த3யவிட்டு மோக்ஷவனீவ ப4க்தக3ணகெ |
ஈ வித4த கோ1ப ஷாந்திக3ளிகா3ஸ்பத3வாத3
ஜீவக்ருத்யக3ள தானாசரிஸி நடெ3யுதிஹ
தே3வ கு3ரு ஸ்ரீநிவாஸவிட்டலகெ3 வைஷம்யவுண்டெ க4ன சினுமயங்கெ3 ||25

## ஸ்ரீகமலாபதி விட்டலதாஸர் இயற்றிய பலஸ்துதி ஸந்தி

ஸ்ரீமத3ஶ்வ க்3ரீவனொலுமெகெ3
தா4மரெனிப ஸ்ரீ வாதி3ராஜரு
ஸ்வாமி ஸ்ரீ வ்யாஸார்ய விட்டலோபாஸ்ய ஸ்வப்னத3லி |
ஸ்ரீ மனோரமனெனிப தத்வ ஸு
ஸௌமனத3 மாலிகெயனித்து
த்3தா4ம கி3ரந்த2வ ரசிஸினுதலி நுடி3த3 காரண3தி3 ||1

பா4ரத ஸு பா4க3வத வாமன
கா3ருட3 ப4விஷோத்தர பத3வு
சாரு விஷ்ணுரஹஸ்ய வாயு பஞ்சராத்ராக3மா
ஸார கு3ரு வ்ருத்த ப்ரவ்ருத்த
ஈர ஸம்ஹிதாதி3த்ய வாக்3னேய
பார ரஸக3ள தோர்ப ஸ்ரீ கு3ருமத்4வஶாஸ்திரவு ||2

ஸார க்ரோடி3கரிஸலனுதி3ன
ஸாரெ வர்ணாபி4மானி தீ3னோ
த்3தா4ரகோ3ஸுக3 ஹரிகதா2ம்ருதஸாரவனு ரசிஸி |
ஸ்தை2ர்ய மானஸதி3ந்த3 பா4வி
பா4ரதிபதி வாதி3ராஜர
பூ4ரி கோஶகெ வொப்பிஸுதலாபார முத3 படெ3த3 ||3
ஸாஸிரார்த்த2தொ3ளொந்து3 பத3கவ
காஶ விருவோ ஸ்ரீத3 ப்3ருஹதி

ஸாஸிரத3 நாமவனு யோசிஸி இவரு கி3ரந்தத3லி |
ஈ ஸுரஹஸ்யவனரிது படி2பகெ3
யேஸு தூ3ரவோ முக்தி ப3ரிதா3
யாஸ ப3ட்டத3ரிந்த3 ப2லவேனில்லவே ஜக3தி3 ||4

ஹ எனலு ஹரியொலிவனு தா
ரி எனலு ரிக்தத்வ ஹரியுவ
க எனலு கத்தலெய அஞ்ஞானவனு பரிஹரிப
தா எனலு ஸ்தா2பிஸுவ ஞானவ
ம்ரு எனலு ம்ருதி1 ஜனிய பி3டி3ஸுவ
த எனலு ஹரி தன்ன மூர்த்திய தோருவனு நித்ய ||5

ஸா எனலு ஸாதி4ஸுவ முக்தீ
ர எனலு ரதி இத்து ரமிபனு
காய வாங்மனதெ3ண்டு அக்ஷர நுடித3ரத3ரொளகெ3 |
ஶ்ரீயரஸ விஷ்வாதி3 அஷ்டை
ஶ்வர்யரூபதி3 நிந்து தா பர
கீய நெனிஸதெ3 இவன மனதொ3ளு ராஜிபனு பி3ட3தெ3 ||6||

ஹரியெனிபக3னிருத்3த3 த4ர்மவு
தொ3ரகிஸுவனு பரம ஹருஷதி3
த்வர கதா2யெனெ க்ருதிரமணனர்த்தி2க3ள ஹனிக3ரெவ |
வர அம்ருத யெனலாக3 ஶ்ரீ ஸங்
கருஷணனெ காமஹனு யோசிப
ஸரஸஸாரனெ வாஸுதே3வனு மோக்ஷ கொடு3திப்ப ||7||

ஈ ரஹஸ்யவனரிது ப்ரதிதி3ன
ஸாரஸாக்ஷன பாத3கமலகெ
ஆரு பத3னந்திருவ ஸுஜனகெ மேலே நுடி3த3 ப2ல |
ஸாரி ஸாரிகெ3 வத3கி3 ப3ருதலெ
ஸேரிஸுவரை விஷ்ணு மந்தி3ர
தோருவனு நிந்த3கர நிக1ரகெ1 நிரயவனு நித்ய ||8

சாருதனதி[3] ஹரிகதா[2]ம்ருத
ஸாரக்ருத ரிஷி பா[4]ரத்[3]வாஜர
ஸார ஹ்ருத[3]யதி[3] நிந்தா[3] ஸகல ஸுஶாஸ்திரதா[3] லோகா |
ஸாரிஸாரிகெ[3] மாடி[3] மாடி[3]ஸி
ஸூரெகொ[3]ட்டானந்த[3] சின்மய
பா[1]ரவாரஶயன ஸ்ரீ கமலாபதிவிட்டலா ||9

***

## ஸ்ரீஹரிகதாம்ருதஸார கிரந்தத்தின் பல ஸ்துதிகளின் தொகுப்பு தமிழில் அர்த்த விளக்கங்கள்

### தாரகவிது - ஸ்ரீஜகன்னாத தாஸரின் கிருதி

**தாரகவிது$^3$ ஹரிகதா$^2$ம்ருதஸார ஜனகே**

**கோ$^4$ரதர அஸார ஸம்ஸாரவெம்ப$^3$**
**ஶரதி$^4$கெ$^3$ (தாரகவிது)**

**ஶ்வான ஸூகராதி$^3$ நீச யோனிக$^3$ளலி ப$^3$ந்து$^3$ நொந்து$^3$**
**வைனதேய வாஹனன ஸன்னிதா$^3$ன பே$^3$கு எம்பு$^3$வரிகெ$^3$ (தாரகவிது)**

**ப்ரிய வஸ்துக$^3$ளொளு பாண்ட$^3$வ ஸக$^2$னெ அதி$^4$க எனகெ$^3$ ப்$^3$ரஹ்ம**
**வாயு உச்ச ஸூரரு தந்தெ$^3$ தாயி எந்து$^3$ அரிதவரிகெ$^3$ (தாரகவிது)**

**ஸ்ரீமுகுந்த$^3$ ஸர்வ மம ஸ்வாமி அந்தராத்ம பரந்தா$^4$ம**
**தீ$^3$னப$^4$ந்து$^3$ புண்ய நாம வெந்த$^3$ரிதவரிகெ$^3$ (தாரகவிது)**

**க்$^3$ஞேய க்$^3$ஞான க்$^3$ஞாத்ரு பா$^3$த$^3$ராயணாக்$^2$ய ஹரிய வசன**
**காய மனதி$^3$ மாடி$^3$த$^3$ கர்ம ஸ்ரீயரஸனிக$^3$ர்ப்பி ஸுவகெ$^3$ (தாரகவிது)**

**பூ$^4$தப$^4$வ்ய ப$^4$வத்ப்ரபு$^3$ அனாத$^2$ ஜனர ப$^4$ந்து$^3$ ஜகன்னாத**
**விட்டல பாஹியெந்து$^3$ மாதுமாதிகெ$^3$ம்பு$^3$வரிகெ$^3$ (தாரகவிது)**

பல்லவி - முக்தியை விரும்பும் மக்களுக்கு, ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த கிரந்தமானது, தக்க வழிகாட்டியாக இருக்கிறது.

அனுபல்லவி - கோரமான இந்த சம்சாரம் என்னும் சாகரத்தை கடக்க விரும்பும் மக்களுக்கு...

சரணம் 1 : நாய், பன்றி முதலான பிறவிகளில் வந்து நொந்து - இந்தப் பிறவியில் கருட வாகனனின் சன்னிதானம் வேண்டும் என்று விரும்புபவர்களுக்கு...

சரணம் 2 : ஸ்ரீஹரியே எனக்கு மிகவும் பிடித்தமானவர்; பிரம்ம வாயுகளே ஜீவோத்தமர் - அவரே என் பெற்றோர் - என்று அறிந்தவர்களுக்கு ...

சரணம் 3 : ஸ்ரீமுகுந்தனே எனக்கு அனைத்தும்; அவனே என் தலைவன், பரந்தாமன், என்னை காப்பவன்; நான் உச்சரிக்கும் புண்ய நாமம் அவனுடையதே என்று சொல்பவர்களுக்கு ...

சரணம் 4 : படிப்பவர், படிக்கும் விஷயம், அறிவு என அனைத்தும் ஸ்ரீஹரியே என்னும் பாதராயணரின் வசனத்தை அறிந்தவருக்கு; உடல், மனம், வாக்கு ஆகியவற்றால் செய்த செயல்கள் அனைத்தையும் ஸ்ரீஹரிக்கே அர்ப்பணம் செய்பவர்களுக்கு ...

சரணம் 5 : இறந்த, நிகழ் மற்றும் எதிர் காலங்களில் அவனே தலைவன்; அனைத்து பக்தர்களை அருள்பவன்; ஜகன்னாதனே என்னை அருள்வாயாக என்று எப்போதும் சொல்பவர்களுக்கு ...

***

## ஸ்ரீதவிட்டல தாஸரின் பல ஸ்துதி

ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்பது அனைத்து நற்சாஸ்திரங்களின் சாரமாகும். இத்தகைய கிரந்தத்தைக் கேட்கும் படிக்கும் புண்ய புருஷர்களுக்கு ஸ்ரீபரமாத்மன் தன் அபரோக்ஷத்தைக் கொடுத்து, மோட்சாதி புருஷார்த்தங்களை கொடுக்கிறான் என்று குறிப்பிடும் ‘பல ஸ்துதி சந்தி’ என்னும் இந்த சந்தியை, ஸ்ரீஜகன்னாததாசரின் நேரடி சிஷ்யரான கர்ஜிகி தாசப்ப என்பவர் இயற்றியிருக்கிறார்.

**ஹரிகதா2ம்ருதஸார ஸ்ரீம**
**த் கு3ருவர ஜக3ன்னாத2தாஸரு**
**கரதலாமலகவெனெ பேளித3 ஸகல ஸந்திக3ள |**
**பரம பண்டி3தமானிக3ளு ம**
**த்ஸரிசலெதெ3 கி3ச்சாகி3 தோருவ**
**த3ரஸிகரிகி3து3 தோரி பேளுவுத3ல்ல த4ரெயொளகெ3 ||1**

ஹரிகதாம்ருதஸாரத்தில், பகவத் மகிமைகளை தெள்ளத் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர் என்கிறார் ஸ்ரீத விட்டலர்.

ஸ்ரீமத் குருவரரான ஜகன்னாததாஸர்; கரதளாமலகவெனெ = உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல; பேளித = பகவந்தனின் மகிமைகளை விவரமாக தெரிவித்த; ஸகலஸந்திகள = 32 சந்திகளை; பரமபண்டிதமானிகளு = பண்டிதர் என்று அழைத்துக் கொள்பவர்கள்; மத்ஸரிஸலு = பொறாமைப்படுவதற்கு; எதெகிச்சாகி = இதயத்தில் தீ வைத்தாற்போல தோன்றும்; அரசிகரிகெ = அத்தகைய, பகவந்தனின் மகிமைகளை அறியாதவர்களுக்கு; தரெயொளகெ = இந்த பூமண்டலத்தில்; இது = இந்த கிரந்தத்தை; தோரிபேளுவவல்ல = விளக்கத்தக்கது அல்ல.

உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல, ஜகன்னாததாஸர், பகவத் தத்வத்தை இந்த கிரந்தத்தில் தெளிவாக விளக்கிக் காட்டியிருக்கிறார். ஆனால், நாமே சிறந்த பண்டிதர் என்று கர்வத்தில் இருக்கும் மக்களுக்கு, இந்த கிரந்தத்தில் என்ன இருக்கிறது? இதனால் என்ன புரிந்து விடப்போகிறது? என்று கேட்கும் துர்புத்தி கொண்டவர்களுக்கு இதில் உள்ள அற்புதமான விஷயங்கள், தத்வ ரகசியங்கள் ஆகியவை அவர்களுக்கு - இது இதயத்தில் வைக்கப்பட்ட தீ போல தெரியும். ஆகையால், இந்த கிரந்தத்தை அத்தகையவர்களுக்கு விளக்கத் தேவையில்லை. அதாவது, விஷயத்தை அறிய வேண்டும் என்னும் ஆர்வம் கொண்டவர்களுக்கே இதனை விளக்க வேண்டும். அப்போதே இந்த கிரந்தத்தை படித்ததன் ஸார்த்தகம் ஆகிறது என்று பொருள் கொள்ளலாம்.

**பா4மினி ஷட்பதி3ய ரூபத3**
**லீ மஹாத்பு4த காவ்யதா3தி3யொ**
**ளா மனோஹர தரதமாத்மக நாந்தி3பத்3யக3ள |**
**யாமயாமகெ படிஸுவவர ஸு**
**தா4மஸக2 கைபிடி3யலோஸுக3**
**ப்ரேமதி3ந்த3லி பேள்த3 கு3ருகாருண்யகேனெம்பே3 ||2**

இந்த பத்யங்களை படிப்பதால் உண்டாகும் பலன் என்ன என்பதை விளக்கியிருக்கிறார்.

பாமினிய ஷட்பதிய ரூபதல்லி; ஈ மகாத்புத காவ்யத = ஹரிகதாம்ருதசார என்னும் இந்த காவியத்தின்; ஆதியொளு = முதலாம் பாகத்தில்; ஆ மனோஹர = அற்புதமான; தரதமாத்மக = தாரதம்ய ஸ்வரூபமான; நாந்தி பத்யங்கள = மங்கள ரூபமான பத்யங்களை; யாமயாமக்கெ = எந்நேரமும்; படிஸுவவரன்னு = படிப்பவர்களை; ஸுதாமஸக = ஸ்ரீகிருஷ்ணன்; கைபிடியலோஸுக = கையைப் பிடித்து காப்பாற்றுவதற்காக; ப்ரேமதிந்தலி பேள்த = மிகவும் அன்புடன் இயற்றப்பட்ட ; குரு = குருகளின்; காருண்யகேனெம்பெ = கருணையை என்னவென்று சொல்வேன்.

ஸ்ரீஜகன்னாததாஸர், இந்த கிரந்தத்தை பாமினி ஷட்பதி என்னும் நுடியில் இயற்றி, இதன் முதலாம் சந்தியில் தாரதம்யத்தின்படி பரமாத்மனில் துவங்கி மனுஷ்யோத்தமர் வரைக்குமான அனைவரையும் வணங்கி பத்யங்களை இயற்றியிருக்கிறார். இது வெறும் அவரது நலனுக்காக அவர் இயற்றவில்லை. அந்த சந்தி பத்யங்களை படிப்பவர்களுக்கு, பரமாத்மன் அவர்களின் கைகளைப் பிடித்து காப்பாற்றுவான் என்னும் நோக்கத்துடனேயே இயற்றியிருக்கிறார். இப்படி அனைவரின் நலனுக்காக இதை இயற்றிய குருகளின் கருணையை என்னவென்று வர்ணிப்பேன்?.

**ஸாரவெந்த3ரெ ஹரிகதாம்ருத**
**ஸாரவெம்புது3தெ3ம்ம கு3ருவர**
**ஸாரித3ல்லதெ3 திளியதெ3னுத மஹேந்த்3ர நந்த3னன**
**ஸாரதி2ய ப3லகொண்டு3 ஸாரா**
**ஸாரகள நிர்ணயிஸி பேள்த3னு**
**ஸார நடெ3வ மஹாத்மரிகெ3 ஸம்ஸாரவெல்லிஹுதோ3 ||3**

சம்சார பந்தனத்தையே விடுவிப்பதாக இந்த ஹரிகதாம்ருதஸாரம் இருக்கிறது என்கிறார்.

ஸாரவெந்தரெ ஹரிகதாம்ருதஸாரவெம்ப = ஸாரம் என்றாலே அது ஹரிகதாம்ருதஸாரம் என்னும்; இது = இந்த கிரந்தத்தை; எம்ம குருவர = நம் குரு ஸ்ரேஷ்டர்; ஸாரிதல்லதெ = இயற்றியிருக்கிறார்; திளியதெனுத = அறிய வேண்டும் என்று; மஹேந்த்ர நந்தனன = இந்திர குமாரனான அர்ஜுனனின்; ஸாரதிய = சாரதியான ஸ்ரீகிருஷ்ணனின்; பலகொண்டு = அனுக்கிரக பலத்தினால்; ஸாரா ஸாரகள நிர்ணயிஸி பேள்த = இது ஸாரம்; இது அஸாரம் என்று நிர்ணயம் செய்து சொல்லியிருக்கும் இந்த கிரந்தத்தில் இருக்கும் சாரத்தை ; அனுஸார நடெவ = அனுசரித்து நடக்கும்; மஹாத்மரிகெ = மஹாத்மருக்கு, பக்தர்களுக்கு; ஸம்ஸாரவெல்லிஹதோ = சம்சார பயம் எங்கு இருக்கிறது?

அனைத்து சாஸ்திரங்களின் ஸாரம் என்றால் அது ஹரிகதாம்ருதஸாரமே ஆகும். உலகத்தில் ஸாரம் என்றால் ஹரிகதை என்னும் அமிர்தத்தின் சாரமே ஸாரம் என்று அறிந்து, அதே பெயரில் நம் குருவர்யார் இந்த கிரந்தத்தை ஸ்ரீகிருஷ்ணனின் அனுக்கிரக பலத்தினால் இயற்றியிருக்கிறாரே தவிர, இது வேறு யாருக்கும் சாத்தியமா? என்றைக்கும் சாத்தியமில்லை. இதில் சொல்லப்பட்டிருக்கும் சாராசாரத்தை அறிந்து, சாரத்தை அனுசரித்து நடக்கும் மஹாத்மருக்கு சம்சார பயம் எங்கு இருக்கிறது? இல்லை என்று அர்த்தம்.

**தா$^3$ஸவர்யர முக$^2$தி$^3$ நிந்து ர**
**மேஶனனு கீர்த்திஸுவ மனத$^3$பி$^4$**
**லாஷெயலி வர்ணாபி$^4$மானிக$^3$ளொலிது$^3$ பேளிஸித$^3$ |**
**ஈ ஸுலக்ஷண காவ்யதொ$^3$ளு யதி**
**ப்ராஸக$^3$ளிகெ$^3$ ப்ரயத்னவில்லதெ$^3$**
**லேஸுலேஸெனெ ஸ்ராவ்ய மாதுதெ$^3$ குருஹு கவிக$^3$ளிகெ ||4**

வர்ணாபிமானி தேவதைகள் மூலம் பகவந்தனே ஸ்ரீதாஸர் மூலமாக இயற்றியிருக்கும் இந்த கிரந்தம் அற்புதமானது என்கிறார் ஸ்ரீதவிட்டல தாஸர்.

தாஸவர்யர முகதி நிந்து = ஸ்ரீபரமாத்மன், தாஸார்யரின் முகத்தில் நின்று; ரமேஷனனு = ரமா பதியை; கீர்த்திஸுவ = அவனது மகிமையை வெளிப்படுத்த வேண்டும் என்னும்; மனதபிலாஷெயலி = ஆசையில்; வர்ணாபிமானி களொளித்து = அகார முதல் க்ஷகார வரையில் இருக்கும் வர்ணாபிமானி; தேவதைகளில் (வர்ண, ஸ்வர, ஷப்த அபிமானி தேவதைகள்) இருக்கும்படியான ஸ்ரீஹரியானவர்; பேளிஸித = இவ்வாறு கூறினான். இதனை அறிவது எப்படியெனில்; ஈ சுலக்ஷண காவ்யதொளு = அனைத்து நல்ல லட்சணங்களையும் கொண்ட இந்த காவியத்தில்; யதி ப்ராசகளிகெ = எதுகை, மோனைகளான சந்தங்களுக்கு; ப்ரயத்னவில்லதெ = எவ்வித சிறப்பு முயற்சிகளும் இல்லாமல்; லேஸுலேஸெனெ = மிகவும் அற்புதமாக; குருஹு = பரமாத்மனே சர்வோத்தமன் என்று அறிந்தவர்களுக்கு; கவிகளிகெ = பரமாத்மனின் த்வேஷிகளுக்கு; ஸ்ராவ்ய மாதுதெ = காதுகளுக்கு இனிமையாக இருக்குமா?.

ஸ்ரீஹரி, தாஸார்யரின் முகத்திலிருந்து தன் மகிமையை வெளிப்படுத்த வேண்டும் என்னும் விருப்பத்தால், தானே வர்ணாபிமானி தேவதைகளில் இருந்து இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். இதனை எப்படி அறியலாம் என்றால், எதுகை மோனை ஆகியவற்றைக் கொண்டு கவிதை எழுதவேண்டுமெனில் எவ்வளவோ கஷ்டப்பட வேண்டியிருக்கும். ஆனால், கொஞ்சம் கூட முயற்சியில்லாமல், இந்த கிரந்தத்தை இயற்றும்போது, எதுகை மோனை சந்தங்கள் தாமாகவே வந்ததே இதற்கு சாட்சியாகும். வர்ணாபிமானிகள் இந்த கிரந்தத்தை தாஸார்யர் இயற்றும்போது, நான் முன்னால், நீ முன்னால் என்று வந்து காத்திருந்தனர் என்று சொல்வதுண்டு. அந்த அர்த்தத்தையே இந்த பத்யம் குறிக்கிறது என்று அறியவேண்டும். இத்தகைய கிரந்தமானது, பகவத் பக்தர்களுக்கு மட்டுமே பிடிப்பதாக இருக்குமே தவிர, பகவத் த்வேஷிகளுக்கு இது என்றும் பிடிப்பதில்லை.

**ப்ராக்ருதோக்திக$^3$ளெந்து$^3$ ப$^3$ரிதெ$^3$ ம**
**ஹா க்ருதக்$^4$னரு ஜரிவரல்லதெ$^3$**
**ஸ்வீக்ருதவெ மாட$^3$த$^3$லெ பி$^3$டு$^3$வரெ ஸுஜனராத$^3$வரு |**
**ஸ்ரீக்ருதீபதியமல கு$^3$ணக$^3$ளு**
**ஈ க்ருதியொளுண்டாத$^3$ ப$^3$ளிகிது$^3$**
**ப்ராக்ருதவெ ஸம்ஸ்க்ருதத$^3$ ஸடக$^3$ரவேனு ஸுகு$^3$ணரிகெ$^3$ ||5**

ப்ராக்ருதோக்திகளெந்து = இந்த கிரந்தமானது, ப்ராக்ருத மொழியில் (பேசுமொழியில்) எழுதப்பட்டுள்ளது என்று; பரிதெ = எழுதாமல் (அல்லது இந்த கிரந்தத்தை படிக்காமல்); மஹா க்ருதக்னரு = இந்த கிரந்தத்தால் பயன் பெறுபவர்கள்; ஜரிவரல்லதெ = இதனை திட்டுவார்கள்; ஸுஜனராதவரு = ஸஜ்ஜனர்கள்; ஸ்வீக்ருதவ மாடதெலெ பிடுவரெ? = ஏற்றுக்கொள்ளாமல் விடுவார்களா?; ஸ்ரீக்ருதீபதிய = க்ருதி நாமக லட்சுமியின் பதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீஹரி; அமலகுணகளு = தூய்மையான (தோஷங்கள் அற்ற) குணங்கள்; ஈ க்ருதியொளுண்டாத பளிக = இந்த கிரந்தத்தில் இருந்தபிறகு; இது = இந்த கிரந்தமானது; ப்ராக்ருதவே? = ப்ராக்ருதமா? (பேசு மொழி என்று சொல்லலாமா?); ஸம்ஸ்கிருதத ஸடகரவேனு = சம்ஸ்கிருதமே சிறந்தது என்பது ஏன்?; ஸுகுணரிகெ - கற்றறிந்தவர்களுக்கு?.

பகவந்தனின் விஷயத்தை சொல்வதான இந்த கன்னட கிரந்தமும் அப்ராக்ருதமே என்கிறார் ஸ்ரீத விட்டல தாஸர்.

இந்த கிரந்தமானது, ப்ராக்ருத கிரந்தம் என்று திட்டும், மஹா க்ருதக்னர்கள் (இந்த கிரந்தத்தால் பயன் பெற்றவர்கள்) சிலர் இருந்தாலும், ஸுஜனர்கள் இதனை ஏற்றுக் கொள்ளாமல் விடமாட்டார்கள். அப்ராக்ருதமான பரமாத்மனை வர்ணிக்கும் இந்த கிரந்தத்தை ப்ராக்ருதம் என்று சொல்லமுடியுமா? இதுவே சம்ஸ்கிருதம். பகவத் குணங்களை வர்ணிக்காத கிரந்தம் சம்ஸ்கிருதமானாலும் அதுவே ப்ராக்ருதம். எவ்வித பிரச்னைகளும் இல்லாத சஜ்ஜனர்கள் ஸம்ஸ்கிருதமே சிறந்தது ஏன் சொல்கிறார்கள்?.

**ஶ்ருதிகெ3 ஶோப4னவாக3தொ3டெ3 ஜட**
**மதிகெ3 மங்க3லவீயதொ3டெ3 ஶ்ருதி**
**ஸ்ம்ருதிகெ3 ஸம்மதவல்லதி3த்3தொ3டெ3 நம்ம கு3ருராய |**
**மதிஸி மத்4வாக3ம பயோப்4தி3ய**
**க்ஷிதிகெ3 தோரித3 பி3ரம்மவித்4யா**
**ரதரிகீ3ப்ஸித ஹரிகதா2ம்ருதஸார ஸொக3யிஸதெ3 ||6**

ஸ்ருதிகெ ஷோபனவாகதொடெ = காதுக்கு கேட்பதற்கு இதமாக இல்லாவிட்டால்; ஜடமதிகெ = மந்த புத்தி உள்ளவர்களுக்கு; மங்களவீயதொடெ = மங்களகரமான ஞானத்தைக் கொடுக்காவிட்டால்; ஸ்ருதி ஸ்ம்ருதிகெ ஸம்மதவல்லதித்தொடெ = ஸ்ருதி, ஸ்ம்ருதி வாக்கியங்களுக்கு சம்மதமாக இல்லாமல் இருந்தால்; அதாவது அதற்கு எதிராக இருந்தால்; நம்ம குருராய = நம் குருவான ஸ்ரீஜகன்னாததாஸர்; மத்வாகம பயோப்திய = மத்வ சாஸ்திர என்னும் பாற்கடலை; மதிஸி = கடைந்து; ஹரிகதாம்ருதசார = ஹரிகதெ என்னும் அமிர்தத்தை; க்ஷிதிகெ தோரித = பூமிக்கு கொடுத்த; பிரம்மவித்யாரதரிகெ = பிரம்மஞானம் பெற வேண்டும் என்று விரும்புபவர்களுக்கு; ஈப்ஸித = அவர்களுக்கு விரும்புவதாக இருக்கும் பகவத் பக்தர்கள் இதனை மரியாதை கொடுப்பதாலேயே மேற்கூறிய தோஷங்கள் இல்லை என்பது கருத்து; ஹரிகதாம்ருதஸார ஸொகயிஸதெ = அவர்களுக்கு ஹரிகதம்ருதஸாரம் எப்படி பிடிக்காமல் போகும்?.

இந்த ஹரிகதாம்ருதஸாரத்தில் எவ்வித தோஷங்களும் இல்லை என்று வலியுறுத்துகிறார் ஸ்ரீத விட்டல தாஸர்.

துர்புத்தி கொண்ட சிலர் கூறுவதாக சில எதிர்மறை கருத்துக்களை சொல்லி, இந்த கிரந்தத்தின் சிறப்பினை விளக்குகிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர். சில க்ருதக்ஞர்கள் (இதனால் பயன்பெறுபவர்கள்), இந்த கிரந்தமானது: காதுக்கு கேட்பதற்கு இனிமையாக இல்லை என்றும், மந்தமதி மக்களை காப்பாற்றாது என்றும், ஸ்ரீமதாசார்யரின் வாக்கியங்களுக்கும், ஸ்ருதி, ஸ்ம்ருதிகளுக்கு எதிராக இருக்கிறது என்றும் தூஷிப்பர். அதுவே உண்மையானால்,

நம் குருவர்யார் செய்த கிரந்தத்தை, பிரம்மஞானிகளான மஹனீயர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். மற்றும் தாஸார்யர், மத்வ சாஸ்திரம் என்னும் பாற்கடலைக் கடைந்து இந்த ஹரிகதாம்ருதஸாரம் என்னும் அமிர்தத்தை பெற்றிருக்கிறார் என்று அறிந்து இதனை மிகவும் மரியாதையுடன் ஏற்றுக் கொள்வர். பெரியவர்கள் ஏற்றுக் கொள்வதாலேயே, இந்த கிரந்தத்தில் மேற்கூறிய தோஷங்கள் எதுவும் இல்லை என்பது கருத்து.

**ப$^4$க்திவாத$^3$தி$^3$ பேள்த$^3$ரெம்ப$^3$ ப்ர**
**ஸக்தி ஸல்லது$^3$ காவ்யதொ$^3$ளு புன**
**ருக்தி ஶுஷ்க ஸமாஸ பத$^3$ வ்யத்யாஸ மொத$^3$லாத$^3$ |**
**யுக்தி ஶாஸ்திரவிருத்$^3$த$^4$ ஶப்$^4$த$^3$ வி**
**ப$^4$க்தி விஷமக$^3$ளிரலு ஜீவ**
**ன் முக்தயோக$^3$விதெ$^3$ந்து$^3$ ஸிரிமத$^3$னந்த மெச்சுவனெ ||7**

பக்திவாததி - ஶ்ரீஹரி வாயு குருகளில் இருக்கும்படியான அபாரமான பக்தி பாவத்துடன் இருப்பதால்; பேள்தரெம்ப - இந்த கிரந்தமானது போற்றப்படவேண்டியது என்று சொல்வது; ப்ரசக்தி ஸல்லது - சரியல்ல; காவ்யதொளு = இந்த ஹரிகதாம்ருதசார என்னும் காவியத்தில்; புனருக்தி = சொன்னதையே திரும்ப சொல்லுதல்; ஷுஷ்க ஸமாஸ = 2-3 பதங்களை ஒன்றாக சேர்க்கும்போது சந்தியை சரியாக சேர்க்காமல் இருத்தல்; பதவ்யத்யாஸ மொதலாத = வரிகளில் வேறுபாடு மற்றும்; யுக்தி = சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ரகசியங்கள்; சாஸ்திர விருத்த = சாஸ்திரங்களுக்கு எதிரான கருத்துகள் இருத்தல்; விபக்தி விஷமகளிரலு = பக்தி இல்லாத விஷயங்கள் இருத்தல்; ஜீவன் முக்தி யோகவிதெந்து = இந்த கிரந்தத்தை கேட்டு, படிப்பதால், ஜீவன் முக்தியை அடைகிறான் என்று; ஷிரிமதனந்த = ஶ்ரீபரமாத்மன்; மெச்சுவனெ = மெச்சுவானா?

இந்த ஹரிகதாம்ருதஸாரத்தில் எவ்வித தோஷங்களும் இல்லை என்பதை மேலும் இங்கு வலியுறுத்துகிறார் ஶ்ரீத விட்டல தாஸர்.

காவியங்களை இயற்றும்போது, அதில் சொன்ன விஷயங்களையே திரும்பத் திரும்ப சொல்லுதல், 2-3 பதங்களை ஒன்றாக சேர்க்கும்போது சந்தியை சரியாக சேர்க்காமல் இருத்தல், முக்தி சாஸ்திரங்களுக்கு எதிரான கருத்துகள் இருத்தல், இவை அனைத்தும் தோஷங்கள் எனப்படுகின்றன.

ஸ்ரீபகவன் மகிமையை விளக்கும் கிரந்தமான இந்த காவியத்தில் அந்த தோஷங்கள் எதுவும் இல்லை. ஸ்ரீஹரியே வர்ணாபிமானி தேவதைகளில் இருந்து, இவரின் வாயிலிருந்து இதை இயற்றியிருப்பதால், அத்தகைய தோஷங்கள் வருவது சாத்தியமே இல்லை என்று நிச்சயமாக சொல்ல முடியும்.

இதை எனக்கிருக்கும் குரு பக்தியினால் சொல்கிறேன் என்று சொல்லக்கூடாது. வர்ணாபிமானி தேவதைகள், நான் முன்னே நீ முன்னே என்று போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள் என்று தாஸார்யரின் வாழ்க்கை வரலாற்றிலிருந்து அறிகிறோம். ஆகையால், இது வெறும் ஸ்துதி என்று மட்டும் சொல்லக்கூடாது என்பது கருத்து.

**ஆஷுகவிகுல கல்பதரு தி**
**க்தே$^{3}$ஷவரியலு ரங்க$^{3}$னொலுமெய**
**தாஸகூடஸ்தரிகெரகி$^{3}$ நா பே$^{3}$டி$^{3}$கொம்பு$^{3}$வேனு |**
**ஈ ஸுலக்ஷண ஹரிகதா$^{2}$ம்ருத**
**மீஸலளியதெ$^{3}$ ஸார தீ$^{3}$ர்க்க$^{4}$**
**த்$^{4}$வேஷிக$^{3}$ளி கெ$^{3}$ரெயத$^{3}$லெ ஸலிஸுவுதெ$^{3}$ன்ன பி$^{3}$ன்னபவ ||8**

ஆஷுகவி = மிகவும் விரைவாக கவிதை புனையும் திறன் கொண்டவர்; குல = வம்சத்திற்கு; கல்பதரு = கல்பதரு எனப்படும்; ரங்கனொலிமெய = ரங்கவிட்டலனின் அனுக்கிரகம் பெற்றிருப்பதால் ரங்கனொலித ஜகன்னாததாஸர் என்று; திக்தேஷவரியலு = திக்தேசங்களில் (அனைத்து இடங்களிலும்) புகழ்பெற்றிருக்கிறார்; ஈ சுலக்ஷண ஹரிகதாம்ருத = மஹனீயரால் இயற்றப்பட்ட இந்த சுலக்ஷணமான ஹரிகதெ என்னும் அம்ருதத்தின் ; ஸார = ஸாரத்தை; மீசலளியதெ = பகவத்

பக்தர்களுக்கென்று தயார் செய்து வைத்திருப்பதால், இதனை பாவிகளுக்குக் கொடுத்து நாசப்படுத்தாமல் இருந்து; தீர்க்கத்வேஷிகளுக்கு = பரமாத்மனிடமும், பரமாத்மனின் பக்தர்களிடமும் தீர்க்க த்வேஷத்தை செய்யும் தமோயோக்யருக்கு; எரியதலெ = உபதேசம் செய்யாமல் (அப்படி செய்வதால் இதன் ஸாரம் கெட்டுப் போகிறது என்று பொருள்); பாலிஸுவது = காக்க வேண்டும்; ஸலிஸுவுது என்ன பின்னபவ = இந்த என் வேண்டுகோளினை; தாசகூடஸ்தரிகெ = பகவத் தாஸ வர்க்கத்தவருக்கு; எரகி = வணங்கி; நா பேடிகொம்பேனு = நான் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த ஹரிகதாம்ருதஸாரத்தினை த்வேஷிகளுக்கு தெரியப் படுத்தக் கூடாது என்று கூறுகிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

பகவத் பக்தர்களான ஹரிதாஸ கூடத்தவர்களுக்கு எனது ஒரு வேண்டுகோள். அது என்னவெனில்: ரங்கனொலித ஜகன்னாததாஸார்யர் ஆஷுகவிகுல கல்பவ்ருக்ஷ என்று அனைத்து இடங்களிலும் புகழ்பெற்றிருக்கிறார். ஸ்ரீஹரியின் நைவேத்தியத்திற்காக தயார் செய்து வைத்திருக்கும் சமையலை, பூனை முதலானவை தொட்டு விடாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டியது எவ்வளவு அவசியமோ, அப்படியே மஹனீயரான நம் தாஸார்யர் இயற்றியிருக்கும், இந்த சுலக்ஷணமான ஹரிகதாம்ருதஸாரம் என்னும் சாரத்தை, உண்பதற்கு தகுதியில்லாத த்வேஷிகளுக்கு தெரியப்படுத்தி, இதனை கெடுக்கக்கூடாது என்று வேண்டிக் கொள்கிறேன். தாஸகூடத்தவர்கள் இதனை நடத்திக் கொடுக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

**ப்ராஸக$^{3}$ள பொந்தி$^{3}$ஸதெ$^{3}$ ஶப்$^{4}$த$^{3}$**
**ஸ்லேஷக$^{3}$ள ஶோதி$^{3}$ஸதெ$^{3}$ தீ$^{3}$ர்க்க$^{4}$**
**ஹ்ராஸக$^{3}$ள ஸல்லிஸதெ$^{3}$ ஷட்பதி$^{3}$க$^{3}$திகெ$^{3}$ நில்லிஸதெ$^{3}$ |**
**தூ$^{3}$ஷகரு தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ மாடு$^{3}$வ**
**தூ$^{3}$ஷணவெ பூ$^{4}$ஷணவு எந்து$^{3}$ உப**
**தே$^{3}$ஶக$^{3}$ம்யவு ஹரிகதா$^{2}$ம்ருதஸார ஸாத்$^{3}$யரிகெ$^{3}$ ||9**

ப்ராஸகள பொந்திஸதெ = ஒவ்வொரு வரியின் இரண்டாம் எழுத்துக்கு ப்ராஸ என்று பெயர். இது ஷட்பதி ஆனதால், ஆறு வரிகள் உண்டு. முதலாம் வரியின் இரண்டாம் எழுத்து எது இருக்கிறதோ, அதுவே மற்ற வரிகளிலும் இருக்க வேண்டும். அப்படியே தாஸார்யர் இயற்றியிருந்தாலும், அதனை படிப்பவர்கள் அந்த ப்ராஸத்திற்கு ஏற்றவாறு இந்த கிரந்தத்தைப் படிக்காமல்,

ஷப்த ஸ்லேஷகள ஷோதிஸதெ = பொருள் கொள்ளும்போது, எந்த சொல்லில் எந்த விசேஷார்த்தம் இருக்கிறது என்பதை பார்க்காமல்,

தீர்க்க ஹ்ராஸகள ஸல்லிஸதெ = எங்கு எழுத்தை நீட்ட வேண்டுமோ (நெடில்), எங்கு குறைக்க வேண்டுமோ (குறில்) அதனை அறியாமல் நெடில் வரவேண்டிய இடத்தில் குறிலையும், குறில் வரவேண்டிய இடத்தில் நெடிலையும் வைத்தவாறு,

ஷட்பதிகதிகெ நில்லிஸதெ = ஆறு வரிகள் உள்ள இந்த பத்யத்தில் எந்தெந்த சொல்லினை எங்கு நிறுத்த வேண்டும் என்பதை அறியாமல், அப்படி நிறுத்தாமல் படித்தவாறு

தூஷகரு தினதினதி மாடுவ தூஷணவெ = இதில் ப்ராஸ இல்லை, எந்த வரியில் எவ்வளவு எழுத்துக்கள் இருக்க வேண்டுமோ அவ்வளவு எழுத்துக்கள் இல்லை என்று செய்யும் தூஷணங்களே

பூஷணகளெந்து = ஆபரணங்கள் என்று; ஸாத்யரிகெ = இதை படிக்கும் யோக்யரான சஜ்ஜனர்களுக்கு ஹரிகதாம்ருதஸாரம், உபதேஷகம்யவு = உபதேசத்தினால் அறிய வேண்டும்.

இந்த கிரந்தத்தினை வெறுக்கும் சிலர் செய்யும் தூஷணங்களையே, பூஷணங்களாக கருத வேண்டும் என்று இங்கு சொல்கிறார் ஸ்ரீஜீத விட்டல தாஸர்.

தாஸார்யர் இயற்றியிருக்கும் பத்யங்களில் ப்ராஸ முதலான தோஷங்கள் இல்லையென்றாலும், தாம் அதை படிக்கும்போது குறில், நெடில் போன்ற வித்தியாசங்களை அறியாமல்,

நிறுத்தவேண்டிய இடங்களில் பதங்களை நிறுத்தாமல், தமக்கு தாளத்திற்கு சரியாகுமாறு ஆலாபனை செய்தவாறு, ப்ராஸங்களை விட்டு பாடியவாறு இறுதியில் இந்த பதத்தில் ப்ராஸ இல்லை என்று சொல்லும் சம்பிரதாயம் இருக்கிறது.

ஹரிகதாம்ருதஸாரம் பாமினி ஷட்பதியில் இயற்றப் பட்டிருக்கிறது. பாமினி ஷட்பதியின் லட்சணம் - 1,2 இந்த இரு வரிகளில் 14 மாத்திரைகள், 3ம் வரியில் 23 மாத்திரைகள் இருக்க வேண்டும். இதில் நெடில் எழுத்துக்களுக்கு 2 மாத்திரைகள் என்றும் குறிலுக்கு 1 மாத்திரை என்றும் அறியவேண்டும். இப்படி முதல் மூன்று வரிகளுக்கு சொல்லப்படும் விதியே, இரண்டாம் மூன்று வரிகளுக்கும் பொருந்தும்.

தாஸார்யர், எவ்வித தோஷங்களும் இன்றி இந்த கிரந்தத்தை இயற்றியிருந்தாலும், இதை படிப்பவர்கள் சரியாகப் படிக்காமல் பத்யத்தையே தூஷிக்கின்றனர்.

நம் தோஷத்தை அறியாமல், தோஷகர்கள் காவியத்தை தூஷித்தால், அது கிரந்தத்திற்கு பூஷணம் என்றே பாவிக்க வேண்டும். ஹரிகதாம்ருதசாரத்தை படிப்பவர்கள் இதை அறிந்து படிப்பதே இந்த கிரந்தத்தின் லட்சணம் என்பது கருத்து.

**அஶ்ருதாக3ம பா4வவிதர ப**
**ரிஶ்ரமவு ப3ல்லவரிகா3ன**
**ந்த3 ஸ்ருக3ள மளெக3ரிஸி மைமரெஸுவ சமத்க்ருதியு |**
**மிஸ்ரரிகெ3 மரெமாடி3 தி3விஜர**
**ஜஸ்ரத3லி காய்தி3ப்பரித3ரொள**
**பஶ்ருதிக3ளை தப்புவெ நிஜப4க்தியுள்ளரிகெ3 ||10**

அஸ்ருதாகம பாவவு = காதில் இதுவரை கேட்டிராத அபூர்வமான சாஸ்திர அர்த்தங்களால் ஆனது இந்த கிரந்தம்; இதர பரிஸ்ரமவு = இந்த கிரந்தத்தை பரிசீலனை செய்வதால்; பல்லவரிகெ = ஞானிகளுக்கு; ஆனந்தாஸ்ருகளு = ஆனந்தக்கண்ணீர் வந்து; மைமரெஸுவ = மெய் மறந்து; தனக்கு வந்த நிலையை தான்

அறியாதவாறு இருக்கும்; சமத்க்ருதியு = சமத்காரங்கள் ஒவ்வொரு பதத்திலும் இருக்கின்றன. ஆனால் அந்த சமத்காரங்கள் சாதாரணமாக அனைவரும் அறிவதில்லை. ; திவிஜரு = தேவதைகள்; மிஸ்ரரிகெ = மத்யமாதிகாரிகளுக்கு; மரெமாடி = அந்த சமத்காரங்கள் தெரியாதவாறு மறைத்து; அஜஸ்ரதலி = எப்போதும்; காய்திப்பரு = காக்கிறார்; ஆனாலும், நிஜபக்தியுள்ளவரிகெ = உண்மையான பக்தர்களுக்கு; இதரொளு = இதில் இருக்கும்; உபஸ்ரிதிகளு = மறைந்திருக்கும் சாஸ்திர அர்த்தங்கள்; தப்புவதெ = தெரியாமல் இருக்குமா?; நன்றாக தெரியும் என்று அர்த்தம்.

ஹரிகதாம்ருதஸார கிரந்தத்தின் மகிமைகளை ஞானிகள் கண்டிப்பாக அறிந்திருக்கிறார்கள் என்று தீர்மானமாக சொல்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

இந்த கிரந்தம், ஸ்ரீவாதிராஜ, ஸ்ரீவியாசராஜ ஸ்வாமிகள் ஆகிய மகானுபாவர்களிடமிருந்து கனவில் பெற்ற ஆணையாலும், அபரோக்ஷத்தாலும், தாஸார்யரின் முகத்திலிருந்து வந்த காவியமானதால், இதுவரை கேட்டிராத அபூர்வமான சாஸ்திரார்த்தங்களைக் கொண்டிருக்கிறது. ஞானிகள் இதனை படிக்கும்போது, ஆனந்தக் கண்ணீர் வடித்தவாறு, மெய்மறந்து சுகப்படும் அதிசயமும் உண்டாகிறது. ஆனால், இத்தகைய ஆனந்தம், குரு முகத்தினால் படித்து, த்ருட பக்தர்களுக்கு மட்டுமே ஆகுமே தவிர, மத்யமாதிகாரிகளுக்கு இந்த அதிசயங்கள் தெரியாதவாறு தேவதைகள் எப்போதும் இந்த அர்த்தங்களை மறைத்தே வைத்திருக்கின்றனர் என்பது கருத்து. ஆகையால், குருபரம்பரையாக உபதேசிக்கப்பட்டு, ஹரி குரு பக்தியுக்தரான மகாத்மருக்கு இதில் இருக்கும் சாஸ்திர அர்த்தங்கள் தெரியாமல் இருக்குமா? சாதாரண மக்கள் இதன் மகிமையை நன்றாக அறியாமல் இருந்தாலும், ஞானிகள் அறியாமல் இருப்பார்களா என்பது கருத்து.

**நிச்ச நிஜஜன மெச்செ நெலெகொ**
**ண்டச்ச பா4க்3யவு பெச்செ பெர்மெயு**
**கெச்செ கேள்வரு மெச்சி மலமன முச்சலெந்தெ3னுத |**
**உச்சவிக3ளிகெ3 பொச்சபொஸதெ3ன**
**லுச்சரிஸிதி3 ஸுச்சரித்ரெய**
**நுச்சரிஸெ ஸிரிவத்ஸலாஞ்சன மெச்சலேனரிது3 ||11**

நிச்ச = நீசரான (அல்லது நிச்சயமாக); நிஜஜன = தம் உற்றார் உறவினர்; மெச்செ = புகழ; நெலகொண்ட = ஸ்திரமாக இருக்கும்; அச்சபாக்யவு = சுத்தமான ஐஸ்வர்யம்; பெச்செ பெர்மெயு = அதனால் உண்டாகும் அதிகமான திருப்தியானது; மனமெச்சி = மனதிற்கு நன்றாக தெரியும்படி; கெச்ச கேளி = அதன் குண தோஷங்களை நன்றாக சொல்லி அறிந்து, அதில் தெரியும் சுகங்கள் அனைத்தும் துக்கம் கலந்தது, தற்காலிகமானது என்று அறிந்து; மலமன = காம்ய பலன்களை விரும்புபவர்கள், அஞ்ஞானத்தை பெற்றிருப்பதால், அத்தகைய அஞ்ஞானம் போகட்டும் என்று; உச்சவிகளிகெ = உற்சாகம் (விருப்பம்) உள்ளவர்களுக்கு ; பொச்சபொஸதெனலு = அதி நூதனமானது என்று; உச்சரிஸித = தாஸார்யர் இயற்றிய; ஈ ஸுச்சரித்ரெய = இந்த உத்தமமான பகவத் தத்வத்தை; உச்சரிஸெ = படித்தால், கேட்டால்; ஷிரிவத்ஸலாஞ்சன = ஸ்ரீவத்ஸ என்னும் பெயருள்ள ஸ்ரீஹரி; மெச்சலேனரிது = மெச்சுவதில் என்ன வியப்பு?.

ஸ்ரீஹரிகதாம்ருதஸார கிரந்தத்தினை படிப்பவர்களை ஸ்ரீஹரியே மெச்சுகிறார் என்று வியக்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

நீசரான மக்கள் தம்மிடம் இருக்கும் செல்வம், அதிலிருந்து வரும் திருப்தியை நிரந்தரம் என்று நம்பி மகிழ்ச்சியுடன் இருப்பவர்களைப் பார்த்து சிலர் அதைப்போலவே நாமும் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகின்றனர். ஆனால், அதன் உண்மையான அர்த்தத்தை உணர்ந்து, அந்த சுகம் தற்காலிகமானதே, துக்கம் கலந்தது என்று நிச்சய ஞானத்தைப் பெற்று, இதனை விரும்புவது அஞ்ஞானம் என்று அறிந்து, அத்தகைய அஞ்ஞானம் பரிகாரம் ஆகவேண்டும் என்னும்

உற்சாகம் யாருக்கு பிறக்கிறதோ, அவருக்காகவே இந்த திவ்ய சாஸ்திரார்த்தங்களைக் கொண்ட கிரந்தத்தை தாஸார்யர் இயற்றியிருக்கிறார். இதனை சிரத்தா பக்தியுடன் குரு முகத்தினால் கேட்டு, படிப்பவர்களை ஶ்ரீஹரி மெச்சுவதில் என்ன வியப்பு? கண்டிப்பாக மெச்சுகிறான் என்பது கருத்து.

**ஸாது$^{4}$ஸபெ$^{3}$யொளு மெரெயெ தத்வஸு**
**போ$^{4}$த$^{3}$ வ்ருஷ்டியக$^{3}$ரெயெ காம**
**க்ரோதபீ$^{4}$ஜவ ஹுரியெ களரெதெ$^{3}$ பி$^{3}$ரியெ கரகரிய**
**வாதி$^{4}$க$^{3}$ள பல்முரியெ பரம வி**
**நோதி$^{3}$க$^{3}$ள மைமரெயலோஸுக$^{3}$**
**ஹாதிதோரித$^{3}$ ஹிரிய ப$^{3}$ஹுசாதுர்ய ஹொஸபரிய ||12**

ஸாதுஸபெயொளு = சஜ்ஜனர்களின் சபையில்; மெரெயெ = இருப்பதற்கும்; ஸுபோத வ்ருஷ்டிய = திவ்ய ஞானாம்ருதம் என்னும் மழையை ; கரெயெ = அழைப்பதற்கும்; அதாவது, மழை பெய்வதைப் போல, ஞானாம்ருதம் பெறுவதற்கு; காம க்ரோத பீஜவ ஹுரியெ = காம, கிரோத என்னும் விதையிலிருந்தே கோரமான நரகத்திற்கு சாதனமான மரம் பிறப்பதால், அதிலிருந்து வரும் விதை எப்படி மறுபடி உற்பத்திற்கு காரணமாகிறதோ, அப்படியே நரகாதிகளுக்கு சாதனமான காம கிரோதம் என்னும் விதையை வறுக்கிறது (மீண்டும் முளைக்காமல் அழிக்கிறது). ; களரெதெபிரியெ = பாபிகள் இதனைக் கேட்கும்போதே அவர்களின் இதயம் நொறுங்குகிறது. ; கரகரியவாதிகள = அப்படியும் பிடிவாதத்துடன் வாதிக்கும் பகவத் த்வேஷிகளின்; பல்முரியெ = பல் முறிப்பதற்காக. அதாவது, பல் இல்லாத பாம்பு எப்படி, தன் கோபத்தை விஷம் மூலமாக காட்ட முடியாதோ, அப்படி துர்ஜனர்களின் வாயை மூடுவதற்காக என்று அர்த்தம். ; பரமவினோதிகள = இதனை படிக்க, கேட்க வேண்டும் என்று மிகவும் உற்சாகம் / விருப்பம் உள்ள பக்தர்களுக்கு, மகிழ்ச்சியில் மெய் மறக்குமாறு செய்வதற்காகவும்; ஹிரிய = நம் குருகளான ஶ்ரீ ஜகன்னாததாஸர் ; பஹுசாதுர்ய = மிகவும் சாதுர்யத்துடன்; ஹொஸபரிய = அதி நவீனமான இந்த கிரந்தத்தை இயற்றி;

ஹாதிதோரித = ஸ்ரீஹரியை அடையும் சன்மார்க்கத்தை காட்டினார்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தை இயற்றிய ஸ்ரீஜகன்னாததாஸரின் மகிமையை இங்கு போற்றுகிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

இந்த கிரந்தம் சாமான்யமானதல்ல. சஜ்ஜனர்களின் சபையில் இதனை வாதத்திற்கு வைத்தால், மற்ற அனைத்து கிரந்தங்களையும் கீழே வைத்து நான் மேலே இருப்பேன் என்று இருக்கிறது. அந்த சபையின் நடுவில் ஞானாம்ருத மழையைப் பொழிந்து, மக்களுக்கு பிரம்மானந்தத்தை கொடுக்கிறது. காம கிரோதம் என்னும் விதையை வறுத்து (அழித்து) அவை முளைக்காமல் பார்த்துக் கொள்கிறது. பாபிகளான பகவத் த்வேஷர்கள் இதனை கேட்கும்போதே இதயம் நொறுங்குகிறது. ஆனாலும், பிடிவாதத்தால் இதனை வென்றுவிட வேண்டும் என்று சொல்லி குதர்த்தகமாக வாதிடுபவர்களை, பதில் இல்லாமல் செய்கிறது. மிகவும் உற்சாகத்துடன் இதை கேட்பது, படிப்பது ஆகியவற்றை செய்யும் பகவத் பக்தர்களின் மனதில் உற்சாகம் பிறக்கச் செய்கிறது. இத்தகைய நற்குணங்களைக் கொண்ட கிரந்தத்தை இயற்ற வேண்டும் என்னும் நோக்கத்தினாலேயே நம் குருகளான ஸ்ரீஜகன்னாத தாஸார்யர், மிகவும் புதியதான சாஸ்திரார்த்த விஷயங்களால் இதை இயற்றி, சன்மார்க்கத்தை காட்டியிருக்கிறார்.

**வ்யாஸதீர்த்தர ஒலவோ விட்டலோ**
**பாஸக ப்ரபு$^3$வர்ய புரந்த$^3$ர**
**தாஸராயர த$^3$யவோ திளியது$^3$ ஓதி$^3$ கேளத$^3$லெ |**
**கேஶவன கு$^3$ணமணிக$^3$ளனு ப்ரா**
**ணேஶக$^3$ர்ப்பிஸி வாதி$^3$ராஜர**
**கோஶகொப்புவ ஹரிகதாம்ருதஸார பேளித$^3$ரு ||13**

வியாஸதீர்த்தர ஒலவோ = ஸ்ரீவியாஸராஜ ஸ்வாமிகளின் பரமானுக்கிரகமோ; ப்ரபுவர்ய = முதலில் மிகவும் செல்வந்தராக இருந்து, பின்னர் வைராக்கியத்தினால் தாஸத்வத்தை பின்பற்றிய;

விடலோபாஸக புரந்தரதாசர தயவோ = விட்டலனின் உபாசகரான ஸ்ரீபுரந்தரதாசரின் கருணையோ; ஓதிகேளதலெ = குருவிடமிருந்து இந்த கிரந்தத்தைப் படித்து, கேட்காமலேயே; திளியது = இந்த கிரந்தமானது புரிவதில்லை (விஷயங்கள் புரிவதில்லை). ; கேஷவன குணமணிகளனு = பரமாத்மனின் குணங்கள் என்னும் மாணிக்கங்களை ; ப்ராணேஷகர்ப்பிஸி = பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனான ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பித்து; வாதிராஜர = ருஜுகணத்தவர்களில் ஒருவர் என்றும், அடுத்த கல்பத்தில் வாயு பதவிக்கு வரப்போகிறவர் என்று பெயர் பெற்ற; வாதிராஜர = ஸ்ரீவாதிராஜரின்; கோஷகொப்புவ = அவர் இயற்றிய கிரந்தங்களுடன், இந்த கிரந்தமும் அவருக்கு சம்மதமானதே என்று சொல்வதற்கு தகுதியான; ஹரிகதாம்ருதசார பேளிதரு = இந்த கிரந்தத்தை இயற்றினார்.

இந்த ஹரிகதாம்ருதஸாரமானது ஸ்ரீவாதிராஜரின் கிரந்தங்களைப் போலவே இருக்கிறது என்று புகழ்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

ஒரு தக்க குருவின் முகத்திலிருந்து பாடமாக / உபதேசமாக இந்த கிரந்தத்தை கேட்டாலே, இது புரிகிறது. இல்லையேல் புரிவதில்லை. ஸ்ரீபரமாத்மனின் குணங்கள் என்னும் ரத்தினங்களை கோர்த்திருப்பதால், இந்த கிரந்தத்தை இயற்றிய மகிமையானது, ஸ்ரீவியாசராயரின் அருளோ, புரந்தரதாசரின் கருணையோ, அல்லது ஸ்ரீவாதிராஜரே இவரில் நின்று இயற்றியதோ எனக்குத் தெரியவில்லை. ஆனால், ஸ்ரீவாதிராஜர் இயற்றிய கிரந்தங்கள் எப்படி இருக்குமோ, உலகப் புகழ்பெற்றதோ, அப்படியே நற்சாஸ்திரங்களை தொகுத்திருப்பதில், இந்த கிரந்தமும் உலகப் புகழ் பெறும் என்று நிச்சயமாக சொல்கிறோம்.

**ஹரிகதாம்ருதஸார நவரஸ**
**ப$^{4}$ரித பஹுக$^{3}$ம்பீ$^{4}$ர ரத்னா**
**கர ருசிர ஶ்ருங்கா$^{3}$ர ஸாலங்கார விஸ்தார |**
**ஸரஸ நர கண்டீ$^{2}$ரவாசா**
**ர்யர ஜனித ஸுகுமார ஸாத்$^{1}$வீ**
**கரிகெ$^{3}$ பரமோதா$^{3}$ர மாடி$^{3}$த$^{3}$ மரெயது$^{3}$பகார ||14**

ஹரிகதாம்ருதசார = இந்த ஹரிகதாம்ருத ஸாரம் என்னும் கிரந்தம்; நவரஸபரித = வீரம், கருணை முதலான ஒன்பது ரஸங்களால் நிரம்பிய; பஹு கம்பீர = மிகவும் ஆழமான; ரத்னாகர = கடலாக இருக்கிறது; இது வெறும் பகவந்தனின் மகிமையாக இருப்பதால், இதில் அலங்காரமும், ஸ்ருங்கார ரசமும் இருப்பதற்கில்லை என்பதாலும், காவிய லட்சணங்கள் இல்லை என்று சொல்லக்கூடாது என்கிறார். ; ருசிர = மனோகரமான; ஸ்ருங்கார ரஸாலங்கார விஸ்தார = ஸ்ருங்கார ரஸத்தை அங்கங்கு சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு சொல்லியிருக்கிறார். அலங்காரத்தை விஸ்தாரமாக சொல்லியிருக்கிறார். ; ஸரஸ = இத்தகைய ரசங்களைக் கொண்ட கிரந்தத்தை; நரகண்டீரவாக்யா = நரசிம்மாசார்யர் என்னும்; ஆர்யர = பெரியவரில்; ஜனித = பிறந்த; ஸுகுமார = சுகுமாரரான ஸ்ரீஜகன்னாத தாஸார்யர்; ஸாத்விகரிகெ = ஸாத்விக மக்களின் நலனுக்காக; பரமோதார = மிகவும் கருணையுடன்; மாடித = இயற்றிய; உபகார = இந்த உதவியை; மரெயரு = சாதுகள் என்றைக்கும் மறக்க மாட்டார்கள்.

ஹரிகதாம்ருதஸாரமானது ஒரு காவியமே என்று அதற்கான வாதங்களை இங்கு செய்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

காவியம் என்றால் நகைச்சுவை, ஸ்ருங்காரம் முதலான நவரசங்கள் இருக்க வேண்டும். இதில் வெறும் நற்சாஸ்திரங்களைப் பற்றி சொல்வதாலேயே, நகைச்சுவை, ஸ்ருங்காரம் ஆகிய ரசங்கள் இருப்பதற்கு வாய்ப்பில்லை. ஆகையால், இதனை சுலக்ஷண காவியம் என்று சொல்லக் கூடாது என்று சந்தேகம் வரலாம். அதனை மறுக்கிறார்.

இந்த கிரந்தத்தில் காவிய லட்சணமான நவவித ரஸங்கள் இருந்தே இருக்கின்றன. (ஸ்ருங்கார ரஸங்களும் அங்கங்கு வந்திருக்கின்றன. 6ம் சந்தியில் 6ம் பத்யத்தை பார்க்கவும்). இப்படியாக நவரசங்களால் நிரம்பி வழியும், ஆழமான கடலைப் போல, அலங்காரங்கள் நிறைந்திருந்தாலும், பகவன் மகிமைகளுக்கு விரோதமில்லாமல், அனைத்து சாஸ்திரார்த்தங்களையும் இதில் சொல்லியிருக்கிறார்.

இந்த கிரந்தத்தை பூஜ்யரான ஸ்ரீ நரசிம்மாசார்யரின் மக்களான ஸ்ரீஜகன்னாததாஸர், சஜ்ஜனர்களை காப்பதற்காகவே இயற்றியிருக்கிறார். ஆகையால், சஜ்ஜனர்கள் இந்த கருணையை என்றும் மறக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன்.

**அவனியொளு ஜ்யோதிஷ்மதிய தை**
**லவனு பாமரனுண்டு$^3$ ஜீர்ணிஸ**
**லவனெ பண்டி$^3$தனொ கரிப விவேகியப்பந்தெ ।**
**ஶ்ரவணமங்க$^3$ல ஹரிகதா$^2$ம்ருத**
**ஸவிது நிர்கு$^3$ணஸார முக்கிஸ**
**லவ நிபுணனை யோக்$^3$யக$^3$ல்லதெ$^3$ த$^3$க்கலரியதி$^3$து$^3$ ||15**

அவனியொளு = பூமியில்; பாமரனு = ஏதும் அறியாத மூர்க்கன்; ஜ்யோதிஷ்மதிய தைலவனு = ஜ்யோதிஷ்மதி என்னும் தைலத்தை; உண்டு = குடித்து; ஜீர்ணிஸலு = ஜீர்ணித்துக் கொண்டால்; அவனே பண்டிதன் ஆகிறான். ; ஓகரிஸலு = அதை ஒதுக்கினால்; அவிவேகியப்பந்தெ = அவனே, அவிவேகி ஆகிறான். அதைப் போலவே,; ஸ்ரவணமங்கள = கேட்பவர்களுக்கு மங்களத்தைக் கொடுக்கும்; ஹரிகதாம்ருத = ஹரிகதாம்ருத என்னும்; நிர்குணஸார = ப்ராக்ருத குண ஷூன்யனான பரமாத்மனின் மகிமைகளின் சாரத்தை; முக்கிஸலு = ஜீர்ணித்துக் கொண்டால் (இது நவரசங்களைக் கொண்ட பகவன் மகிமைகளால் பூர்ணமான உத்தம கிரந்தம் என்று மனதில் ஆனந்தப்பட்டால்); ஆவ = அந்த புருஷன்; நிபுணனை = மஹா ஞானி; இதனைப் பார்த்து முகம் சுளித்தால், தூஷிப்பவர்கள் அவிவேகிகள் என்று அர்த்தம். ; இது = இந்த காவியம்; யோக்யகல்லதெ = உத்தமாதிகாரிகளைத் தவிர; தக்கலரியதிது = மற்றவர்களுக்கு ஜீர்ணித்துக் கொள்ள சாத்தியமில்லை.

இந்த கிரந்தமானது வெறும் பகவத் பக்தர்களுக்கு மட்டுமே ருசிக்கக்கூடியதாகும். இதரருக்கு அல்ல என்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

ஜ்யோதிஷ்மதிய தைலம் என்பது ஒரு பாமரனை பண்டிதனாக்கும் தைலம் ஆகும். இதனை பாமரன் உண்டால் பண்டிதன் ஆகிறான். அதனை உண்ணாமல் ஒதுக்கிவிட்டால் அவிவேகி ஆகிறான். அதைப் போலவே, பரமாத்மனின் குண மகிமை என்னும் அமிர்தத்தின் சாரமான இந்த கிரந்தத்தை படித்து மகிழ்ச்சியடைபவன் மஹா ஞானியாகிறான். அப்படியில்லாதவன் மூர்க்கனே சரி. இந்த கிரந்தமானது வெறும் பகவத் பக்தர்களுக்கு மட்டுமே ருசிக்கக்கூடியது. இதரருக்கு அல்ல.

**அக்கரதொ$^{3}$ளீ காவ்யதொ$^{3}$ளு ஒ**
**ந்த$^{3}$க்கரவ ப$^{3}$ரெதோ$^{3}$தி$^{3}$த$^{3}$வ தே$^{3}$**
**வர்க்க$^{3}$ளிகெ$^{3}$ து$^{3}$ஸ்த்யஜனெனிஸி த$^{4}$ர்மார்த்த$^{2}$ காமக$^{3}$ள |**
**லெக்கிஸதெ$^{3}$ லோகைக நாத$^{2}$ன**
**ப$^{4}$க்தி பா$^{4}$க்$^{3}$யவ படெ$^{3}$வ ஜீவ**
**ன் முக்தக$^{3}$ல்லதெ$^{3}$ ஹரிகதா$^{2}$ம்ருதஸார ஸொக$^{3}$ஸுவதெ$^{3}$ ||16**

அக்கரதொளு = சிரத்தையுடன்; ஈ காவ்யதொளு = இந்த கிரந்தத்தில் இருக்கும்; ஒந்தக்கரவ = ஒரு எழுத்தையாவது; பரதோதிதவ = எழுதி படிக்கும் செயலை செய்பவன்; தேவர்க்களிகெ = தேவதைகளுக்கு; துஸ்த்யஜனெனிஸி = வேண்டியவன் என்று நினைத்து; தர்மார்த்த காமகள = தர்ம, அர்த்த, காம என்னும் மூன்று வித புருஷார்த்தங்களை; லெக்கிஸதெ = விரும்பாமல்; லோகைகனாதன = உலகத்திற்கெல்லாம் முக்கிய பிரபுவான, ஸ்ரீஹரியின் ; பக்தி பாக்யவ படெவ = பக்தி பாவத்தை அடைகிறான்; இத்தகைய மகிமையுள்ள, ஹரிகதாம்ருதசார = ஹரிகதாம்ருதசார என்னும் கிரந்தம்; ஜீவன்முக்தகல்லதெ = ஜீவன் முக்தர்களைத் தவிர; ஸொகஸுவதெ = ருசிக்குமா? (வேறு யாருக்கும் ருசிக்காது என்று அர்த்தம்).

ஹரிகதாம்ருதஸாரம் படிப்பவர்கள் தேவதைகளுக்கு வேண்டியவன் ஆகிறான் என்று ஸ்ரீத விட்டல தாஸர் கூறுகிறார்.

சிரத்தையுடன் இந்த கிரந்தத்தில் இருக்கும் ஒரு எழுத்தையாவது எழுதி, படித்தால் அவன், தேவதைகளுக்கு வேண்டியவன் ஆகிறான். தர்ம காமார்த்தங்களை லட்சியம் செய்யாமல் ஸ்ரீபரமாத்மனின் பக்தி என்னும் உத்தம பாக்கியத்தை அடைகிறான். இந்தப் பிறவியிலேயே அபரோக்ஷத்தில் பரமாத்மனைக் கண்டு, மெய்மறந்து மகிழ்ச்சியடையும் ஜீவன் முக்தர்களைத் தவிர இதரருக்கு இந்த கிரந்தம் ருசிக்காது என்பது கருத்து.

**ஒத்தி ப$^{3}$ஹ விக்$^{4}$னக$^{3}$ள தடெ$^{3}$த$^{3}$ப**
**ம்ருத்யுவிகெ$^{3}$ மரெமாடி$^{3}$ காலன**
**ப்$^{4}$ருத்யரிகெ$^{3}$ பீ$^{4}$கரவ புட்டிஸி ஸகலஸித்திக$^{3}$ள |**
**ஒத்திகொ$^{3}$ள்ளிஸி வனருஹேக்ஷண**
**ந்ருத்ய மாடு$^{3}$வனவன மனெயொளு**
**நித்யமங்க$^{3}$ல ஹரிகதாம்ருதஸார படி$^{2}$ஸுவர ||17**

ஒத்திபஹ = வரும் தடைகளை; தடெது = பரிகரிக்கிறான்; அபம்ருத்யுவிகெ = அபம்ருத்யுவிற்கு; மரெமாடி = அந்த ம்ருத்யுவிற்கு தெரியாமல் இவரை மறைத்து; காலனப்ருத்யரிகெ = யமதூதர்களுக்கு; பீகரவ = இவரின் அருகில் வருவதற்கு சாத்தியமில்லாதவாறு பயத்தை; புட்டிஸி = கொடுத்து (உருவாக்கி); ஸகலஸித்திகள = அனைத்து வித நலன்களையும்; ஒத்திகொள்ளிஸி = அனைத்து இஷ்டார்த்தங்களையும் நிறைவேற்றுகிறான்; வனருஹேக்ஷண = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி; ந்ருத்ய மாடுவனு = நர்த்தனம் செய்கிறான். ; அவரமனெயொளு = அவரின் வீட்டில்; நித்யமங்கள = நித்யத்திலும் மங்களத்தைக் கொடுக்கக்கூடிய; ஹரிகதாம்ருதசார = இந்த கிரந்தத்தை. அல்லது, நித்யமங்களனான தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின் ஹரிகதாம்ருத சாரத்தை; படிசுவர = படிப்பவர்களுக்கு

இந்த கிரந்தத்தினை தினமும் படிப்பவர்களுக்கு யமபயம் இல்லை என்று ஸ்ரீத விட்டல தாஸர் கூறுகிறார்.

இந்த கிரந்தத்தை படிப்பவர்களுக்கு அவ்வப்போது வரும் விக்னங்களை பரிகரித்து, இவர்களுக்கு அபம்ருத்யு வராமல் தடுத்து, யமதூதர்களுக்கு பயத்தைக் கொடுக்கிறார். உதாரணம். அஜாமிளன் சரித்திரம். அதைப் போல, ஹரிகதாம்ருதஸாரத்தை படிப்பவர்களை பார்ப்பதற்குக்கூட யமதூதர்கள் பயப்படுகின்றனர் என்பது கருத்து. மற்றும் பகவந்தன் இதனை படிப்பவர்களின் மனோபீஷ்டங்கள் அனைத்தையும் நிறைவேற்றுவதோடு மட்டுமல்லாமல் இவர்களின் வீட்டில் நர்த்தனம் ஆடுகிறான்.

**ஆயுராரோக்$^{3}$யைஶ்வர்ய மா**
**ஹா யஶோதை$^{4}$ர்ய ப$^{3}$ல ஸமஸ**
**ஹாய ஶௌர்யோதா$^{4}$ர்ய கு$^{3}$ணகா$^{3}$ம்பீ$^{4}$ர்ய மொத$^{3}$லாத$^{3}$ |**
**ஆயதக$^{3}$ளுண்டாக$^{3}$ லொந்த$^{3}$**
**த்$^{4}$யாய படி$^{2}$ஸித மாத்ரதி$^{3}$ம் ஸ்ரவ**
**ணீயவல்லவெ ஹரிகதா$^{2}$ம்ருதஸார ஸுஜனரிகெ$^{3}$ ||18**

ஒந்தத்யாய படிஸித மாத்ரதிம் = இந்த கிரந்தத்தின் ஒரு அத்தியாயத்தை படித்தாலே; ஆயு = ஆயுள்; ஆரோக்ய = உடல் நலன்; ஐஸ்வர்ய = செல்வம்; யஷ = புகழ்; தைர்ய = தைரியம்; பல = வலிமை; விக்ஞான = பகவந்தனைப் பற்றிய விசேஷ ஞானம்; ஸமஸாஹாய = பிறரின் உதவி; ஷௌர்ய = வீரம்; ஔதார்ய = ஈகை; மொதலாத = முதலான; காம்பீர்யகுண = கம்பீரமான குணங்களின்; ஆயுதிகளு = திறன்கள்; உண்டாகலு = நன்றாக அறியமுடியும் என்றால்; ஈ ஹரிகதாம்ருதசார; சுஜனரிகெ = சஜ்ஜனர்களுக்கு; ஸ்ரவணீயவல்லவெ = (கொடுக்கிறது என்றால்), இந்த கிரந்தத்தைக் கேட்பதற்கு இதைவிட வேறு என்ன காரணம் வேண்டும்?.

இந்த கிரந்தத்தை படிப்பதால் வரும் பயன்களின் பட்டியலையே இங்கு தருகிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

இந்த ஹரிகதாம்ருதஸாரத்தை படிப்பதால், கீழ்க்கண்ட பலன்கள் வருகின்றன. ஆயுள், உடல் நலன், செல்வம், புகழ், தைரியம், வலிமை, பகவந்தனைப் பற்றிய விசேஷ ஞானம், பிறரின் உதவி

கிடைத்தல், வீரம், கருணை ஆகிய குணங்கள் கிடைக்கின்றன. அப்படியெனில், இந்த கிரந்தத்தை கேட்பதற்கு இதைவிட வேறு என்ன காரணம் வேண்டும்?.

**குருட3 கங்க3ள படெ3வ ப3தி4ரனி**
**கெ3ரடு3 கிவி கேள்வஹவு பெ3ளெயத**
**முருட3 மத3னாக்ருதிய தாள்வனு கேள்த3மாத்ரத3லி |**
**ப3ரடு3 ஹைனாகு3வது3 கேள்த3ரெ**
**கொரடு3 ப1ல்லைஸுவுது3 ப்ரதிதி3ன**
**ஹுருடி3லாத3ரு ஹரிகதாம்ருத ஸாரவனு படி2ஸெ ||19**

ஹரிகதாம்ருதசார; கேள்தமாத்ரதலி = இதைக் கேட்ட மாத்திரத்திலேயே; குருட கங்கள படெவ = குருடன் தன் பார்வையைப் பெறுகிறான்; பதிரனிகெரடு கிவி கேள்வஹவு = செவிடனுக்கு இரு காதுகளும் கேட்கத் துவங்குகின்றன; பெளெயத முருட = விகார ஸ்வரூபம் உள்ளவன்; மதனாக்ருதிய = மன்மதனின் ஸ்வரூபத்தை; தாள்வனு = பெறுகிறான்; பரடு = கன்று ஈனாத மாடு அல்லது குழந்தை இல்லாத பெண்; ஹைனாகுவது = கன்று ஈனுகிறது; பெண் வாரிசினைப் பெறுகிறாள்; கொரடு = பட்டுப் போன மரங்கள்; பல்லைஸுவுது = துளிர் விடுகின்றன; ப்ரதிதின = தினம்தோறும்; ஹுரடிலாதரு = கர்வத்தினாலோ; ஹரிகதாம்ருதசாரவனு படிஸே = இந்த ஹரிகதாம்ருதசாரத்தை படித்தால் (இவை நடக்கின்றன).

ஹரிகதாம்ருதஸார படித்தால் வரும் பலன்களை மேலும் இங்கு விளக்குகிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

ஹரிகதாம்ருதஸாரத்தை கேட்ட மாத்திரத்திலேயே, குருடன் தன் பார்வையை பெறுகிறான். செவிடனுக்கு இரு காதுகளும் கேட்கத் துவங்குகின்றன. விகார ஸ்வரூபம் கொண்டவன், மன்மதனின் ஸ்வரூபத்தைப் பெறுகிறான். கன்று ஈனாத மாடு கன்று ஈனுகிறது; அல்லது குழந்தை இல்லாத பெண் வாரிசினைப் பெறுகிறாள். பட்டுப் போன மரங்கள், துளிர் விடுகின்றன. தினம்தோறும்

கர்வத்தினாலாவது, ஹரிகதாம்ருதஸாரத்தைப் படித்தால், இவை நடக்கின்றன.

**நிர்ஜர தரங்கி$^3$ணியொளனுதி$^3$ன**
**மஜ்ஜனாதி$^3$ ஸமஸ்தகர்ம வி**
**வர்ஜிதா ஶாபாஶதி$^3$ந்த$^3$லி மாடி$^3$த$^3$தி$^4$கப$^2$ல |**
**ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெகெ$^3$ தொ$^3$ரெயதி$^3$ப்பவெ**
**ஸஜ்ஜனரு ஶிரதூகு$^3$ வந்த$^3$தி$^3$**
**க$^4$ர்ஜிஸுதலி ஹரிகதாம்ருதஸார படி$^2$ஸுவகெ$^3$ ||20**

சஜ்ஜனரு = அறிஞர்கள்; ஷிரதூகுவந்ததி = தலை தூக்கி; கர்ஜிஸுவ = அதிக சத்தத்துடன் (உயர்ந்த குரலில்); ஹரிமதாம்ருதஸார; படிஸுவகெ = இதை படிப்பவர்களுக்கு; அனுதின = தினந்தோறும்; நிர்ஜர தரங்கிணியொளு = தேவ கங்கையில்; விவர்ஜித = விடப்பட்ட; ஆஷாபாஷதிந்தலி = ஆசைகளை விட்டவர்கள் என்று பொருள்; மஜ்ஜனாதிஸமஸ்த கர்ம = ஸ்னானம் முதலான அனைத்து கர்மங்களையும்; மாடித = செய்வதைவிட; அதிக பல = அதிகமான பலன்; ஹெஜ்ஜெஹெஜ்ஜெகெ = ஒவ்வொரு அடியிலும் ; தொரெயதிப்பவெ = கிடைக்காமல் இருக்குமா? (கண்டிப்பாக கிடைக்கும் என்று பொருள்).

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தினை படித்தால், கங்கை ஸ்னான, தான பலனே கிடைக்கின்றன என்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

இந்த கிரந்தத்தை சஜ்ஜனர்கள் உச்ச ஸ்வரத்தில் தலை தூக்கி யவாறு பாடி வந்தால், காம கிரோதங்களை விட்டு, ஒவ்வொரு நாளும் கங்கையில் ஸ்னான, தானாதிகளை செய்தால் எவ்வளவு பலன் கிடைக்குமோ அதைவிட அதிகமான பலன்கள் கிடைக்கும்.

**ஸதியரிகெ$^3$ பதிப$^4$குதி பத்னி**
**வ்ரத புருஷரிகெ$^3$ ஹருஷ நெலெகொ$^3$**
**ண்டதி மனோஹரவாகி$^3$ கு$^3$ருஹிரியரிகெ$^3$ ஜக$^3$தொளகெ$^3$ |**
**ஸதத மங்க$^3$லவீவ ப$^3$ஹு ஸு**
**க்ருதிக$^3$ளெனிஸுத ஸுலப$^4$தி$^3$ம் ஸ**
**த்க$^3$திய படெ$^3$வரு ஹரிகதா$^2$ம்ருதஸாரவனு படி$^2$ஸெ ||21**

ஹரிகதாம்ருதசாரவனு படிஸெ = ஹரிகதாம்ருதசாரத்தைப் படித்தால், ; சதியரிகெ பதிபகுதி = மனைவியர்க்கு பதி பக்தி, ; புருஷரிகெ பத்னி வ்ரத = புருஷர்களுக்கு பத்னி விரதம், ; இப்படி கணவன் மனைவியர் இருவரும்; ஹருஷ நெலெகொண்டு = இருக்கும்வரை இஹத்தில் நிரந்தரமான ஆனந்தத்தை அனுபவித்தவாறு; ஜகதொளகெ = உலகத்தில்; குருஹிரியரிகெ = குரு மற்றும் பெரியவர்களுக்கு; மெனோஹரவாகி = வேண்டப்பட்டவர்களாக; ஸதத மங்களவீவ = நிரந்தர சுகத்தைக் கொடுக்கும்; ஸுக்ருதகளெனிஸுத = உத்தம புண்யவந்தர் எனப்பட்டு; ஸுலபதிம் = மிகச்சுலபமாக; ஸத்கதிய படெவரு = நற்கதியை அடைகிறார்கள்.

மோட்சத்தைத் தருவதான ஹரிகதாம்ருதஸாரத்தின் பிற பலன்களையும் இங்கு சொல்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.

இத்தகைய சிறப்பு மிக்க ஹரிகதாம்ருதஸாரத்தை படித்தால், மனைவியருக்கு பதி பக்தி, புருஷர்களுக்கு பத்னியிடம் அதிக அன்பு வருகிறது. இப்படியே, கணவன் மனைவியர் இருவரும், இங்கு இருக்கும்வரை, நிரந்தரமாக ஆனந்தத்தை அனுபவித்தவாறு, உலகத்தில் குரு மற்றும் பெயரியவர்களுக்கு வேண்டப்பட்டவர்களாக கருதப்படுகிறார்கள். எப்போதும் நிரந்தரமாக மங்களங்களை சுகங்களை கொடுப்பதான முக்தியை / ஸத்கதியை; உத்தம புண்யவந்தர்கள் என்று அழைக்கப்பட்டு, அடைகிறார்கள்.

**எந்து வர்ணிஸலென்னளவெ ப$^{4}$க$^{3}$**
**வந்தனமல கு$^{3}$ணானுவாத$^{3}$க$^{3}$**
**ளெந்து பரியலி பூர்ணபோ$^{4}$த$^{3}$ர மதவ பொந்த்$^{3}$யவர**
**சிந்தனெகெ$^{3}$ ப$^{3}$ப்பந்தெ ப$^{3}$ஹு த்$^{3}$ரு**
**ஷ்டந்த பூர்வககவாகி$^{3}$ பேள்த$^{3}$ ம**
**ஹந்தரிகெ$^{3}$ நரரெந்து$^{3}$ ப$^{3}$கெ$^{3}$வரெ நிரயபா$^{4}$கி$^{3}$க$^{3}$ளு ||22**

எந்து வர்ணிஸலி = இந்த கிரந்தத்தின் மகிமையை எப்படி வர்ணிப்பேன்?; என்னளவெ = என்னால் சாத்தியமா?; பகவந்தன =

ஸ்ரீஹரியின்; அமலகுணானுவாதகள = நிர்மலமான குணங்களின் அனுவாதத்தை; எந்துபரியலி = பற்பல விதமாக; பூர்ணபோதர மதவபொந்த்யவர = ஸ்ரீமன் மத்வாசார்யரின் மதத்தை பின்பற்றுபவர்களான; சிந்தனெகெ பப்பந்தெ = சிந்திக்குமாறு; பஹுத்ருஷ்டாந்த பூர்வகவாகி பேள்த = தகுந்த ஆதாரங்களுடன் எழுதியுள்ள; மஹந்தரிகெ = மஹாத்மரான ஜகன்னாத தாஸார்யரை; நரரெந்து = நம்மைப் போல சாதாரண மனிதர் என்று; பகெவரெ = சொல்லும் மக்களே; நிரயபாகிகளு = நரகத்தை சேர்ந்தவர்கள் (பாபிகள் என்று அர்த்தம்).

ஸ்ரீஜகன்னாததாஸரை நம்மைப் போன்ற சாதாரண மனிதர் என்று சொல்ல முடியுமா? என்று கேட்கிறார் ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர்.
இந்த கிரந்தமானது, மத்வ மதத்தைப் பின்பற்றுபவர்களின் அனுகூலத்திற்காக, ஸ்ரீமதாசார்யர் சம்ஸ்கிருதத்தில் எழுதியிருக்கும் பிரகரணங்கள், உபநிஷத்கள், தாத்பர்ய நிர்ணய, பிரம்மஸூத்ர பாஷ்ய முதலான கிரந்தங்களிலும், பாகவத, பாரத, விஷ்ணு ரஹஸ்ய, கருட புராண முதலான புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கும் பகவன் மகிமைகளையும், அதன் சம்பந்தப்பட்ட அனைத்து சாஸ்திரார்த்தங்களையும் தொகுத்து இயற்றியிருக்கிறார். இதன் குணத்தை (மகிமையை) என்னவென்று வர்ணிப்பேன்? வர்ணிப்பது என்னால் சாத்தியமும் இல்லை. இத்தகைய கிரந்த கர்த்தரான மகாத்மரை சாமான்ய மனிதர் என்று சொல்பவர்கள், நரகத்தை சேர்ந்தவர்களே (பாபிகளே) ஆவர்.

**மணிக$^{2}$சித ஹரிவாணத$^{3}$லி வா**
**ரண ஸுபோ$^{4}$ஜ்ய பதா$^{3}$ர்த்த$^{2}$ க்ருஷ்ணா**
**ர்ப்பணவெனுத பஸித$^{3}$வரிகோஸுக$^{3}$ நீடுவந்த$^{3}$த$^{3}$லி |**
**ப்ரணதரிகெ$^{3}$ பொங்க$^{3}$ட$^{3}$ வரவா**
**ங்மணிக$^{3}$ளிம் விரசிஸித$^{3}$ க்ருதியொளு**
**உணிஸி நோடு$^{3}$வ ஹரிகதா$^{2}$ம்ருதஸார வனுதா$^{3}$ர ||23**

மணிகசித = மாணிக்கங்களால்; கசிதவாத = வேயப்பட்ட; ஹரிவாணதலி = தங்கத் தட்டில்; வாரண = அழகாக; ஸுபோஜ்ய

பதார்த்தகள = போஜத்திற்கு யோக்யமான உத்தம பதார்த்தங்களை பரிமாறி; கிருஷ்ணாப்பணவெனுத = ஶ்ரீகிருஷ்ணனுக்கு ப்ரீதி ஆகட்டும் என்று நைவேத்தியத்தை செய்து; பஸிதவரிகோஸுக = பசியுடன் வந்திருப்பவர்களுக்கு; நீடுவந்ததலி = உணவைக் கொடுத்தால் எப்படி இருக்குமோ அப்படி; ப்ரணதரிகெ = பரமாத்மனை எப்போதும் ஆராதித்தவாறு நமஸ்காராதிகளால் சேவை செய்யும் பக்தர்களுக்கு; பொம் = தங்கத்திற்கு சமமான; கனட = கன்னட மொழியில்; வர = உத்தமமான; வாங்மணிகளிம் = வாக்கியங்கள் என்னும் மாணிக்கங்களால்; விரசிஸித = இயற்றப்பட்ட; க்ருதியொளு = காவியம் என்னும் ஹரிவாணத்தில்; ஹரிகதாம்ருதஸாரவனு = ஹரிகதை என்னும் அமிர்தத்தின் சாரத்தை; உதார = தானசீலரான தாஸார்யர்; உணிஸி = உண்ணக் கொடுத்து; நோடுவ = பார்த்து ஆனந்தப்படுகிறார்.

ஶ்ரீஜகன்னாததாஸரின் மகிமைகளைப் பற்றி மேலும் விளக்குகிறார் ஶ்ரீஶ்ரீத விட்டல தாஸர்.

ஶ்ரீஹரியின் நைவேத்தியத்திற்கு உத்தமமான பக்ஷ்ய போஜ்யங்களுடன் சமையலை செய்து, அதனை நைவேத்திய சமர்ப்பணம் செய்து, மதிய நேரத்தில் பசியுடன் வந்தவர்களுக்காக, மாணிக்கங்களால் வேயப்பட்ட தங்கத் தட்டில் அவற்றை பரிமாறி, கிருஷ்ணார்ப்பணம் என்று கொடுத்து, உண்வித்தால் எப்படியோ, அப்படியே, கருணை உள்ளம் கொண்ட தாஸார்யர், பகவத் பக்தர்களுக்காக, ஹரிகதை என்னும் அமிர்தத்தின் சாரத்தை தொகுத்து, அதனை பகவந்தனுக்கு அர்ப்பித்து, அதனை, பரமாத்மனை அடைவது எப்போது என்று வழி பார்த்து பசித்திருக்கும் பக்தர்களுக்கு, கன்னட மொழி என்னும் தங்கம்; அதன் உத்தமமான வாக்கியங்களே மணிகள். இத்தகைய மணிகளால் கட்டப்பட்ட இந்த காவியமே, தங்கத் தட்டு. இதில், மேலே சொன்ன ஹரிகதாம்ருத சாரத்தை பரிமாறி உண்வித்து பார்த்தவாறு மகிழ்ச்சியடைகிறார். ஆகையால், நம் தாஸார்யரைப் போல கருணாளுகள் வேறு யார் என்பது கருத்து.

**து$^3$ஷ்டரென்னதெ$^3$ து$^3$ர்விஷயதி$^3$ம்**
**புஷ்டரென்னதெ$^3$ பூ$^4$தகர்ம**
**ப்$^4$ரஷ்டரென்னதெ$^3$ ஶ்ரீத$^3$விட்டல வேணுகோ$^3$பால**
**க்ருஷ்ண கைபி$^3$டி$^3$யுவனு ஸத்ய வி**
**ஶிஷ்ட தா$^3$ஸத்வவனு பாலிஸி**
**நிஷ்டெயிந்த$^3$லி ஹரிகதா$^2$ம்ருதஸார படி$^2$ஸுவர ||24**

விஸிஷ்ட தாஸத்வவனு பாலிஸி = காம கிரோதங்களை விட்டு, அபிமானத்தை துறந்து எப்போதும் ஹரியை வணங்கியவாறு, செய்த அனைத்து கர்மங்களையும் ஶ்ரீஹரியே செய்தான் என்று அறிந்து, புண்ய பாபங்களை பரமாத்மனுக்கு அர்ப்பிப்பதே தாஸத்வத்தின் லட்சணம். இத்தகைய தாஸத்வத்தை பின்பற்றி; நிஷ்டெயிந்தலி = ஸ்ரத்தா, பக்தியுடன் ; ஹரிகதாம்ருதஸார படிஸுவர = இந்த கிரந்தத்தை படிப்பவர்களை; துஷ்டரென்னதெ = துஷ்டர்கள் என்று சொல்லாமல்; துர்விஷயதிம் புஷ்டரென்னதெ = இவர் துர்விஷயங்களாலேயே தம் காலத்தைக் கழிப்பவர் என்று சொல்லாமல்; பூதகர்ம ப்ரஷ்டரென்னதெ = யோக்யமான கர்மங்களை செய்யாமல் விட்டவர் என்று சொல்லாமல்; ஶ்ரீதவிட்டல வேணுகோபால கிருஷ்ண = ஶ்ரீதவிட்டல என்னும் அந்தர்யாமியான வேணுகோபால கிருஷ்ணன்; ஸத்ய = உண்மையாக (நிச்சயமாக); கைபிடியுவனு = கை பிடித்து அவருக்கு அருள்வான்.

இந்த கடைசி பத்யத்தில், இந்த பல ஸ்துதியை தன் பிம்ப மூர்த்தியிடம் சமர்ப்பிக்கிறார் ஶ்ரீஶ்ரீத விட்டல தாஸர்.

அஜாமிளன் எப்படி மகா பாபியாக இருந்தாலும், தன் இறுதிக் காலத்தில் நாராயண ஸ்மரணையால் தன்யன் ஆனானோ, அப்படியே யாராவது அவ்வளவு துஷ்டர் என்று பெயர் பெற்றிருந்தாலும், எப்போதும் துர்விஷயத்தில் காலத்தை கழித்திருக்கட்டும், சத்கர்மங்களை செய்யாமல் விட்டிருக்கட்டும், அப்படிப்பட்ட பாபியாக இருந்தாலும், ஶ்ரீஹரியிடம் மேற்கூறியபடி தாஸத்வத்தை பின்பற்றி, ஸ்ரத்தா பக்தியுடன் ஹரிகதாம்ருதசாரத்தை படித்தால், ஶ்ரீவிட்டலாங்கித

ஸ்ரீவேணுகோபால மூர்த்தி, அவரை நிச்சயமாக கைபிடித்து காப்பாற்றுவான்.

## ஸ்ரீகுரு ஸ்ரீஷ விட்டல தாஸரின் பல ஸ்துதி

**தா$^3$ஸவர்யர தாஸகர்ஜகி$^3$**
**தா$^3$ஸரெம்ப$^3$ர ஈ ஸுவாக்யவு**
**தா$^3$ஸீனவமாட$^3$தி$^3$ரி ஸ்ரீஹரிதா$^3$ஸராத$^3$வரு |**
**காஶி மொத$^3$லாத$^3$ ஸுக்ஷேத்ரதி$^3$**
**வாஸமாட$^3$லு ஈ ஸுஜன ஸஹ**
**வாஸப$^2$ல தொ$^3$ரகுவதெ$^3$ ஶோதி$^4$ஸெ ஸகலஶாஸ்த்ரத$^3$லி ||1**

தாஸவர்யர - ஸ்ரீஜகன்னாத தாஸரின்; தாஸ - சிஷ்யரான; கர்ஜகி தாஸரெம்பர - கர்ஜகி தாஸர் என்பவரின்; ஈ ஸுவாக்யவு - பல ஸ்துதியை; ஸ்ரீஹரிதாசராதவரு- ஸ்ரீஹரிதாசர் ஆனவர்கள்; உதாஸீன மாடதிரி - உதாஸீனம் செய்யாதீர்கள்; ஈ ஸுஜன - இத்தகைய சுஜனர்களுடனான; ஸஹவாஸ - சகவாசமானது; பல தொரகுவதெ - இத்தகைய பலன்களை தருகிறது (பின்வருமாறு); காஷி மொதலாத ஸுக்ஷேத்ரதி - காசி முதலான க் ஷேத்திரங்களில் வசிப்பதான; ஸகல ஷாஸ்த்ரதலி - அனைத்து சாஸ்திரங்களையும்; ஷோதிஸெ - படித்தால் (இது புரியும்).

ஜகன்னாத தாஸரின் சிஷ்யரான கர்ஜகி தாஸர் இயற்றிய பல ஸ்ருதியில் சொல்லியிப்பதை, ஸ்ரீஹரிதாஸர் ஆனவர்கள் உதாசீனம் செய்யாதீர்கள். இத்தகைய சுஜனர்களுடன் சகவாசத்தில் இருந்தால், அது காசி முதலான புண்ய க் ஷேத்திரங்களில் வசிப்பதால் எவ்வளவு புண்ணியம் வருமோ, அத்தகைய சுப பலன்களை பெற்றுத் தருகிறது. அனைத்து சாஸ்திரங்களிலும் இவ்வாறே சொல்லப்பட்டிருக்கிறது.

**ஸ்ரீவரன தா$^3$ஸரிகெ$^3$ ப$^4$குதிலி**
**ஸேவகனு நானெந்து$^3$ பேளுவ**
**ஜீவனவ ஸஜ்ஜீவி அவஹரிதா$^3$ஸனெந்த$^3$ரிது$^3$ |**
**ஆவனாத$^3$ரு ஆதி$^3$யலி இத$^3$**

**பா4வஷுத்3த4தி3 ஓதி3ப3ரெயலு**
**காவனய்யனு கருணிஸுவனு ஸதா3வகாலத3லி ||2**

ஶ்ரீவரன தாஸரிகெ - ஶ்ரீஹரியின் தாஸர்களுக்கு; ஸேவகனு நானெந்து - சேவகன் நான் என்று; பகுதிலி பேளுவ - மிகவும் பக்தியுடன் சொல்லும்; ஜீவனு - ஜீவன்; அவ ஸஜ்ஜீவி - அவன் ஸஜ்ஜனன் ஆகிறான்; அவன் - அத்தகையவர்கள்; ஹரிதாஸனெந்தரிது - ஹரிதாஸன் என்பதை அறிந்து; ஆவனாதரு - யாரொருவன்; ஆதியலி - துவக்கத்தில்; இத - இதனை (ஹரிகதாம்ருதஸாரத்தை); பாவஷுத்ததி - மிகவும் மன சுத்தியுடன்; ஓதிபரெயலு - படித்து எழுதினால்; காவனெய்யனு - காமனின் தந்தையான ஶ்ரீஹரி; ஸதாவகாலதலி - எப்போதுமே; கருணிஸுவனு - அருள்கிறான்.

ஶ்ரீஹரிகதாம்ருதஸாரத்தினை படித்தால் கிடைக்கும் பலன்களை இங்கு சொல்லியிருக்கிறார் ஶ்ரீகுருஶ்ரீஷ விட்டல தாஸர்.

ஶ்ரீஹரியின் தாஸர்களுக்கு சேவகன் நான் என்று மிகவும் பக்தியுடன் சொல்லும் ஜீவன், அவன் ஸஜ்ஜனன் ஆகிறான். அத்தகையவர்கள் ஹரிதாஸன் என்பதை அறிந்து, யாரொருவன் துவக்கத்தில் இதனை (ஹரிகதாம்ருதஸாரத்தை) மிகவும் மன சுத்தியுடன் படித்து எழுதினால், காமனின் தந்தையான ஶ்ரீஹரி எப்போதுமே அருள்கிறான்.

**ஹரிகதா2ம்ருதஸார நோடு3வ**
**பரமப4க்தர ஞான த்3ருஷ்டிகெ3**
**வர ஸுலோசனத3ந்தெ இப்பவு ஈ ஸுபத்3யக3ளு |**
**அரஸிகரிகி3து3 பேளலாக3து3**
**முரஹரன தாஸரிகெ3 தப்பதெ3**
**ஹருஷ ஸுரிஸுவனிஹபரதி3 குருஶ்ரீஶவிட்டலனு ||3**

ஹரிகதாம்ருதஸார - ஹரிகதாம்ருதஸாரத்தை; நோடுவ - பார்க்கும்; பரமபக்தர - பரம பகவத் பக்தர்களின்; ஞான த்ருஷ்டிகெ - அகக் கண்களுக்கு; ஈ ஸுபத்யகளு - இந்த பத்யங்கள்: வர

ஸுலோசனதந்தெ இப்பவு - ஒரு சிறந்த உப-கண்ணாடியைப் போல இருக்கின்றன; அரஸிகரிகிது - ஆர்வம் இல்லாதவர்களுக்கு; பேளலாகது - இதனை சொல்லக்கூடாது; முரஹரன தாஸரிகெ - ஸ்ரீஹரியின் தாஸர்களுக்கு; தப்பதெ - தவறாமல் (கண்டிப்பாக); இஹபரதி - இஹ பரங்களில்; குருஸ்ரீஷ விட்டலனு - ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டலன்; ஹருத ஸுரிஸுவனு -மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தின் பலன்களை சொல்லியவாறு, இந்த பல ஸ்துதியினை தனது பிம்பரூபிக்கு அர்ப்பணம் செய்கிறார் ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டல தாஸர்.

ஹரிகதாம்ருதஸாரத்தை பார்க்கும் பரம பகவத் பக்தர்களின் அகக் கண்களுக்கு, இந்த பத்யங்கள் ஒரு சிறந்த உப-கண்ணாடியைப் போல இருக்கின்றன. ஆர்வம் இல்லாதவர்களுக்கு இதனை சொல்லக்கூடாது. ஸ்ரீஹரியின் தாஸர்களுக்கு, தவறாமல் (கண்டிப்பாக) இஹ பரங்களில் ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டலன் மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

<u>ஸ்ரீமனோகர விட்டல தாஸரின் பல ஸ்துதி</u>

**ஸிரிவர ஜக$^{3}$ன்னாத$^{2}$விட்டலன**
**சரணப$^{4}$ஜக ந்ருஸிம்ஹதா$^{3}$ஸன**
**வரமுகா$^{2}$ம்பு$^{3}$ஜதி$^{3}$ந்த$^{3}$ பரிமளத$^{3}$ந்தெ பஸரிஸித$^{3}$ ।**
**ஹரிகதா$^{2}$ம்ருதஸார புஸ்தக**
**ப$^{3}$ரெது$^{3}$ ஓது$^{3}$த கேள்வ ஸுஜனர**
**து$^{3}$ரித பரிஹர முகுதியவரிகெ$^{3}$ கரதலாமலக ||1**

ஸிரிவர - ஸ்ரீ நாமகளான ஸ்ரீலட்சுமிதேவியைவிட அனந்த கோடி குணங்களால் உத்தமனான; ஜகன்னாத விட்டலன - ஸ்ரீஜகன்னாத விட்டலனான ஸ்ரீஹரியின்; சரணபஜக - பாத பத்மங்களை வணங்குபவரான; ந்ருஸிம்ஹ தாஸன - தம் குலதெய்வமும், இஷ்டதெய்வமும், இந்த கிரந்த ப்ரதிபாத்யனும் ஆன ஸ்ரீலட்சுமி நரசிம்ம ஸ்வாமியின் தாஸரான ஸ்ரீஜகன்னாத தாஸரின்; வரமுகாரவிந்ததிந்த - அவருடைய சிறந்த முகத்திலிருந்து;

பரிமளதந்தெ - நறுமணத்தைப் போல; பஸரிஸித - அனைத்து இடங்களிலும் வெளிவந்ததான; ஹரிகதம்ருதஸார - ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸார என்னும் இந்த கிரந்தம் என்னும்; ப்ரஸக்த - புத்தகத்தை / கிரந்தத்தை; பரெது - எழுதி; ஓருவ - படித்து, மனனம் செய்தவாறு; கேள்வ - கேட்கும்; ஸுஜனர - ஸஜ்ஜனர்களான பகவத் பக்தர்களின்; துரித பரிஹர - அனைத்து பாவங்களும் பரிகாரம் ஆகின்றன; அவரிகெ - அத்தகைய பக்தர்களுக்கு; முக்தி - முக்தியானது; கரதலாமலக - உள்ளங்கை நெல்லிக்கனி போல தெளிவாக தெரிகிறது (அவர்களுக்கு கிடைக்கிறது).

ஹரிகதாம்ருதஸாரத்தினை எழுதி, படித்து, மனனம் செய்பவர்களுக்கு முக்தி நிச்சயம் என்று கூறுகிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஸ்ரீலட்சுமிதேவியைவிட அனந்த கோடி குணங்களால் உத்தமனான, ஸ்ரீஜகன்னாத விட்டலனான ஸ்ரீஹரியின் பாத பத்மங்களை வணங்குபவரான, தம் குலதெய்வமும், இஷ்ட தெய்வமும், இந்த கிரந்த பிரதிபாத்யனும் ஆன, ஸ்ரீலட்சுமி நரசிம்ம ஸ்வாமியின் தாஸரான ஸ்ரீஜகன்னாத தாஸரின் சிறந்த முகத்திலிருந்து, நறுமணத்தைப் போல அனைத்து இடங்களிலும் வெளிவந்ததான ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸார என்னும் இந்த கிரந்தத்தினை, யாரொருவர் எழுதி, படித்து, மனனம் செய்து, கேட்கிறார்களோ, அத்தகைய பகவத் பக்தர்களின் அனைத்து பாவங்களும் பரிகாரம் ஆகின்றன. அத்தகைய பக்தர்களுக்கு முக்தியானது, உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல தெளிவாக தெரிகிறது (அவர்களுக்கு கிடைக்கிறது).

**இது$^3$ ஸுதா$^4$மணி சிந்திஸுவவரி**
**கி$^3$து$^3$ அபீ$^4$ஷ்டவனீவ ஸுரதரு**
**விது$^3$ மனத$^3$காமிதவ கரகொம்ப$^3$த$^3$க்கெ ஸுரதே$^4$னு |**
**இது$^3$ சதுரவித$^4$வாத$^3$ புருஷா**
**ர்த்த$^2$த$^3$ ஸுமார்க்க$^3$வ ப$^4$க்தியிந்த$^3$லி**
**ஸுத$^3$மல ஸ்ரீஹரிகதா$^2$ம்ருதஸார கேள்வரிகெ$^3$ ||2**

இது - ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த கிரந்தம்; ஸுதாமணி - சிந்தாமணியைப் போல இருக்கிறது; சிந்திஸுவரிகெ - இதனை தியானத்துடன் சிந்திப்பவர்களுக்கு; இது - இந்த கிரந்தமானது; அபீஷ்டவனீவ - அனைத்து மன அபீஷ்டங்களையும் நிறைவேற்றும்; ஸுரதரு - கல்பவ்ருட்சமாக இருக்கிறது; மனத காமிதவ - மனதில் விருப்பங்களை; கரகொம்புவுதகெ - பால் போல கறந்து கொள்வதற்கு உதவியான; ஸுரதேனு - தேவதைகளின் பசுவான காமதேனுவைப் போல இருக்கிறது; இது - இந்த கிரந்தம்; சதுரவிதவாத - நான்கு விதமான; புருஷார்த்தத - தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுத்து; ஸுமார்க்கவ - மோட்ச ப்ராப்திக்கு வழியைக் காட்டி, பக்தியிந்தலி - பக்தி மரியாதைகளுடன்; ஸதமல - எப்போதும் நிர்தோஷனான சச்சிதானந்த மூர்த்தியின் கதா அம்ருதத்தை சொல்லும்; ஸ்ரீஹரிகதாம்ருதஸார - ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும்; இந்த மஹாகாவியத்தை; கேள்வரிகெ - கேட்பவர்களுக்கு வழங்குகிறது.

ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் திவ்ய கிரந்தமானது, காமதேனு, கல்பவ்ருக்ஷம், சிந்தாமணி ஆகும். கிரந்தத்தினை படிக்கும் பகவத் பக்தர்களுக்கு அனைத்து விருப்பங்களும் நிறைவேறுகின்றன என்று சொல்கிறார்.

ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த கிரந்தம் சிந்தாமணியைப் போல இருக்கிறது; இதனை தியானத்துடன் சிந்திப்பவர்களுக்கு, இந்த கிரந்தமானது, அனைத்து மன அபீஷ்டங்களையும் நிறைவேற்றும் கல்பவ்ருட்சமாக இருக்கிறது. மனதின் விருப்பங்களை பால் போல கறந்து கொள்வதற்கு உதவியான தேவதைகளின் பசுவான காமதேனுவைப் போல இருக்கிறது. இந்த கிரந்தம், நான்கு விதமான தர்ம, அர்த்த, காம, மோட்ச என்னும் சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுக்கிறது. மோட்ச ப்ராப்திக்கு வழியைக் காட்டி பக்தி மரியாதைகளுடன், எப்போதும் நிர்தோஷனான சச்சிதானந்த மூர்த்தியின் கதா அம்ருதத்தை சொல்லும், ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த

மஹாகாவியத்தை கேட்பவர்களுக்கு இவை அனைத்தையும் வழங்குகிறது.

**பதிதபாவன மாள்பதி[3]து[3] ஸம்**
**ஸ்ருதிய பா[3]தெ[4]ய களெவதி[3]து[3] ஸந்**
**தத விமல ஸுக்ஞான வைராக்[3]யாதி[3] பா[4]க்[3]யவனு |**
**அதிஶயதி[3] ஸத்ப[4]குதியித்த**
**ச்யுதனபாத[3]வ தோர்ப்பதி[3]து[3] ஸம்**
**ஸ்துதிஸலோஶவே ஹரிகதா[2]ம்ருதஸார ஸம்ஸ்ருதிய ||3**

பதிதபாவன - பாவம் செய்து, அதோகதியை அடைந்தவர்களை பவித்ரமாக்கி, அருள்கிறது; மாள்புது - இந்த கிரந்தத்தின் விஷயங்களை கேட்பவர்களுக்கு; ஸம்ஸ்க்ருதிய - கர்மபந்தன ரூபத்தில் இருக்கும் இந்த ஸம்ஸாரத்தின்; பாதெகள களெவுது - கஷ்டங்களை விலக்குகிறது; இது - இந்த ஹரிகதாம்ருதஸார கிரந்தமானது; ஸந்தத - நிரந்தரமாக; விமல - நிர்தோஷமான (சந்தேகங்கள் அற்ற); ஸுக்ஞான - பகவத் விஷயமான யதார்த்த ஞானத்தை; வைராக்யதி - ஐஹிக விஷயங்களில் விரக்தி பாவம் முதலியன; பாக்யவனு - பாக்கியத்தை; அதிஷயதி - அதிகமாக; ஸத்பக்தி - ஸ்ரீபரமாத்மனில் அற்புத பக்தியினை; இத்து - அளித்து; அச்யுதன - ஸ்ரீஹரியின்; பாவன - நிர்தோஷமான ஸ்ரீஷனின் பாவித்ர்யத்தினை; தோர்ப்புதிது - இந்த கிரந்த ரத்னம் காட்டுகிறது; ஹரிகதாம்ருதஸார - ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த மஹா கிரந்தத்தின்; ஸம்ஸ்க்ருதிய - தாத்விக சிறப்பினை; ஸ்துதிஸலு வஷவே - புகழ்ந்து கொண்டாடுவதற்கு எனக்கு என்றாவது ஸாத்தியமா? இல்லை என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸார கிரந்தத்தின் சிறப்பினை சொல்வதற்கு என்னால் சாத்தியமே இல்லை என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

* பாவம் செய்து, அதோகதியை அடைந்தவர்களை பவித்ரமாக்கி, அருள்கிறது.

* இந்த கிரந்தத்தின் விஷயங்களை கேட்பவர்களுக்கு கர்மபந்தன ரூபத்தில் இருக்கும் இந்த ஸம்ஸாரத்தின் கஷ்டங்களை விலக்குகிறது.

* இந்த ஹரிகதாம்ருதஸார கிரந்தமானது, நிரந்தரமாக நிர்தோஷமான (சந்தேகங்கள் அற்ற), பகவத் விஷயமான யதார்த்த ஞானத்தை அளிக்கிறது.

* ஐஹிக விஷயங்களில் விரக்தி பாவம் ஆகிய பாக்கியத்தை அளிக்கிறது.

* ஸ்ரீபரமாத்மனில் அற்புத பக்தியினை அளித்து, ஸ்ரீஹரியின் நிர்தோஷமான ஸ்ரீஷனின் பாவித்ர்யத்தினை இந்த கிரந்த ரத்னம் காட்டுகிறது.

* ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த மஹா கிரந்தத்தின் தாத்விக சிறப்பினை புகழ்ந்து கொண்டாடுவதற்கு எனக்கு என்றாவது ஸாத்தியமா? இல்லை என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

**ஹரிகதா$^{2}$ம்ருதஸார பூர்வா**
**பரதி$^{3}$ ரசிஸித$^{3}$ விஷ்ணுதா$^{3}$ஸர**
**நரரிவரு திட$^{3}$வெந்து$^{3}$ப$^{3}$கெ$^{3}$வரு மூர்க்க$^{2}$ரிளெயொளகெ$^{3}$ |**
**ஸுரரே லோகோத்தா$^{4}$ரகோஸுக$^{3}$**
**நரஹரிய ஸத்கு$^{3}$ணக$^{3}$ணங்க$^{3}$ள**
**நருஹலுதி$^{3}$ஸித$^{3}$ரெந்து$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$வரு கோவித$^{3}$ரு ||4**

ஹரிகதாம்ருதஸார - ஹரிகதாம்ருதஸார என்னும் கிரந்தத்தினை; பூர்வாபரதி - முன் / பின் விஷயங்களை நன்கு ஆராய்ந்து; ரசிஸித - விளக்கமாக இயற்றிய; விஷ்ணுதாஸர - ஸ்ரீஹரியின் தாஸரான (ஹரிதாஸரான) ஸ்ரீஜகன்னாத தாஸர்; இவரு நரரு - இவர் வெறும் மனிதர் மட்டுமே என்று; திடவெந்து - இதுவே உண்மை என்று; பகெவரு - சொல்வார்கள்; இளெயொளகெ - இந்த பூமண்டலத்தில்; மூர்க்கரு - அஞ்ஞானிகள்; ஸுரரெ - கர்மஜ தேவதைகளான ஸஹ்லாதரே; லோகோத்தாரகோஸுக - உலகின் ஸஜ்ஜனர்களை காப்பதற்காக; நரஹரிய - நரசிம்ம நாமகனான ஸ்ரீ பரமாத்மனின் (அனைத்து ஜீவர்களின் பிம்பமூர்த்தி பகவத் ரூபம்);

ஸத்குண கணங்கள - அனந்த கல்யாண குண சமூகங்களை; இருஹலு - விளக்குவதற்காக; உதிஸிதரு எந்து - அவதரித்தார் என்று; கோவிதரு - கற்றறிந்தவர்கள்; கொண்டாடுவரு - கொண்டாடுகின்றனர்.

ஸஹ்லாதரே ஸ்ரீஜகன்னாத தாஸராக அவதரித்து வந்து ஹரிகதாம்ருத ஸாரத்தை இயற்றியிருக்கிறார் என்று இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஹரிகதாம்ருதஸார என்னும் கிரந்தத்தினை, பற்பல விஷயங்களை நன்கு ஆராய்ந்து விளக்கமாக இயற்றிய ஸ்ரீஹரியின் தாஸரான ஸ்ரீஜகன்னாத தாஸர், இவர் வெறும் மனிதர் மட்டுமே என்று அஞ்ஞானிகள் சொல்வார்கள். ஆனால், கர்மஜ தேவதையான ஸஹ்லாதரே, உலகின் ஸஜ்ஜனர்களை காப்பதற்காக, நரசிம்ம நாமகனான ஸ்ரீபரமாத்மனின் அனந்த கல்யாண குண சமூகங்களை விளக்குவதற்காக அவதரித்தார் என்று கற்றறிந்தவர்கள் கொண்டாடுகின்றனர்.

**ஶரதி2மத2னதொ3ளந்து3 ஸுதெ4 த1ம**
**க3ரெயலு நரஸிம்ஹதா3ஸரு**
**கருணதி3ம் தத்ஸுதெ4ய ஸுஜனரிகு3ணிஸபே3கெந்து3 |**
**ஹரிகதா2ம்ருதஸார நிஜமுக2**
**வரகலஶதி3ந்தி3த்து ரஸ ஸவி**
**தி3ரலு ஶாஶ்வத லோகதொ3ள ஜரமரண வெனிஸுவது3 ||5**

ஷரதிமதனதொளந்து - தேவ தானவர்கள் அன்று சேர்ந்து பாற்கடலை கடையும்போது; ஸுதெ தம கரெயலு - அமிர்தமானது தோன்றி, தேவர்களுக்கு பகிர்ந்து அளிக்கப்பட்டதைப் போல; நரஸிம்ஹதாஸரு - ஸ்ரீநரஸிம்ம ஸ்வாமியின் தாஸரான (அல்லது) ஸ்ரீ நரஸிம்ம ஆசார்யரின் மகனான ஸ்ரீஜகன்னாத தாஸர்; தத்ஸுதெய - அந்த அமிர்தத்தைப் போன்றதான; ஸுஜனரிகுணிஸ பேகெந்து - ஸஜ்ஜனர்களுக்கு பகிர்ந்து அளிக்க வேண்டும் என்று; கருணதிம் - கருணையுடன்; ஹரிகதாம்ருதஸார - ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த

கிரந்தத்தை; நிஜமுக - அவருடைய வசனத்திலிருந்து ; வரகலஷதிந்தித்து - அமிர்த கலசம் போன்றதான அவருடைய கலசத்திலிருந்து; ரஸ ஸவிதிரலு - அந்த ஸாரத்தை நமக்குக் கொடுக்க (அதன் மூலமாக); லோகதொளு - இந்த உலகில்; அஜரமரண வெனிஸுவது - (இதனை படித்ததால்) மக்களுக்கு முக்தி கிடைக்கும் வழி உண்டாயிற்று.

அமரத்வத்தைக் கொடுக்கக்கூடிய அமிர்தத்திற்கு ஒப்பானது இந்த ஹரிகதாம்ருதஸாரம் என்று சொல்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

தேவ தானவர்கள் அன்று சேர்ந்து பாற்கடலை கடையும்போது அமிர்தமானது தோன்றி, தேவர்களுக்கு பகிர்ந்து அளிக்கப்பட்டதைப் போல, ஸ்ரீநரஸிம்ம ஸ்வாமியின் தாஸரான (அல்லது) ஸ்ரீ நரஸிம்ம ஆசார்யரின் மகனான ஸ்ரீஜகன்னாத தாஸர், அந்த அமிர்தத்தைப் போன்றதான ஒரு விஷயத்தை ஸஜ்ஜனர்களுக்கு பகிர்ந்து அளிக்க வேண்டும் என்று கருணையுடன் ஸ்ரீமத் ஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த கிரந்தத்தை அமிர்த கலசம் போன்றதான அவருடைய கலசத்திலிருந்து அந்த ஸாரத்தை நமக்குக் கொடுக்க (அதன் மூலமாக), இந்த உலகில், (இதனை படித்ததால்) மக்களுக்கு முக்தி கிடைக்கும் வழி உண்டாயிற்று.

**பரமதத்வாஸார யோகீ[3]**
**ஶ்வரர மனகெ விஹார ஸஜ்ஜன**
**நெரவிக[3]ள ஶ்ருதிகோ[3]ஷ்பதிஹ ஸ்ருங்கா[3]ரலங்கார |**
**ஶரணஜன மந்தா[3]ர வெனிஸுவ**
**ஹரிகதா[2]ம்ருதஸார கேள்த[3]ரெ**
**து[3]ரித பாராவாரவனு தி[3]ட[1] பாரகாம்பு[3]வனு ||6**

பரம - ஸர்வோத்தமனான ஸ்ரீபரமாத்மனின்; தத்வஸார - தத்வார்த்த ரூபமான பிரமேயங்களின் ஸாரமானது; யோகீஷ்வரர - யோகிகளான பிரம்ம ஞானிகளின்; மனகெ - மனதிற்கு; விஹார - மகிழ்ச்சியைக் கொடுக்கிறது; ஸஜ்ஜன நெரவிகள -

ஸஜ்ஜனர்களின் சமூகத்திற்கு; ஸ்ருதிகெ ஒப்புதிஹ - அபௌருஷேயமான வேத சாஸ்திரங்களுக்கு ஏற்ப; ஸ்ருங்கார அலங்கார - ஸ்ருங்கார ரூபமான அலங்காரங்களைக் கொண்ட திவ்ய கிரந்தம் இது. அதாவது, இதில் உள்ள விஷயங்கள் அனைத்தும் ஸ்ருதி சம்மதமானவையே ஆகும். ஷரணஜன மந்தாரவெனிஸுவ - ஸ்ரீஹரியின் பாத கமலங்களுக்கு சரணடைந்த பக்தர்களுக்கு கல்பவ்ருட்சத்தைப் போல இருக்கும்; ஹரிகதாம்ருதஸார - ஹரிகதாம்ருதஸாரத்தின் அர்த்த விஷயங்கள்; கேள்தரெ - கேட்டால்; துரித பாராபாரவனு - கஷ்டங்கள் என்னும் மகா சாகரத்தினை, தாண்டி, அதன் மறுகரைக்குச் சென்று சேர்பவன் ஆகிறான். திட - இது கண்டிப்பாக நடக்கும்.

சம்சார சாகரத்தினை கடக்க உதவும் கிரந்தம் இது என்று ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தைப் பற்றி புகழ்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஸர்வோத்தமனான ஸ்ரீபரமாத்மனின் தத்வார்த்த ரூபமான பிரமேயங்களின் ஸாரமானது, யோகிகளான பிரம்ம ஞானிகளின் மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அபௌருஷேயமான வேத சாஸ்திரங்களுக்கு ஏற்ப ஸ்ருங்கார ரூபமான அலங்காரங்களைக் கொண்ட திவ்ய கிரந்தம் இது. அதாவது, இதில் உள்ள விஷயங்கள் அனைத்தும் ஸ்ருதி சம்மதமானவையே ஆகும். ஸ்ரீஹரியின் பாத கமலங்களுக்கு சரணடைந்த பக்தர்களுக்கு கல்பவ்ருட்சத்தைப் போல இருக்கும் ஹரிகதாம்ருதஸாரத்தின் அர்த்த விஷயங்களைக் கேட்டால், (சம்சாரம்) கஷ்டங்கள் என்னும் மகா சாகரத்தினைத் தாண்டி, அதன் மறுகரைக்குச் சென்று சேர்பவன் ஆகிறான். இது கண்டிப்பாக நடக்கும்.

**ரோக3ப4யவெந்தெ3ந்து3 பா3ரது3**
**ஆக3த3பஜய து4ரதி3 ப3யஸித3**
**போ4க3 ஶுப4 கல்யாணவப்பது3 ஸர்வகாலத3லி |**
**ஸ்ரீகி3ரிய மந்தி3ரன கதெ2 லே**
**ஸாகி3 கேளலு தி3னதி3னதி3 ஶுத**

**யாக³ப²ல ப³ஹுதா³யுராரோக்³யாகி³ ஸிரிப³ஹுது³ ||7**

ரோகபய - தேக மற்றும் மனம் சம்பந்தப்பட்ட பயங்கள்; எந்தெந்து பாரது - என்றைக்கும் வராது; துரதி - போர்க்களத்தில்; ஆகதபஜய - என்றும் தோல்வியே வராது; பயஸித போக - விரும்பிய விருப்பங்கள் அனைத்தும்; ஷுப கல்யாணவப்பது - அனைத்து மங்களங்களும் உண்டாகிறது; ஸர்வகாலதலி - அனைத்து காலங்களிலும்; ஸ்ரீகிரிய மந்திரன கதெ - சேஷாசலவாசியான ஸ்ரீனிவாஸனின் கதையை; லேஸாகி கேளலு - சிறிதளவாவது கேட்டால்; தினதினதி - நிரந்தரமாக; ஷத யாகபல - நூறு யக்ஞங்களை செய்த பலன் கிடைக்கிறது; பஹுதாயுராரோக்யாகி - சிறப்பான ஆயுள், ஆரோக்யம் ஆகியவை; ஸிரிபஹுது - செல்வங்கள் கிடைக்கின்றன.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தின் பலன்களை மேலும் இவ்வாறு விளக்குகிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

தேக மற்றும் மனம் சம்பந்தப்பட்ட பயங்கள் என்றைக்கும் வராது. போர்க்களத்தில் என்றும் தோல்வியே வராது. விரும்பிய விருப்பங்கள் அனைத்தும் மற்றும் அனைத்து மங்களங்களும் உண்டாகின்றன. அனைத்து காலங்களிலும் சேஷாசலவாசியான ஸ்ரீனிவாஸனின் கதையை சிறிதளவாவது கேட்டால், நிரந்தரமாக நூறு யக்ஞங்களை செய்த பலன் கிடைக்கிறது. சிறப்பான ஆயுள், ஆரோக்யம் ஆகிய செல்வங்கள் கிடைக்கின்றன.

**வாதி³க³ள எதெ³ ஷூல குமதவ**
**பே⁴தி³ஸுவ கரவால காம**
**க்ரோத⁴ தரிதா³னந்த³வேமது³ ஹரிகதா²ம்ருதவு |**
**பாத³மாத்ரவ படி²ஸுவகெ³ க³ங்**
**கா³தி³ ஸ்னானப²லவு ப³ஹுது³ மே**
**ணோதி³த³வனே த⁴ன்யதம மஸ்தக ஸமக³ரவனு ||8**

வாதிகள - குசாஸ்திரங்களை ஆதரிக்கும் ப்ரதிவாதிகளின்; எதெஷூல - இதயத்தை சூலம் கொண்டு குத்தியதைப் போல

இருக்கிறது (இந்த கிரந்தத்தின் விஷயங்கள்); குமதவ பேதிஸுவ - அத்தகைய குமதங்களை வெல்வதான; கரவால - வாள் ஆக இருக்கிறது; காமக்ரோத - நல்ல ஸாதனைக்கு தடையாக இருப்பதான காம (விஷயங்களின் மேல் உள்ள ஆசை), கோபம் முதலான அரிஷட் வர்க்கங்களை; தரிது - கத்தரித்து (விலக்கி); ஆனந்தவீவுது - மனதிற்கு அமைதியை / மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. ஹரிகதாம்ருதஸாரவு - ஸ்ரீஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த திவ்ய கிரந்த ரத்னமானது; பாதமாத்ரவ படிஸுவகெ - ஒரு பத்யத்தில் ஒரு கால் பாகத்தை மட்டும் படிப்பவனுக்கு; (அல்லது இந்த கிரந்தத்தில் கால் பாகத்தினை படிப்பவனுக்கு); கங்காதி ஸ்னானபலவு - கங்காதி பவித்ரமான நதிகளில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கிறது; மேண் - திரும்பத்திரும்ப; புஸ்தக ஸமக்ரவனு - இந்த கிரந்தத்தினை முழுமையாக; ஓதிதவனே தன்யதம - படிப்பவன் தன்யன் ஆகிறான்.

ஹரிகதாம்ருதஸாரத்தினை படித்தவன் தன்யன் ஆகிறான் என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

குசாஸ்திரங்களை ஆதரிக்கும் ப்ரதிவாதிகளின் இதயத்தை (இந்த கிரந்தத்தின் விஷயங்கள்) சூலம் கொண்டு குத்தியதைப் போல இருக்கிறது. அத்தகைய குமதங்களை வெல்வதான வாள் ஆக இந்த கிரந்தம் இருக்கிறது. நல்ல ஸாதனைக்கு தடையாக இருப்பதான காம (விஷயங்களின் மேல் உள்ள ஆசை), கோபம் முதலான அரிஷட் வர்க்கங்களை கத்தரித்து (விலக்கி), மனதிற்கு அமைதியை / மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. ஸ்ரீஹரிகதாம்ருதஸாரம் என்னும் இந்த திவ்ய கிரந்த ரத்னமானது, ஒரு பத்யத்தில் ஒரு கால் பாகத்தை மட்டும் படிப்பவனுக்கு, (அல்லது இந்த கிரந்தத்தில் கால் பாகத்தினை படிப்பவனுக்கு), கங்காதி பவித்ரமான நதிகளில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கிறது. திரும்பத்திரும்ப இந்த கிரந்தத்தினை முழுமையாக படிப்பவன் தன்யன் ஆகிறான்.

**ஏனு த4ன்யரு நம்ம கு3ரு பவ**
**மான மததொ3ளகெ3ஸெவ சதுர ம**
**ஹானுபா4வரு எனிப வெங்கட நரம்ருகே3ந்த்3ராக்2ய |**
**ஞானநிதி4 முக2தி3ந்த3லுதி3ஸித3**
**ஸ்ரீனிவாஸன சரிதெஸுதெ4யனு**
**பானகெ3ய்யலு மனத3ணியரெந்தெ3ந்து3 ஸஜ்ஜனரு ||9**

நம்ம குரு பவமான மததொளு - ஜகத்குருவான, நம் மூலகுருவான, வாயுதேவரின் மூன்றாவது அவதாரரான, ஸ்ரீமன் மத்வாசார்யர் நிறுவிய த்வைத மதத்தில்; எஸெவ - ஒளிர்பவரான; சதுர - ஞான சம்பன்னரான; மஹானுபாவரு எனிப - மஹானுபாவர் எனப்படுபவரான; வெங்கட நரம்ருகேந்த்ராக்ய - வெங்கட நரஸிம்மாசார்யர் என்று பெயர் கொண்ட; ஞானநிதி - ஞான ஸம்பன்னரான ஸ்ரீனிவாஸாசார்யரின்; முகதிந்த - திவ்ய முகத்திலிருந்து / வசனங்களினால்; உதிஸித - தோன்றியதான; ஸ்ரீனிவாஸன சரிதெஸுதெயனு - ஸ்ரீஹரியின் கதாம்ருத ஸாரத்தினை; பானகெய்யலு - குடிப்பதற்கு (படிப்பதற்கு / அனுபவிப்பதற்கு); ஸஜ்ஜனரு - ஸஜ்ஜனர்கள்; எந்தெந்து - என்றைக்கும்; மனதணியரு - அவர்கள் என்றும் சோர்வு கொள்வதில்லை.

ஸஜ்ஜனர்கள் மிகவும் விரும்பி இந்த கிரந்தத்தினை படிக்கிறார்கள் என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஜகத்குருவான, நம் மூலகுருவான, வாயுதேவரின் மூன்றாவது அவதாரரான, ஸ்ரீமன் மத்வாசார்யர் நிறுவிய த்வைத மதத்தில் ஒளிர்பவரான, ஞான சம்பன்னரான, மஹானுபாவர் எனப்படுபவரான வெங்கட நரஸிம்மாசார்யர் என்று பெயர் கொண்ட, ஞான ஸம்பன்னரான ஸ்ரீனிவாஸாசார்யரின், திவ்ய முகத்திலிருந்து / வசனங்களினால் தோன்றியதான ஸ்ரீஹரியின் கதாம்ருத ஸாரத்தினை குடிப்பதற்கு (படிப்பதற்கு / அனுபவிப்பதற்கு) ஸஜ்ஜனர்கள் என்றைக்கும் சோர்வு கொள்வதில்லை. (இதன் மகிமையை / சிறப்பினை உணர்ந்து, விரும்பியே படிக்கிறார்கள் என்று பொருள்).

**அண்டஜாதி$^{4}$ப துரக$^{3}$னடி$^{3}$ கர**
**தி$^{3}$ண்ட$^{3}$க$^{3}$ளனனவரத ப$^{4}$ஜிஸுத**
**பண்டிதரிகிது$^{3}$ ஸொகு$^{3}$ஸுதோ$^{3}$ருவத$^{3}$த$^{4}$ம மனுஜரிகெ$^{3}$ |**
**கெண்ட$^{3}$ ஸத்$^{3}$ருஶவு முட்டலாபதெ$^{3}$**
**ப$^{3}$ண்டு$^{3}$ணியு சம்பக ஸுபுஷ்பவ**
**கண்ட$^{3}$வோல் குஜனரிக$^{3}$ஸாத்$^{3}$யவு ஹரிகதா$^{2}$ம்ருதவு ||10**

அண்டஜாதிப - பட்சிகளில் சிறந்தவரான ஸ்ரீகருட தேவர்; துரகின - இவரின் வாகனனான (கருடனை வாகனமாகக் கொண்டிருப்பவனான) ஸ்ரீகிருஷ்ணனின் ; அடிகரதிண்டகளனு - சரண கமலங்களை; அனவரத - இடைவிடாமல் தொடர்ந்து; பஜிஸுவ - கொண்டாடும்; பண்டிதரிகெ - ஞானிகளுக்கு; இது - இந்த கிரந்தத்தில் இருக்கக்கூடியதான விஷயங்கள்; ஸொகஸுதோருவுது - மிகவும் ருசியாக தென்படுகிறது. (படிப்பதற்கு சுவையாக இருக்கிறது); அதமமனுஜரிகெ - நீச மனஸ் கொண்டவர்களுக்கு; கெண்ட ஸத்ருஷவு - நெருப்புக் கங்கு போல சுடுகிறது; முட்டலாவுதெ - துர்ஜனர்களால் இந்த கிரந்தம் தொடப்படக்கூடியதா?. அதாவது, அவர்கள் இதனை என்றும் படிக்க மாட்டார்கள் என்பது பொருள். பண்டுணியு - தும்பியானது; சம்பக ஸுபுஷ்பவ - ஸம்பிகெ பூவினை; கண்டவோல் - பார்த்த உடனேயே, அதன் அருகில் சென்று, அதில் உள்ள மகரந்தங்களை சுவைப்பதைப் போல, ஸுஜனர்கள் இந்த கிரந்தத்தில் உள்ள விஷயங்களை உணர்ந்து உண்பார்கள்; ஹரிகதாம்ருதவு - ஹரிகதை என்னும் அமிர்தத்தினை; குஜனரிகெ - கெட்ட புத்தி கொண்ட மக்களுக்கு; அஸாத்யவு - இது என்றைக்கும் அஸாத்தியமே ஆகும்.

ஸஜ்ஜனர்கள் இந்த கிரந்தத்தினை, அதில் உள்ள விஷயங்களின் அருமையை உணர்ந்து, இதனை ஏற்றுக் கொள்கிறார்கள் என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

பட்சிகளில் சிறந்தவரான ஸ்ரீகருட தேவரின் வாகனனான ஸ்ரீகிருஷ்ணனின் சரண கமலங்களை இடைவிடாமல் தொடர்ந்து கொண்டாடும் ஞானிகளுக்கு, இந்த கிரந்தத்தில்

இருக்கக்கூடியதான விஷயங்கள் மிகவும் ருசியாக தென்படுகிறது. (படிப்பதற்கு சுவையாக இருக்கிறது). நீச மனம் கொண்டவர்களுக்கு, இது நெருப்புக் கங்கு போல சுடுகிறது. துர்ஜனர்களால் இந்த கிரந்தம் தொடப்படக்கூடியதா?. அதாவது, அவர்கள் இதனை என்றும் படிக்க மாட்டார்கள் என்பது பொருள். தும்பியானது ஸம்பிகெ பூவினை பார்த்த உடனேயே, அதன் அருகில் சென்று, அதில் உள்ள மகரந்தங்களை சுவைப்பதைப் போல, ஸுஜனர்கள் இந்த கிரந்தத்தில் உள்ள விஷயங்களை உணர்ந்து உண்பார்கள். ஹரிகதை என்னும் அமிர்தத்தினை, கெட்ட புத்தி கொண்ட மக்களுக்கு, இது என்றைக்கும் அஸாத்தியமே ஆகும்.

**பரமதத்வ ரஹஸ்யவித$^{3}$னு**
**ச்சரிஸலு ப$^{3}$ரெத$^{3}$ வைஷ்ணவரிகி$^{3}$து$^{3}$**
**கரகரிய ஸம்ஸாரவெம்ப$^{3}$ப்$^{3}$தி$^{4}$யொளு முணுகி$^{3}$ருவ |**
**நரரிகொ$^{3}$ரெயலு பா$^{3}$ரதெ$^{3}$ந்தி$^{3}$கு$^{3}$**
**கரணஷுத்$^{3}$தி$^{4}$க$^{3}$ளிந்த$^{3}$ சரிஸுவ**
**ஹரிய தா$^{3}$ஸோத்தமரிக$^{3}$ருஹலு ஸப$^{2}$லவாகு$^{3}$வுது$^{3}$ ||11**

பரம தத்வ ரஹஸ்யவிது - இந்த கிரந்தமானது, மிகவும் சிறந்ததான மற்றும் ஆழமான தத்வ ரகசியங்களைக் கொண்டிருக்கிறது. இதனு உச்சரிஸலு - இந்த மகா காவியத்தின் பத்யங்களை பக்தியுடன் படித்தால்; பரெத - மற்றும் இதனை / இதனைப் பற்றி எழுதினால், அப்படி எழுதியவருக்கு; வைஷ்ணவரிகெ - அந்த வைஷ்ணவ பக்தர்களுக்கு; இது - இந்த கிரந்தமானது; கரகரியு - பற்பல விதமான துக்கங்கள் நிறைந்த; ஸம்ஸாரவெம்ப அப்தியொளு முணுகிருவ - ஸம்ஸாரம் என்னும் மகா ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும்; நரரிகெ - மனிதர்களுக்கு; ஒரெயலு - சொல்ல (உபதேசம் செய்ய) முடியாது; எந்தெந்திகு - என்றும் அவர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது; கரணஷுத்திகளிந்த - த்ரிகரண ஷுத்திகளால்; சலிஸுவ - ஸஞ்சரிக்கும்; ஹரிய தாஸோத்தமரிகெ - ஸ்ரீஹரியின் பக்த

வர்க்கத்திற்கு; அருஹலு - இதனை கூறினால்; ஸபலவாகுவுது - ஸார்த்தகம் ஆகிறது.

இந்த கிரந்தத்தை யார் படிக்கலாம், யார் படிக்க மாட்டார்கள் என்பதை தெளிவாக விளக்குகிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

இந்த கிரந்தமானது, மிகவும் சிறந்ததான மற்றும் ஆழமான தத்வ ரகசியங்களைக் கொண்டிருக்கிறது. இந்த மகா காவியத்தின் பத்யங்களை பக்தியுடன் படித்தால், மற்றும் இதனைப் பற்றி எழுதினால், அப்படி எழுதியவருக்கு, அந்த வைஷ்ணவ பக்தர்களுக்கு தக்க பலன்களைக் கொடுக்கிறது. மாறாக, இந்த கிரந்தமானது, பற்பல விதமான துக்கங்கள் நிறைந்த ஸம்ஸாரம் என்னும் மகா ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் மனிதர்களுக்கு (உபதேசம் செய்ய) சொல்ல முடியாது என்றும் அவர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது . த்ரிகரண ஷுத்திகளால் ஸஞ்சரிக்கும் ஸ்ரீஹரியின் பக்த வர்க்கத்திற்கு இதனை கூறினால் ஸார்த்தகம் ஆகிறது.

**ஸ்னான ஸந்த்யாவந்த$^3$னேதக்கெ**
**மௌன ஜபதப ஹோமவேதக்கெ**
**தா$^3$ன காயக்லேஶ தீர்த்த$^2$ க்ஷேத்ரயாத்ரெக$^3$ள |**
**தானெஸக$^3$லேகமல ப$^4$க்தி**
**ஞானபூர்வக ஹரிகதெ$^2$ய ஸ**
**ன்மானதி$^3$ம் கேளித$^3$ரெ ஸர்வவு ஸித்$^3$தி$^4$யாக$^3$வது$^3$ ||12**

ஸ்னான ஸந்த்யாவந்தனெ ஏதகெ - நித்ய நைமித்திக கர்மங்களான ஸ்னான ஸந்த்யாவந்தனாதி கர்மங்கள் மிகவும் கட்டாயமாக செய்ய வேண்டியவை. ஆனால், அவற்றை ஞான அனுசந்தானத்தினைக் கொண்டு செய்ய வேண்டும். இத்தகைய அனுசந்தானம் இல்லாமல் செய்யக் கூடிய கர்மங்கள் பலன்களைக் கொடுப்பதில்லை. இத்தகைய ஞானமானது, இந்த அற்புத கிரந்தத்தின் மூலம் நமக்குக் கிடைக்கிறது என்பது பொருள். மௌன ஜபதப - மௌன விரதத்தை செய்து, ஜப தபங்களை அனுஷ்டித்தால் - அவை பகவத் சிந்தனையுடன் செய்யா விட்டால்,

எவ்வித பலன்களையும் கொடுப்பதில்லை. ஹோமவேகெ - கலியுகத்தில் யக்ஞ யாகாதிகளால் எவ்வித பலன்களும் வருவதில்லை. ஸ்ரீஹரி நாமஸ்மரணை மட்டுமே தாரகம் ஆகும். தான - யாருக்குக் கொடுக்க வேண்டும் என்பதை அறியாமல் கொடுக்கப்படும் தானங்கள், காயக்லேஷ - முதுமையினால் உண்டாகும் துக்கங்கள்; தீர்த்த க்ஷேத்திர யாத்திரெகள - தீர்த்த க் ஷேத்திர யாத்திரைகளை; தானு எஸகலேனு - க்ஷேத்திர மூர்த்தி, அவருடைய அபிமானி தேவதா மகிமை, அந்த க்ஷேத்திரத்தின் மகிமையை அறியாமல், ஞானம் இல்லாமல், வெறும் அந்த க் ஷேத்திரத்தை சுற்றி வந்தால், இதனால் வரும் பலன் என்ன?. அமலபக்தி ஞான பூர்வக - சந்தேகங்கள் அற்ற, யதார்த்த ஞானத்துடன் கூடிய தூய்மையான பக்தியுடன்; ஹரிக்தெய - ஸ்ரீபரமாத்மனின் லீலா வினோதங்களின் ரூபமான சரித்திரங்களை; ஸுக்ஞானதிம் - மஹத்வ ஞான பூர்வகமாக; கேளிதரெ - ஸ்ரத்தா பக்தியுடன் கேட்டால்; ஸர்வவு ஸித்தியாகுவுது - அனைத்து விருப்பங்களும் நிறைவேறுகின்றன.

பகவந்தனின் யதார்த்த ஞானத்தினை இந்த அற்புத க்ரந்தமானது நமக்குக் கொடுக்கிறது என்று அழகாக விளக்கியுள்ளார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

நித்ய நைமித்திக கர்மங்களான ஸ்னான ஸந்த்யாவந்தனாதி கர்மங்கள் மிகவும் கட்டாயமாக செய்ய வேண்டியவை. ஆனால், அவற்றை ஞான அனுசந்தானத்தினைக் கொண்டு செய்ய வேண்டும். இத்தகைய அனுசந்தானம் இல்லாமல் செய்யக் கூடிய கர்மங்கள் பலன்களைக் கொடுப்பதில்லை. இத்தகைய ஞானமானது, இந்த அற்புத கிரந்தத்தின் மூலம் நமக்குக் கிடைக்கிறது என்பது பொருள். மௌன விரதத்தை செய்து, ஜப தபங்களை அனுஷ்டித்தால், அவற்றை பகவத் சிந்தனையுடன் செய்யாவிட்டால், எவ்வித பலன்களையும் கொடுப்பதில்லை. கலியுகத்தில் யக்ஞ யாகாதிகளால் எவ்வித பலன்களும் வருவதில்லை. ஸ்ரீஹரி நாமஸ்மரணை மட்டுமே தாரகம் ஆகும்.

* யாருக்குக் கொடுக்க வேண்டும் என்பதை அறியாமல் கொடுக்கப்படும் தானங்கள்,

* முதுமையினால் உண்டாகும் துக்கங்கள்,

* தீர்த்த க்ஷேத்திர யாத்திரைகளை; க்ஷேத்திர மூர்த்தி, அவருடைய அபிமானி தேவதா மகிமை, அந்த க்ஷேத்திரத்தின் மகிமையை அறியாமல், ஞானம் இல்லாமல், வெறும் அந்த க்ஷேத்திரத்தை சுற்றி வந்தால்:

இதனால் வரும் பலன் என்ன?.

சந்தேகங்கள் அற்ற, யதார்த்த ஞானத்துடன் கூடிய தூய்மையான பக்தியுடன்; ஸ்ரீபரமாத்மனின் லீலா வினோதங்களின் ரூபமான சரித்திரங்களை; மஹத்வ ஞான பூர்வகமாக; ஸ்ரத்தா பக்தியுடன் கேட்டால்; அனைத்து விருப்பங்களும் நிறைவேறுகின்றன.

**ஹரிகதா$^{2}$ம்ருதஸார புஸ்தக**
**ஸுரமஹீருஹ அத$^{3}$க்கெ ஶாகெ$^{2}$க$^{3}$**
**ளெரடு$^{3}$ நால்கெரடெ$^{3}$ம்ப$^{3}$ ஸந்தி$^{4}$க$^{3}$ளித$^{3}$கெ முன்னூரு |**
**எரடு$^{3}$ முன்னூரிப்பத்து அரவத்தெண்டு பத$^{3}$க$^{3}$ள**
**வரமது$^{4}$ரப$^{2}$ல வருணவாக$^{3}$லு**
**ஹருஷதி$^{3}$ம் ஸவிஸவிது$^{3}$ருசிக$^{3}$ள பொக$^{3}$ள்வரே பு$^{3}$த$^{4}$ரு || 13**

ஹரிகதாம்ருதஸார புஸ்தக - ஸ்ரீமத் ஹரிகதாம்ருத ஸார என்னும் இந்த கிரந்தமானது; ஸுரமஹீருஹ - தேவதைகளின் வ்ருக்ஷமான கல்பவ்ருட்சத்தினை போல இருக்கிறது. அதக்கெ - இந்த கிரந்தத்திற்கு; ஷாககளு - கிளைகள்; எரடு நால்கு எரடெம்ப - 4x4x2 = 32 என்னும் எண்ணிக்கையில்; ஸந்திகளு - சந்திகள் உள்ளன; இதகெ - இந்த கிரந்தத்திற்கு; முன்னூரு எரடு முன்னூரு அரவத்தெண்டு பதகள - 300x2=600 + 320 + 68 = 988 பத்யங்களின்; வரமதுரபலவு = மிகவும் சிறந்ததான பலன்கள்; அருணவாகலு - கிடைப்பதற்கு; புதரு - ஞானிகள்; ஹருஷதிம் - மிகவும் மகிழ்ச்சியுடன்; ஸவிஸவிது - திரும்பத்திரும்ப இதன் சுவைகளை அறிந்து; ருசிகள பொகள்வரே - இதன் சுவைகளை புகழ்வார்கள்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தில் உள்ள சந்தி / பத்யங்களின் எண்ணிக்கைகளை சொல்லி, அதன் பலன்களையும் சொல்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஸ்ரீமத் ஹரிகதாம்ருத ஸார என்னும் இந்த கிரந்தமானது, தேவதைகளின் வ்ருக்ஷமான கல்பவ்ருட்சத்தினை போல இருக்கிறது. இந்த கிரந்தத்திற்கு கிளைகளாக, 4x4x2=32 என்னும் எண்ணிக்கையில் சந்திகள் உள்ளன இந்த கிரந்தத்திற்கு 300x2=600 + 320 + 68 = 988 பத்யங்களின் மிகவும் சிறந்ததான பலன்கள் கிடைப்பதற்கு , ஞானிகள் மிகவும் மகிழ்ச்சியுடன் திரும்பத்திரும்ப இதன் சுவைகளை அறிந்து அதனை புகழ்வார்கள்.

**த$^{3}$ஷ ஸுஸந்தி$^{4}$யொளிப்ப ஸ்லோக$^{1}$க$^{3}$**
**ளெஸெவ நவரத்னாதி$^{3}$ மணிக$^{3}$ள**
**ப்ரஸர மணிக$^{3}$ஞ்ஞான ப$^{4}$க்திகளெம்ப$^{3}$ கரதி$^{3}$ந்த$^{3}$ |**
**எஸகி$^{3}$ நவரத்னக$^{3}$ள மொடிக$^{3}$**
**ளஸம ஸ்ரீ ஜகன்னாத$^{2}$விட்ட$^{2}$லன**
**பி$^{3}$ஸஜ பாத$^{3}$க்கிட$^{3}$லு ஸேவெயனொட$^{3}$னெ கைகொம்ப$^{3}$ ||14**

தஷஸு ஸந்தியொளிப்ப - 32 சந்திகளில் ஏதாவது ஒரு 10 சந்திகளில் சொல்லப்பட்டிருக்கும்; ஸ்லோககளெஸெவ - ஸ்லோகங்கள் என்னும்; நவரத்னாதி மணிகள - நவரத்தின மணிகள் என்னும்; ப்ரஸர - ஒளிர்வதான; மணிகஞ்ஞான பக்திகளெம்ப - ஞான பக்தி என்னும் மாணிக்கங்களால்; கரதிந்த எஸகி - கையினால் தயாரித்து; நவரத்னகள - நவரத்தினங்களின்; மொடிகள - மூட்டையை; அஸம - அற்புத மகிமைகளைக் கொண்ட; ஸ்ரீஜகன்னாத விட்டலன - ஸ்ரீஜகன்னாத விட்டலனின்; பிஸஜ பாதக்கிடலு - சரண பத்மங்களுக்கு சமர்ப்பிக்க; ஸெவெயெனு ஒடனே கை கொம்ப - பக்தர்களின் சேவையினை உடனே அவன் ஏற்றுக் கொள்கிறான்.

ஹரிகதாம்ருதஸாரத்தை முழுமையாக படிக்க முடியாவிட்டாலும், குறைந்த பட்சம் 10 சந்திகளாவது படித்தால்,

ஸ்ரீஹரி மகிழ்ந்து அருள்கிறான் என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

32 சந்திகளில் ஏதவது ஒரு 10 சந்திகளில் சொல்லபட்டிருக்கும் ஸ்லோகங்கள் என்னும் நவரத்தின மணிகள் கொண்டு ஒளிர்வதான, ஞான பக்தி என்னும் மாணிக்கங்களால் கட்டப்பட்டு, கையினால் தயாரிக்கப்பட்ட, நவரத்தினங்களின் மூட்டையை, அற்புத மகிமைகளைக் கொண்ட ஸ்ரீஜகன்னாத விட்டலனின் சரண பத்மங்களுக்கு சமர்ப்பிக்க பக்தர்களின் சேவையினை உடனே அவன் ஏற்றுக் கொள்கிறான்.

**நவரஸாலங்கார ஶாஸ்த்ரவ**
**விவரிஸலு ப$^3$ஹுத$^3$தி$^1$ சமத்க்ருதி**
**கவித$^1$வனு வர்ணிஸலு ப$^3$ஹுதீ$^3$ ஸ்ரீமனோஹரன |**
**ஸ்தவன கு$^3$ணக$^3$ள தத்வஸாரவ**
**அவனிஜனரிகெ$^3$ பேளலொஶவே**
**தி$^3$விப$^4$வரிக$^3$ல்லத$^3$லெ ஹரியகதா$^2$ம்ருத ஸ்னான ||15**

நவரஸாலங்கார - மகாகாவியங்களுக்கு இருக்க வேண்டிய நவரஸ அலங்காரங்களைக் கொண்டு ஒளிர்வதான; ஷாஸ்த்ரவ - அதன் பிரமேயங்களையும்; விவரிஸலு - வ்யாக்யானம் செய்ய; பஹுததி சமத்க்ருதி - மிகவும் அற்புதமான சமத்கார ரூபமான புலமைத் திறன்; கவிதவனு - இந்த கிரந்தத்தினை; வர்ணிஸலு - விவரிக்க; பஹுது - ஸாத்தியம் ஆகிறது; ஈ ஸ்ரீமனோஹரன - ஸ்ரீமனோகரன் என்னும் ஸ்ரீஹரியின்; ஸ்தவன குணகள - ஸ்தோத்திர ரூபமான குணங்களை; தத்பிரஸாதவ - அதன் மகிமைகளை; அவனிஜனரிகெ - இந்த பூமியில் இருக்கும் மக்களுக்கு; பேளலு வஷவே - சொல்லி, புரிய வைப்பது என்பது சாத்தியமா?. ஹரிய கதாம்ருதஸ்னான - ஸஜ்ஜனர்களின் அனைத்து பாவ பரிகாரகனான ஸ்ரீஹரியின் சரித்திரம் என்னும் ஸுதா ரூபமான ஸ்னானத்தை (ஞான தீர்த்தத்தில் மூழ்கும் செயல்). திவிஜபவரிகல்லதெலெ - தேவதா அம்ச ஸம்பூதரான ஞானிகளைத் தவிர, வேறு யாருக்கும் சாத்தியமா? - என்பது பொருள்.

ஸ்ரீஜகன்னாத தாஸரை மிகவும் அழகாக இந்த பத்யத்தில் விளக்கி புகழ்ந்துள்ளார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

மகா காவியங்களுக்கு இருக்க வேண்டிய நவரஸ அலங்காரங்களைக் கொண்டு ஒளிர்வதான, சாஸ்திர பிரமேயங்களை வ்யாக்யானம் செய்ய, மிகவும் அற்புதமான சமத்கார ரூபமான புலமைத் திறன் மூலமாகவே இந்த கிரந்தத்தினை விவரிக்க ஸாத்தியம் ஆகிறது. ஸ்ரீமனோகரன் என்னும் ஸ்ரீஹரியின் ஸ்தோத்திர ரூபமான குணங்களை, அதன் மகிமைகளை, இந்த பூமியில் இருக்கும் மக்களுக்கு சொல்லி புரிய வைப்பது என்பது சாத்தியமா?. ஸஜ்ஜனர்களின் அனைத்து பாவ பரிகாரகனான ஸ்ரீஹரியின் சரித்திரம் என்னும் ஸுதா ரூபமான ஸ்னானத்தை (ஞான தீர்த்தத்தில் மூழ்கும் செயல்), தேவதா அம்ச ஸம்பூதரான ஞானிகளைத் தவிர, வேறு யாருக்கும் சாத்தியமா? - என்பது பொருள்.

**ஸ்ரீமனோஹர விட்டல தா3ஸன**
**ப்ரேமதி3ம் கரவிடி3த3 கு3ண நி**
**ஸ்ஸீம ஸ்ரீஜக3ன்னாத2விட்ட2லன ப4ஜகரெந்தெ3னிப |**
**ஆ மஹாத்மர ஞானவித்4யெய**
**நாமவனுதி3ன ஸ்மரிஸலவரிகெ3**
**காமிதார்த்த2க3ளு தொ3ரெவவு ஸந்தே3ஹவேனித3கெ ||16**

ஸ்ரீமனோஹர விட்டல தாஸன - ஸ்ரீமனோகர விட்டல தாஸர் என்னும் இவரை; ப்ரேமதிம் - மிகவும் அன்புடன்; கரவிடித - கை பிடித்த (அங்கித உபதேசம் அளித்த, ஸ்வரூப உத்தாரகம் செய்த); குண நிஸ்ஸீம - அற்புதமான, எல்லைகள் அற்றவரான; ஸ்ரீஜகன்னாத விட்டலன - ஸ்ரீஜகன்னாத விட்டலனின்; பஜகரெந்தெனிப - தாஸர் என்று பெயர் பெற்றவரான; ஆ மஹாத்மர - மகாமகிமரான ஸ்ரீஜகன்னாத தாஸரின்; ஞானவித்யெய - தத்வஞானாத்மகமான வித்யையை; நாவனுதின - பெயரினை தினம்தோறும்; ஸ்மரிஸலு - நினைக்க; அவரிகெ - அவருக்கு; காமிதார்த்தகளு - அனைத்து இஷ்டார்த்தங்களும்;

தொரெவவு - கிடைக்கின்றன; ஸந்தேஹவேனிதகெ - இதில் எவ்வித சந்தேகங்களும் இல்லை.

ஸ்ரீஜகன்னாத தாஸரை தினம்தோறும் நினைத்தாலே நம் இஷ்டார்த்தங்கள் பலிக்கின்றன என்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

ஸ்ரீமனோகர விட்டல தாஸர் என்னும் இவரை மிகவும் அன்புடன் கை பிடித்த (அங்கித உபதேசம் அளித்த, ஸ்வரூப உத்தாரகம் செய்த) அற்புதமான, எல்லையற்ற மகிமைகளைக் கொண்டவரான, ஸ்ரீஜகன்னாத விட்டலனின் தாஸர் என்று பெயர் பெற்றவரான, மகாமகிமரான ஸ்ரீஜகன்னாத தாஸரின் தத்வஞானாத்மகமான வித்யையை, அவரது பெயரை தினம்தோறும் நினைப்பவர்களுக்கு அனைத்து இஷ்டார்த்தங்களும் கிடைக்கின்றன. இதில் எவ்வித சந்தேகங்களும் இல்லை.

**இருளுஹக$^{3}$லருவத்து க$^{4}$ளிகெ$^{3}$ய**
**பரிபரிய தி$^{3}$வஸத$^{3}$லி ஸந்தத**
**நிரந்தர ஸம்ஸாரவெம்ப$^{3}$ப்$^{3}$தி$^{4}$யொளு முளுகி$^{3}$ரதெ$^{4}$ ।**
**அரெக$^{4}$ளிகெ$^{3}$ ஸத்ப$^{4}$க்தியலி ஸ்ரீ**
**ஹரிகதா$^{2}$ம்ருதஸார ஸவித$^{3}$ரெ**
**ஸிரிமனோஹர விட்ட$^{2}$லனடிதா$^{3}$வரெய ஸேருவரு ।।17**

இருளு ஹகலு - இரவும் பகலுமாக; அருவத்து களிகெய - 60 நாழிகைகளில்; பரிபரிய - விதம்விதமாக; திவஸதலி - அனைத்து நாட்களிலும்; ஸந்தத நிரந்தர - எப்போதும் நிரந்தரமாக; ஸம்ஸாரவெம்ப - சம்சாரம் என்னும்; அப்தியொளு - சாகரத்தில்; முளுகிரதெ - மூழ்கியிருக்காமல்; அரகளிகெ - அரை நாழிகையாவது; ஸத்பக்தியலி - ஸத் பக்தியில்; ஸ்ரீஹரிகதாம்ருதஸார - ஸ்ரீஹரிகதாம்ருத ஸாரம் என்னும் இந்த கிரந்தத்தினை; ஸவிதரெ - சுவைத்தால் (படித்தால் / எழுதினால் / கேட்டால் / கூறினால்); ஸிரி மனோகர விட்டலன - ஸ்ரீமனோகர

விட்டலனின்; அடிதாவரெய - பாத கமலங்களை; ஸேருவரு - சென்று சேர்வார்கள்.

இந்த பல ஸ்துதியின் கடைசி பத்யத்தினை, தன் பிம்பமூர்த்தியான ஸ்ரீமனோகர விட்டலனிடம் சமர்ப்பித்து, முடித்து வைக்கிறார் ஸ்ரீமனோகர விட்டல தாஸர்.

60 நாழிகைகள் இருப்பதான ஒரு நாளில், எப்போதும் நிரந்தரமாக, சம்சாரம் என்னும் சாகரத்தில் மூழ்கியிருக்காமல், அதில் ஒரு அரை நாழிகையாவது, ஸத் பக்தியில் ஸ்ரீஹரிகதாம்ருத ஸாரம் என்னும் இந்த கிரந்தத்தினை சுவைத்தால், ஸ்ரீமனோகர விட்டலனின் பாதகமலங்களை போய் நாம் சேரலாம்.

## ஸ்ரீபீமேஶ விட்டல தாஸரின் பல ஸ்துதி

**ஹரிகதா2ம்ருதஸாரஸந்தி4க3**
**ளருஹுவேனு தத்க்ருத மஹாத்மர**
**சரண கருணாப3லவிரலு ஸன்மங்க3ளாசரணா |**
**ஸரஸஸந்தி4ய பேள்த3 ஸுஜனரி**
**க3ருஷ கொடு3வுதுயெந்து3 பரமா**
**த3ரதி3 கருணஸந்தி4 வ்யாப்த ஸுஸந்தி4 போ4ஜனதா3 ||1**

ஹரிகதாம்ருதஸார - ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தின்; ஸந்திகள - ஸந்திகளை; அருஹுவேனு - சொல்வேன்; தத்க்ருத மஹாத்மர - அதனை இயற்றிய மஹாத்மரான ஸ்ரீஜகன்னாத தாஸரின்; சரண கருணாபலவிரலு - கருணை பலத்தினால்; ஸன்மங்களாசரணா - முதலாம் சந்தியான மங்களாசரண (ஸந்தி - 1); ஸரஸ ஸந்திய - தாத்விக விஷயங்கள் நிறைந்ததான சந்தியினை; ஸுஜனரிகெ - ஸஜ்ஜனர்களுக்கு; ஹருஷ கொடுவுதுயெந்து - மகிழ்ச்சியைக் கொடுக்கட்டும் என்று; பேள்த - கூறினார் / இயற்றினார்; பரமாதரதி - மிகவும் பக்தி மரியாதைகளுடன்; கருணஸந்தி - (ஸந்தி-2) கருணா ஸந்தியினை; வ்யாப்த ஸுஸந்தி - (ஸந்தி-3) வ்யாப்த ஸந்தி; போஜனதா - (ஸந்தி-4) போஜன ரஸ விபாக ஸந்தியினை (இயற்றினார்).

முதல் 4 ஸந்திகளின் பெயர்களை இங்கு கொடுத்திருக்கிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.

மஹாத்மரான ஸ்ரீஜகன்னாத தாஸரின் கருணை பலத்தினால் ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தின் ஸந்திகளை சொல்வேன். அவர் இயற்றிய முதலாம் சந்தியான மங்களாசரண (ஸந்தி - 1)யில் தாத்விக விஷயங்கள் நிறைந்ததான சந்தியினை, ஸஜ்ஜனர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கட்டும் என்று கூறினார் / இயற்றினார். அடுத்து, மிகவும் பக்தி மரியாதைகளுடன், (ஸந்தி-2) கருணா ஸந்தியினை, (ஸந்தி-3) வ்யாப்த ஸந்தி, (ஸந்தி-4) போஜன ரஸ விபாக ஸந்தியினை (இயற்றினார்).

**ஸந்தி$^{4}$ஸுக$^{2}$த$^{3}$ விபூ$^{4}$தி ஸிரிகோ$^{3}$**
**விந்த$^{3}$னாக்ஞுதி$^{3}$ பேளித$^{3}$ரு ஆ**
**நந்த$^{3}$ நீடு$^{3}$வ பஞ்சமஹாயக்$^{3}$ஞுத$^{3}$ ஸுஸந்தி$^{3}$யன |**
**ச$^{2}$ந்த$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லே பஞ்சதன்மா**
**த்ரெந்து$^{3}$ கரிஸுவ ஸந்தி$^{4}$ பேள்த$^{3}$ரு**
**இந்தி$^{3}$ரேஷன ப்ரீதி ப$^{3}$டி$^{3}$ஸுவ மாத்ருகா ஸந்தி$^{4}$ ||2**

ஸந்திஸுகத - மகிழ்ச்சியைக் கொடுப்பதான விபூதி ஸந்தி (ஸந்தி-5), ஸிரிகோவிந்தன ஆஞ்ஞுதி பேளிதரு - ஸ்ரீலட்சுமிபதியான வேதபிரதிபாத்யனான, கோ பிராமணர்களை காப்பவனான கோவிந்த நாமக ஸ்ரீபரமாத்மனின் ப்ரேரணையைப் போல கூறினார். ஆனந்தத்தைக் கொடுக்கும் - மகிழ்ச்சியைக் கொடுப்பதான; பஞ்சமஹயக்ஞுத - பஞ்ச மஹாயக்ஞ ஸந்தி (ஸந்தி-6) என்னும்; ஸுஸந்தியனு - தத்வங்கள் நிறைந்ததான ஸந்தியை கூறினார். சந்ததிந்தலெ - மிகவும் விளக்கமாக; பஞ்சதன்மாத்ரெந்து - பஞ்சதன்மாத்ரா என்னும் பெயர் கொண்ட (ஸந்தி-7); கரெஸுவ ஸந்தி பேள்தரு - அழைக்கப்படும் ஸந்தியை இயற்றினார்; இந்திரேஷன - ஸ்ரீரமா நாராயணனான ஸ்ரீபரமாத்மனின்; ப்ரீதி படிஸுவ - அன்பினைப் பெற்ற; மாத்ருகா ஸந்தி - மாத்ருகா ஸந்தியை (ஸந்தி -8) விவரமாக கூறினார்.

சந்திகளின் பெயர்ப் பட்டியலை தொடர்ந்து இவ்வாறு சொல்லி வருகிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.

மகிழ்ச்சியைக் கொடுப்பதான விபூதி ஸந்தியினை (ஸந்தி-5), ஸ்ரீலட்சுமிபதியான வேதபிரதிபாத்யனான, கோ பிராமணர்களை காப்பவனான கோவிந்த நாமக ஸ்ரீபரமாத்மனின் ப்ரேரணையைப் போல கூறினார். மகிழ்ச்சியைக் கொடுப்பதான பஞ்ச மஹாயக்ஞ ஸந்தி (ஸந்தி-6) என்னும் தத்வங்கள் நிறைந்ததான ஸந்தியை கூறினார். மிகவும் விளக்கமாக பஞ்சதன்மாத்ரா என்னும் பெயர் கொண்ட (ஸந்தி-7) ஸந்தியை இயற்றினார். ஸ்ரீரமா நாராயணனான ஸ்ரீபரமாத்மனின் அன்பினைப் பெற்ற மாத்ருகா ஸந்தியை (ஸந்தி -8) விவரமாக கூறினார்.

**வர்ணப்ரக்ரிய ஸந்தி[4] ஸுஜனர**
**கர்ணக[3]ளிக[3]தி ஸ்ராவ்யவெனிபுது[3]**
**தோர்ணத[3]லி ஸர்வப்ரதீக த்[4]யானப்ரக்ரியவா |**
**நிர்ணயிஸித[3]ரு நாடி[3]யனு ஸம்**
**பூர்ண கு[3]ண நாம ஸந்தி[4]யனு**
**ஸ்வர்ணனாபி[4] ப்ரமுக[2] ஜீவன ப்ரக்ரியா ஸந்தி[4] ||3**

வர்ணப்ரக்ரிய ஸந்தி - அடுத்து ஸந்தி-9 - வர்ணப்ரக்ரிய ஸந்தி. இதற்கு ‘உதாத்தானு ஸந்தி’ என்றும் பெயர் இருக்கிறது. ஸுஜனர கர்ணகளிகெ - ஸாத்விகரான பகவத் பக்தர்களின் காதுகளுக்கு, அதிஸ்ராவ்ய வெனிபுது - கேட்பதற்கே மிகவும் இனிமையாக இருக்கிறது. தோர்ணதலி - விரைவாக; ஸர்வப்ரதீக - அடுத்த ஸந்தி-10 - ஸர்வப்ரதீக ஸந்தி; த்யானப்ரக்ரியவ - அதன் அடுத்ததான ஸந்தி-11 - த்யான ப்ரக்ரிய ஸந்தி. இதற்கு ஸ்தாவர ஜங்கம ஸந்தி - என்றும்கூட பெயர் இருக்கிறது. நிர்ணயிஸிதரு - என்று வரிசையாக ஸந்திகளை இயற்றினார். நாடியனு - அடுத்ததான ஸந்தி-12 நாடி ப்ரகரண ஸந்தி; ஸம்பூர்ண குண நாமஸ்மரணெயனு - அடுத்து அனந்த குணபூர்ணனான ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையாக ஸந்தி-13; ஸ்வர்ண நாபி ப்ரமுக ஜீவன ப்ரக்ரியா ஸந்தி - ஸர்வ ஜீவன கல்ப ஸந்தி என்னும் ஸந்தி-14 - இதனை பித்ருகண விசார ஸந்தி என்றும்கூட அழைக்கிறோம்.

சந்திகளின் பெயர்ப் பட்டியலை தொடர்ந்து இவ்வாறு சொல்லி வருகிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.

அடுத்து ஸந்தி-9 - வர்ணப்ரக்ரிய ஸந்தி. இதற்கு ‘உதாத்தானு ஸந்தி’ என்றும் பெயர் இருக்கிறது. இது ஸாத்விகரான பகவத் பக்தர்களின் காதுகளுக்கு கேட்பதற்கே மிகவும் இனிமையாக இருக்கிறது. விரைவாக, அடுத்த ஸந்தி-10 - ஸர்வப்ரதீக ஸந்தி, அதன் அடுத்ததான ஸந்தி-11 - த்யான ப்ரக்ரிய ஸந்தி. இதற்கு ஸ்தாவர ஜங்கம ஸந்தி - என்றும்கூட பெயர் இருக்கிறது, என்று வரிசையாக ஸந்திகளை இயற்றினார். அடுத்ததான ஸந்தி-12 நாடி ப்ரகரண ஸந்தி, அடுத்து அனந்த குணபூர்ணனான ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையாக ஸந்தி-13, ஸர்வ ஜீவன கல்ப ஸந்தி என்னும் ஸந்தி-14 - இதனை பித்ருகண விசார ஸந்தி என்றும்கூட அழைக்கிறோம்.

**வாஸுதே3வன கருணதி3ந்த3லி**
**ஶ்வாஸ ஸந்தி4ய பேளித3ரு ஜக3**
**தீ3ஷனிந்த3லி த3த்த ஸ்வாதந்த்ராக்2ய ஸந்தி4யனா |**
**லேஸெனிப ஸ்வாதந்த்ர விப4ஜன**
**தா3ஸரு ஸரித3ரெல்ல பி3ம்போ3**
**பாஸனத3 ஸந்தி4யனு ஹரிய ஸ்தோத்ர ஸந்தி4யன ||4**

வாஸுதேவன - மோட்சப்ரதனான ஸ்ரீவாஸுதேவ நாமக ஸ்ரீஹரியின்; கருணதிந்தலி - காருண்ய பலத்தினால்; ஷ்வாஸ ஸந்தியனு - ஸந்தி-15 ஷ்வாஸ ஸந்தியை; பேளிதரு - இயற்றினார்; ஜகதீஷனிந்தலி - ஜகத்பிரபுவான ஸ்ரீஹரியின் கருணையால்; தத்த ஸ்வாதந்த்ராக்ய ஸந்தியனு - தத்த ஸ்வாதந்த்ர என்னும் பெயர் கொண்ட ஸந்தியை - ஸந்தி-16, லேஸனிப - மிகவும் முக்கியமான தத்வ அர்த்தங்களைக் கொண்டதான; ஸ்வாதந்த்ர்ய விபஜ - ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய ஸந்தியினை, ஸந்தி 17, மற்றும் ஸர்வ ஸ்வாதந்த்ர்ய ஸந்தி - ஸந்தி-18 என்று இரு விதமான பிரித்து; தாஸரு - ஸ்ரீஜகன்னாத தாஸர்; ஸாரிதெல்ல - அனைத்து இடங்களிலும் பரப்பினார். பிம்போபாஸனத ஸந்தியனு - பிம்ப அபரோக்ஷ ஸந்தியினை;

ஹரிய ஸ்தோத்ர ஸந்தியனு - மற்றும், ஸந்தி-19 ஸ்தோத்ர ப்ரகரண ஸந்தியினை இயற்றினார்.

சந்திகளின் பெயர்ப் பட்டியலை தொடர்ந்து இவ்வாறு சொல்லி வருகிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.

மோட்சப்ரதனான ஸ்ரீவாஸுதேவ நாமக ஸ்ரீஹரியின் காருண்ய பலத்தினால், ஸந்தி-15 ஷ்வாஸ ஸந்தியை இயற்றினார். ஜகத்பிரபுவான ஸ்ரீஹரியின் கருணையால், தத்த ஸ்வாதந்த்ர என்னும் பெயர் கொண்ட ஸந்தியை - ஸந்தி-16, மிகவும் முக்கியமான தத்வ அர்த்தங்களைக் கொண்டதான ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய ஸந்தியினை, ஸந்தி 17, மற்றும் ஸர்வ ஸ்வாதந்த்ர்ய ஸந்தி - ஸந்தி-18 என்று இரு விதமான பிரித்து ஸ்ரீஜகன்னாத தாஸர் அனைத்து இடங்களிலும் பரப்பினார். பிம்ப அபரோக்ஷ ஸந்தியினை ஸ்ரீஹரியின் அருள் கிடைப்பதற்காகவும்; ஸந்தி-19 ஸ்தோத்ர ப்ரகரண ஸந்தி என்று இந்த ஸந்திகளை இயற்றினார்.

**ஸுகு$^3$ண தரதம பா$^4$வ ஸந்தி$^4$யு**
**மிகி$^3$லு ஆவேஷாவதாரவ**
**நக$^3$த$^4$ரன ப$^4$க்தாபராத$^3$ ஸஹிஷ்ணு ஸந்தி$^4$யனு ।**
**ஹக$^3$லு இருளென்னதெ$^3$லெ பிரியரு**
**ப$^3$கெ$^3$ப$^3$கெ$^3$ய ஶாஸ்திரவனு ஶோதி$^4$ஸி**
**ஸுக$^3$திப்ரத$^3$ ப்$^3$ருஹத்தாரதம்யத$^3$ ஸாத$^4$னத$^3$ ஸந்தி$^4$ ।।5**

ஸுகுண தரதம பாவஸந்திய - அடுத்த ஸந்தி-20 ஸந்தியான குண தாரதம்ய ஸந்தியை; மிகிலு ஆவேஷாவதாரவனு - சிறந்ததான, ஆவேஷ அவதார ஸந்தியை ஸந்தி-21 இயற்றினார். இதற்கு ப்ருஹத் தாரதம்ய ஸந்தி என்றும்கூட பெயர் உள்ளது. நகதரன - கோவர்த்தன மலையை தன் சுண்டு விரலால் தூக்கிய ஸ்ரீகிருஷ்ணனின் (அல்லது பாற்கடல் கடையும்போது). பக்தாபராத ஸஹிஷ்ணு ஸந்தியன்னு - ஸந்தி-22 ஆக, பக்தாபராத ஸஹிஷ்ணு ஸந்தியையும் (இதற்கு ஸகலதுரித நிவாரண ஸந்தி என்றும் பெயர் உள்ளது. ஹகலு இருளென்னதெ - இரவு பகல்

என்று பாராமல், அதாவது, தொடர்ந்து இடைவிடாமல், பிரியரு - ஞானிகள் (ஸ்ரீஜகன்னாத தாஸர்); பகெய பகெய சாஸ்த்ரவ ஷோதிஸி - பற்பல விதங்களாக நற்சாஸ்திரங்களை யெல்லாம் ஆராய்ச்சி செய்து; ப்ருஹத் ஸுகதிப்ரத - அதிகமான சுகத்தை கொடுப்பதான; தாரதம்யத ஸாதனத ஸந்தி - கல்ப ஸாதன (ஸந்தி-23) ஸந்தியினை இயற்றினார்.

சந்திகளின் பெயர்ப் பட்டியலை தொடர்ந்து இவ்வாறு சொல்லி வருகிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.

அடுத்த ஸந்தி-20 ஸந்தியான குண தாரதம்ய ஸந்தியை, சிறந்ததான, ஆவேஷ அவதார ஸந்தியை ஸந்தி-21 இயற்றினார். இதற்கு ப்ருஹத் தாரதம்ய ஸந்தி என்றும்கூட பெயர் உள்ளது. கோவர்த்தன மலையை தன் சுண்டு விரலால் தூக்கிய ஸ்ரீகிருஷ்ணனின் (அல்லது பாற்கடல் கடையும்போது). ஸந்தி-22 ஆக, பக்தாபராத ஸஹிஷ்ணு ஸந்தியையும் (இதற்கு ஸகலதுரித நிவாரண ஸந்தி என்றும் பெயர் உள்ளது. இரவு பகல் என்று பாராமல், அதாவது, தொடர்ந்து இடைவிடாமல், மூத்தவரான ஞானிகள் (ஸ்ரீஜகன்னாத தாஸர்), பற்பல விதங்களாக நற்சாஸ்திரங்களையெல்லாம் ஆராய்ச்சி செய்தும், அதிகமான சுகத்தை கொடுப்பதான, கல்ப ஸாதன (ஸந்தி-23) ஸந்தியினை இயற்றினார்.

**தே3வனங்க்4ரிய நெனெவுதலி க்ரீ**
**டா3 விலாஸவரோஹ ஸந்தி4யு**
**தே3வதானுக்ரமணிகா விக்4னேஷ ஸந்தி4யன |**
**பா4வுள்ளணு தாரதம்யவ**
**தா விரசிஸுத தை3த்யதரதம**
**பா4வ நைவேத்3ய ப்ரகரண ஸந்தி4 பேளித3ரு ||6**

தேவன - ஸர்வோத்தமனான தேவாதிதேவனான ஸ்ரீஹரியின்; அங்க்ரிய - சரண கமலங்களை; நெனெயுதலி - மனதில் நினைத்தவாறு (ஸந்தி 24 : பிம்ப பிரதிபிம்ப / பிம்ப அபரோக்ஷ ஸந்தியை); க்ரீடாவிலாஸ - க்ரீடாவிலாஸ ஸந்தி (ஸந்தி-18).

இந்த ஸந்தியின் இன்னொரு பெயர் ஸர்வ ஸ்வாதந்த்ர்ய ஸந்தி. அவரோஹ ஸந்திய - ஆரோஹண தாரதம்ய ஸந்தி (ஸந்தி-25) மற்றும் அவரோஹண தாரதம்ய ஸந்தி (ஸந்தி-26); என்றும் அடுத்து தேவதானுக்ரமணிகா - அடுத்த ஸந்தி-27 ஆக, அனுக்ரமணிகா தாரதம்ய ஸந்தியையும்; விக்னேஷ ஸந்தியனு - விக்னேஷ்வர ஸ்தோத்திர ஸந்தியையும் ஸந்தி-28; பாவவுள்ள அணுதாரதம்யவ - அடுத்த ஸந்தி-29 ஆக, அணு தாரதம்ய ஸந்தியை; தா விரசிஸுத - ஸ்ரீமத் ஜகன்னாத தாஸர் இயற்றியவாறு; தைத்ய தரதம பாவ - தைத்ய தாரதம்ய ஸந்தியை (ஸந்தி-30); நைவேத்ய ப்ரகரண ஸந்தி - நைவேத்ய ப்ரகரண ஸந்தியை (ஸந்தி-31); பேளிதரு - இயற்றினார்.

சந்திகளின் பெயர்ப் பட்டியலை தொடர்ந்து இவ்வாறு சொல்லி வருகிறார் ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர்.
ஸர்வோத்தமனான தேவாதிதேவனான ஸ்ரீஹரியின் சரண கமலங்களை, மனதில் நினைத்தவாறு (ஸந்தி 24 : பிம்ப பிரதிபிம்ப / பிம்ப அபரோக்ஷ ஸந்தியை இயற்றினார். ஆரோஹண தாரதம்ய ஸந்தி (ஸந்தி-25) மற்றும் அவரோஹண தாரதம்ய ஸந்தி (ஸந்தி-26); என்றும், அடுத்த ஸந்தி-27 ஆக, அனுக்ரமணிகா தாரதம்ய ஸந்தியையும்; விக்னேஷ ஸந்தியனு - விக்னேஷ்வர ஸ்தோத்திர ஸந்தியையும் ஸந்தி-28; அடுத்த ஸந்தி-29 ஆக, அணு தாரதம்ய ஸந்தியை ஸ்ரீமத் ஜகன்னாத தாஸர் இயற்றியவாறு, தைத்ய தாரதம்ய ஸந்தியை (ஸந்தி-30), நைவேத்ய ப்ரகரண ஸந்தியை (ஸந்தி-31) இயற்றினார்.

**நீரஜாக்ஷன நெனெது[3] கக்ஷ**
**தாரதம்யத[3] ஸந்தி[4] பேளுத**
**ஸ்ரீரமண க[3]ர்ப்பிஸுதலிரெ பீ[4]மேஶ விட்டலன**
**சாருசரணவ நெனெவுதனுதி[3]ன**
**தா[4]ருணீயொளு மெரெத[3] நம்ம**
**கு[3]ருதொ[3]ரெ ஜக[3]ன்னாதாக்[2]ய தாஸர நெனெவெனனவரத ||7**

நீரஜாக்ஷன - தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியை; நெனெது - சிந்தித்தவாறு; கக்ஷ தரதம்ய ஸந்தி பேளுத - ஸந்தி-32 கடைசி

ஸந்தியான கக்ஷ தாரதம்ய ஸந்தியை இயற்றியவாறு; ஸ்ரீரமணகர்ப்பிஸுதலிரெ - தம் அந்தர்யாமியாக இருந்து இயற்றச் செய்த 32 ஸந்திகளால் கூடிய இந்த ஹரிகதாம்ருதஸாரம் என்னும் கிரந்தத்தினை ரமாபதியான ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தவாறு; அனுதின நெனெயுத - எப்போதும் அனைத்து காலங்களிலும் நினைத்தவாறு; தாருணியொளு - இந்த பூமண்டலத்தில்; மெரெத - நிலைத்திருப்பவரான; நம்மய குருதொரெ - நம் குருவரரான; ஜகன்னாத தாஸர - பரமபூஜ்ய ஸ்ரீமன் ஜகன்னாத தாஸரை; அனவரத நெனெவெனு - எப்போதும் நினைத்துக் கொள்கிறேன். என்று, ஸந்திமாலா ஸந்தியை இயற்றியவரான ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர் இந்த ஸந்தியை முடித்து வைக்கிறார்.

தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியை சிந்தித்தவாறு, ஸந்தி-32 கடைசி ஸந்தியான கக்ஷ தாரதம்ய ஸந்தியை இயற்றியவாறு, 32 ஸந்திகளால் கூடிய இந்த ஹரிகதாம்ருதஸாரம் என்னும் கிரந்தத்தினை, தம் அந்தர்யாமியாக இருந்து இயற்றச் செய்த ரமாபதியான ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தவாறு, எப்போதும் அனைத்து காலங்களிலும் நினைத்தவாறு, இந்த பூமண்டலத்தில் நிலைத்திருப்பவரான நம் குருவரரான பரமபூஜ்ய ஸ்ரீமன் ஜகன்னாத தாஸரை எப்போதும் நினைத்துக் கொள்கிறேன். என்று, ஸந்திமாலா ஸந்தியை இயற்றியவரான ஸ்ரீபீமேஷ விட்டல தாஸர் இந்த ஸந்தியை முடித்து வைக்கிறார்.

## ஸ்ரீ குருஸ்ரீனிவாஸ விட்டல தாஸர் இயற்றிய நிர்குணஸார ஸந்தி

ஸ்ரீஹரி தான் எந்த செயல்களுக்கும் கட்டுப்படாமல், அனைத்து ஜீவர்களிலும் இருந்து, அவரவரகளின் கர்மபலன்களுக்கேற்ப, இப்பிறவியில் அவர்களிடம் நற்செயல்களை செய்வித்து, அவரின் தகுதிக்கேற்ப மோக்ஷாதி பலபுருஷார்த்தங்களைக் கொடுக்கிறான் என்று இந்த சந்தியில் தாசர் விவரித்துள்ளார்.

**வார்த்திக ஷட்பதி.**

**ஸ்ரீரமணி குசகுங்குமாம்கிதத3 ஸொப3கி3னிம்**
**வாரிஜ ப4வேர ருசிதுதிஸூதிஹ பா4க்3யதி3ம்**
**சாருதரவாணி பா4ரதி ப2ணிப விஹக3பதி கி3ரிஜா ரமண முக்2யர |**
**பூ4ரி வந்த3னெய ஸம்பத3தி3ந்த3 மெரெயுதிதூ**
**தா3ரஞானானந்த3 கு3ணபூர்ண வ்யாப்தி ஜக3**
**தா4ர கு3ருவர ஸ்ரீனிவாஸ விட்டல பொரெவ தனகெ3தானே த4ரெயொளு ||1**

குசகுங்குமாங்கிதத ஸூபகினிம் - நித்ய முக்தளான, நித்ய மங்கள ஸ்வரூபளான, நியத பத்னியான; ஸ்ரீரமணி - ஸ்ரீலட்சுமி; வாரிஜ - பிரம்மா; பவேஷரு - முக்யபிராணர்; உசிதுதிஸூதிஹ பாக்யதிம் - பொங்கி வழியக்கூடிய பாக்கியத்தை (அருளக்கூடியவர்களான); சாருதர வாணி - சரஸ்வதி; பாரதி - பாரதி; பணிப விஹகபதி கிரிரா ரமண - கருட சேஷ ருத்ர; முக்யர - ஆகியோரின்; பூரி வந்தனெய - சேவையினை; ஸம்பததிந்தி - பெற்றுக்கொண்டு; மெரெயுதிஹ - மகிழ்ந்திருக்கும்; உதார ஞானானந்த - ஞானானந்த சரீரத்தைக் கொண்ட; குணபூர்ண - குணபூர்ணனான; வ்யாப்தி - அனைத்து இடங்களிலும் நிலைத்தவனான; ஜகதாதார - உலகத்திற்கு ஆதாரனான; குருவர ஸ்ரீனிவாஸ விட்டல - ஸ்ரீனிவாஸ விட்டலன்; தனகெதானு - ஸ்வரமணனான ஸ்ரீஹரி; தரெயொளு - இந்த பூமியில்; பொரெவ - தன் பக்தர்களை காக்கிறான்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாத தாஸர் மங்களாசரண சந்தியில் முதல் பத்யமாக சொல்லியிருப்பதைப் போலவே இங்கும், தாரதம்யத்தின்படி தேவதைகளின் பெயர்களை சொல்லி அவர்களிடம் பூஜையை பெற்றுக் கொள்பவரான ஸ்ரீஹரியின் மகிமைகளை இங்கு சொல்கிறார் ஸ்ரீகுருஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

நித்ய முக்தளான, நித்ய மங்கள ஸ்வரூபளான, ஸ்ரீஹரியின் நியத பத்னியான ஸ்ரீலட்சுமி, பிரம்மா, முக்யபிராணர் ஆகியோருடன், பொங்கி வழியக்கூடிய பாக்கியத்தை (அருளக்கூடியவர்களான)

சரஸ்வதி, பாரதி, கருட சேஷ ருத்ர ஆகியோரின் சேவையினை பெற்றுக்கொண்டு மகிழ்ந்திருக்கும் ஞானானந்த சரீரத்தைக் கொண்ட குணபூர்ணனான, அனைத்து இடங்களிலும் நிலைத்தவனான, உலகத்திற்கு ஆதாரனான ஸ்ரீனிவாஸ விட்டலன், ஸ்வரமணனான ஸ்ரீஹரி, இந்த பூமியில் தன் பக்தர்களை காக்கிறான்.

**முன்ன கு$^{3}$ருவர ஜக$^{3}$ன்னாத$^{2}$விட்டல பேள்த$^{3}$**
**ஸன்னுத கவிதவெனிப ஹரிகதா$^{2}$ம்ருதஸார**
**தன்மத்$^{4}$யதொ$^{3}$ள் தோரிதோரத$^{3}$வோலிப்ப நிர்கு$^{3}$ணஸார ஸங்க$^{3}$தியனு |**
**இன்னு ஜக$^{3}$தொ$^{3}$ளகி$^{3}$ப்ப ஸர்வஜீவாந்தஸ்த$^{2}$**
**தன்ன ஹரி கேளி தோஷிசலெந்து$^{3}$ த$^{4}$ரெயொள**
**த்யுன்னதவதி$^{4}$க ஸர்வஜீவனியமகனல்லி நிந்து$^{3}$னுடி$^{3}$வனு த$^{4}$ரெயொளு ||2**

குருவர ஜகன்னாத விட்டல - குருவரரான, ஜகன்னாத விட்டல அங்கிதஸ்தரான ஸ்ரீதாஸர்; பேள்த – கூறிய ஸன்னுத கவிதவெனிப - அற்புதமான காவியம் எனப்படுவதான; ஹரிகதாம்ருதஸார - ஹரிகதாம்ருத ஸாரத்தில்; தன்மத்யதொள் - அந்த கிரந்தத்தில்; தோரிதோரதவோலிப்ப - தெரிந்தும் தெரியாதவாறு இருப்பதான; நிர்குணஸார ஸங்கதியனு - நிர்குணனான ஸ்ரீஹரியின் ஸார விஷயத்தினை; இன்னு - மேலும்; ஜகதொளகிப்ப - இந்த உலகில் இருக்கும்; ஸர்வஜீவாந்தஸ்த - அனைத்து ஜீவர்களிலும் இருப்பவனான; ஹரி கேளு தோஷிஸலெந்து - ஸ்ரீஹரி கேட்டு மகிழட்டும் என்று; தரெயொள - இந்த பூமியில்; அத்யுன்னதவதிக - மிகவும் அற்புதமான; ஸர்வஜீவ நியமகனல்லி - அனைத்து ஜீவர்களுக்கும் நியாமகனான ஸ்ரீஹரி; நிந்து நுடிவனு தரெயொளு - எனக்குள் இருந்து இதனை சொல்ல வைக்கிறான்.

ஸ்ரீஹரிகதாம்ருத ஸாரத்தில் உள்ள ஸ்ரீஹரியின் மகிமைகளை நான் மேலும் ஒரு முறை ஸ்ரீஹரியின் ப்ரீத்யர்த்தமாக

சொல்கிறேன் என்று சொல்லத் துவங்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

குருவரரான, ஜகன்னாத விட்டல அங்கிதஸ்தரான ஸ்ரீதாஸர் கூறிய அற்புதமான காவியம் எனப்படுவதான ஹரிகதாம்ருத ஸாரத்தில், அந்த கிரந்தத்தில், தெரிந்தும் தெரியாதவாறு இருப்பதான நிர்குணனான ஸ்ரீஹரியின் ஸார விஷயத்தினை, இந்த உலகில் இருக்கும் அனைத்து ஜீவர்களிலும் இருப்பவனான ஸ்ரீஹரி கேட்டு மகிழட்டும் என்று இந்த பூமியில்; மிகவும் அற்புதமான; அனைத்து ஜீவர்களுக்கும் நியாமகனான ஸ்ரீஹரி; எனக்குள்ளும் நின்று, இந்த பல ஸ்துதி ஸந்தியினை (நிர்குண ஸார ஸந்தி) சொல்ல வைக்கிறான்.

**அனபி4மத கர்ம ப்ரவாஹதொ3ள் ஜீவததி**
**யனுபமன வஷவாகி3யிருவ காலக3ளல்லி**
**ஸலெ ஜீவரெல்ல நிஷ்க்ரிய சேதனாபா4ஸரெந்து3 கரெஸுவரு ப3ளிக |**
**அனுபம சரித்ர ஹரி பாலிஸுவனனவரத**
**தனமட3தி3யதி4 தெ3ய்வவெனிப ஜட3ரூபதா3**
**தனுவித்து ஜீவக்ருத கர்மக3ளனாசரிஸி ஸுக்ருத து3ஷ்க்ருதக3ளுண்டே ||3**

அனபிமத கர்ம ப்ரவாஹதொள் - ஸ்ருஷ்டிக்கு முன்னர், ஜீவர்கள் தங்களின் கர்மங்கள் என்ன என்று தெரியாமல், அதை செய்யாமல்; ஜீவததி - ஜீவர்களானவர்கள்; அனுபமன வஷவாகியிருவ காலகளல்லி - அனுபமனான ஸ்ரீஹரியின் வசமாக இருக்கும் காலங்களில்; ஸலெ ஜீவரெல்ல - இந்த ஜீவர்கள் அனைவரும்; நிஷ்க்ரிய சேதனாபாஸரெந்து - 'நிஷ்க்ரிய சேதனாபாஸர்' என்று; கரெஸுவரு - அழைக்கப்படுகிறார்கள்; பளிக - பிறகு; அனுபம சரித்ர ஹரி - அனுபம சரித்திரரான ஸ்ரீஹரி; பாலிஸுவ அனவரத - எப்போதும் அனைவரையும் காப்பவனானவன்; தனமடதியதி தெய்வவெனிப - தன் மனைவியைவிட மிகவும் உத்தமன் எனப்படும் ஸ்ரீஹரி; ஜீவக்ருத கர்மகளனாசரிஸி - அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப ; ஜடரூபதா - ஜட ரூபத்தினால் ஆன; தனுவித்து

- தேகத்தினை கொடுக்கிறான்; ஸுக்ருத துஷ்க்ருதகளுண்டே - இதில் நல்லது கெட்டது உண்டா? (இதில் அவனுக்கு வைஷம்ய எங்கு இருக்கிறது?).

பாரபட்சம் என்னும் நிலை இல்லாதவனான ஸ்ரீஹரி, எப்படி ஸ்ருஷ்டியை செய்கிறான் என்பதை இங்கு சொல்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

ஸ்ருஷ்டிக்கு முன்னர், ஜீவர்கள் தங்களின் கர்மங்கள் என்ன என்று தெரியாமல், அதை செய்யாமல் அனுபமனான ஸ்ரீஹரியின் வசமாக இருக்கும் காலங்களில், இந்த ஜீவர்கள் அனைவரும், 'நிஷ்க்ரிய சேதனாபாஸர்' என்று அழைக்கப்படுகிறார்கள். பிறகு, அனுபம சரித்திரரான ஸ்ரீஹரி, எப்போதும் அனைவரையும் காப்பவனானவன், தன் மனைவியைவிட மிகவும் உத்தமன் எனப்படும் ஸ்ரீஹரி, அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப, ஜட ரூபத்தினால் ஆன தேகத்தினை கொடுக்கிறான். இதில் நல்லது கெட்டது உண்டா? (இதில் அவனுக்கு வைஷம்ய எங்கு இருக்கிறது?).

இதையே ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தில், ஸ்ரீஜகன்னாத தாஸர் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

அனபிமத கர்மப்ரவஹறொளகெ
அனிமேஷாதி சமஸ்தசேதன
கணவிஹுது தத்பலகளுண்ணதெ ஸ்ருஷ்டிசுவ முன்ன |
வனிதெயிந்தொடகூடி கருணா
வனதி நிர்மிஸெ தம்ம தம்மய
அனுசிதோசித கர்மபலகள உணுத சரிசுவரு || (22-26)

ஜீவர்கள் ஸ்ருஷ்டிக்கு வருவதற்கு முன்னர், அனாதி காலத்திலிருந்து வரும் கர்மத்திற்கு கட்டுப்பட்டு இருந்தாலும், அந்த கர்மங்களை செய்வதற்கு அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. கர்மபலன்களை அனுபவிப்பதில்லை. தம் யோக்யதை இத்தகையது என்று அவர்களுக்கு தெரிவதில்லை.

இத்தகைய ஜீவர்கள் ஸாத்விக, ராஜஸ, தாமஸ பேதத்தினால், தேவதைகள், தைத்யர்கள், மனிதர்கள் முதலான ஜாதியில் பிறந்து, கர்மங்களை செய்வதற்கு தகுதியானவர்கள் பலர் இருக்கின்றனர். கருணா சமுத்திரனான ஸ்ரீஹரி, தன் மனைவியான ரமாதேவியுடன் சேர்ந்து, தேவ தைத்ய மனுஷ்யாதிகளை ஸ்ருஷ்டிக்க, அவரவரின் யோக்யதைக்கேற்ப, புண்ய பாபாதி கர்மங்களை செய்து, பலன்களை ஏற்றுக் கொண்டு, பூமி, ஸ்வர்க்க, நரகாதிகளில் சஞ்சரிக்கின்றனர்.

**தன்ன மனப3ந்த3 தெரெத3ந்தெ ஜீவரொளித்து3**
**பி4ன்னகு3ணரூப க்ரியாதி3க3ள தோருவம்**
**ஸன்னுத ஸுமார்க்க து3ர்மார்க்க3 மத்4யமவெந்து3 கரெஸுதிப்பம் த4ரெயொளு |**
**தன்ன மனப3ந்த3 தாமஸவ ஸ்வீகரிஸுவம்**
**தன்னமதவல்லதி3ஹ ஸாத்விகவனோகரிப**
**தன்ன மனவாரெ ராஜஸவெந்து3 கரெது3 நடெ3வம் தானெ ராஜஸதொ3ளு ||4**

தன்ன மனபந்த தெரெதந்தெ - தன் இஷ்டப்படி; ஜீவரொளித்து - ஜீவர்களில் இருந்துகொண்டு பின்னகுணரூப க்ரியாதிகள தோருவம் - வெவ்வேறு குண ரூப க்ரியைகளை காட்டுகிறான் (செய்து / செய்விக்கிறான்); ஸன்னுத - போற்றப்படுபவனான (ஸ்ரீஹரி); ஸுமார்க்க துர்மார்க்க மத்யமவெந்து கரெஸுதிப்பம் தரெயொளு - மூன்று வித ஜீவர்களுக்காக மூன்று வித வழிகளை, இந்த உலகில் உருவாக்குகிறான்; தன்ன மனபந்த தாமஸவ ஸ்வீகரிஸுவம் - தன் இஷ்டப்படி தாமஸத்தினை ஏற்றுக் கொள்வான்; தன்ன மதவல்லதிஹ ஸாத்விகனோகரிப - தனக்கு இஷ்டமில்லாத ஸாத்விகத்தினை புறக்கணிப்பான்; தன்ன மனவாரெ - தன் இஷ்டத்திற்கு ஏற்ப; தானெ ராஜஸதொளு - தானே ராஜஸத்தில்; ராஜஸவெந்து கரெது நடெவம் - ராஜஸ என்று அழைத்துக் கொண்டு நடக்கிறான்.

ஸ்ரீஹரிக்கு வைஷம்ய என்னும் தோஷம் இல்லை என்பதை மேலும் இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

தன் இஷ்டப்படி ஜீவர்களில் இருந்துகொண்டு வெவ்வேறு குண ரூப க்ரியைகளை காட்டுகிறான் (செய்து / செய்விக்கிறான்) போற்றப்படுபவனான (ஸ்ரீஹரி). மூன்று வித ஜீவர்களுக்காக மூன்று வித வழிகளை, இந்த உலகில் உருவாக்குகிறான். தன் இஷ்டப்படி தாமஸத்தினை ஏற்றுக் கொள்வான். தனக்கு இஷ்டமில்லாத ஸாத்விகத்தினை புறக்கணிப்பான். தன் இஷ்டத்திற்கு ஏற்ப, தானே ராஜஸத்தில் ராஜஸ என்று அழைத்துக் கொண்டு நடக்கிறான்.

இதையே ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தில், ஸ்ரீஜகன்னாத தாஸர் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

வாரிதனு மளெகெரெயெ பெளெதிஹ
பூருஹங்கள சித்ரபலரஸ
பேரே பேரிப்பந்தெ பஹுவித ஜீவரொளகித்து |
மாரமணனவரவர யோக்யதெ
மீரதலெ குண கர்மகள அனு
சார நடெசுவ தேவனிகெ வைஷம்ய வெல்லிஹுதோ || (3-23)

மேகங்கள் அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரி மழையைப் பொழிகிறது. ஆனால், அந்த நீரினால் விளைந்த மரங்களில் காய்க்கும் காய், பழம், மற்றும் அவற்றின் சாறு வெவ்வேறு விதமாக இருக்கின்றன. சில இனிப்பு, சில கசப்பு என வெவ்வேறாக இருக்கிறது. இதற்கு அந்த மரத்தின் ஸ்வரூபமே காரணமே தவிர, மண், நீர் இவையெல்லாம் எப்படி காரணம் ஆகாதோ, அப்படியே, ஸ்ரீபரமாத்மன், ஸாத்விகாதி மூன்றுவித ஜீவர்களிலும் இருந்து, அவரவர்களின் தகுதியை மீறாமல் (அதற்கேற்ப), ஸாத்விகர் மூலமாக ஸத்வ கர்மங்களையும், ராஜஸர் மூலமாக பலவிதமான கலவையான (மிஸ்ர) கர்மங்களையும், தாமஸர் மூலமாக தன்னில் த்வேஷங்களை உருவாக்கி, அந்தந்த கர்மங்களுக்கேற்ப

பலன்களைக் கொடுக்கிறார். முக்கியமாக, ஜீவர்களின் ஸத்வாதி கர்மங்கள், கர்மபலன்கள், இவற்றிற்கேற்ப கர்மங்களை செய்து, பலன்களைக் கொடுக்கிறாரே தவிர, தனக்கு இவன் வேண்டியவன், இவன் வேண்டாதவன் என்னும் பாரபட்சத்தினால் பலன்களைக் கொடுப்பதில்லை. இதிலிருந்து பரமாத்மனுக்கு பாரபட்சம் இல்லை என்று தெரிகிறது.

**ப$^3$லு ஜன்மவீயலோஸுக$^3$ கெலவரலி நிந்து**
**திளியத$^3$வனோபாதி$^3$ தன்ன தாமரெதி$^3$ஹம்**
**ஸலெ ஜன்மக$^3$ணனெ தீரித$^3$ ப$^3$ளிக தன்ன தானொளகொ$^3$ம்ப$^3$ சேதனதொ$^3$ளு |**
**திளிது$^3$ தன்னய ஸேவெ தானெ மாடு$^3$த நித்ய**
**எளெய மேலித்த$^3$ ஜீவரொளித்து$^3$ தாபொக$^3$ளி**
**ப$^3$லு புண்யவந்தனிவனெந்து$^3$ ஸந்தஸப$^3$ட்டு தனகெ$^3$தானெ ஒலிவனு ||5**

பலு ஜன்மவீயலோஸுக - பற்பல பிறவிகளை கொடுப்பதற்காக; கெலவரலி நிந்து - சிலருக்குள் இருந்து; திளியதவனோபாதி - அவனுக்கு தெரியாமல்; தன்ன தா மரெதிஹம் - தன்னையே தான் மறக்கச் செய்கிறான் (அல்லது மறைந்து நிற்கிறான்) ; ஸலெ ஜன்மகணனெ தீரித பளிக - அவனுடைய பிறவிகளின் கணக்கு முடிந்த பின்; தன்ன தானொளகொம்ப - அவனை தானே தனக்குள் வைத்துக் கொள்வான்; சேதனதொளு - சேதனர்களுக்குள்; திளிது தன்னய ஸேவெ தானெ மாடுத - தன் சேவையை தானே செய்தவாறு; நித்ய - எப்போதும்; எளெய மேலித்த - இந்த உலகில் இருக்கும்; ஜீவரொளகித்து - ஜீவர்களில் இருந்து; பலு புண்யவந்தனிவனெந்து - மிகவும் புண்ணியவந்தன் என்று; தாபொகளி - தான் புகழ்ந்து; ஸந்தஸபட்டு - அதனால் மகிழ்ச்சியடைந்து; தனகெதானெ ஒலிவனு - தனக்குத் தானே மகிழ்வான்.

பற்பல பிறவிகளை கொடுப்பதற்காக சிலருக்குள் அவனுக்கு தெரியாமல் இருந்து, தன்னையே தான் மறக்கச் செய்கிறான் (அல்லது அவனில் மறைந்து நிற்கிறான்). அவனுடைய

பிறவிகளின் கணக்கு முடிந்த பின், அவனை தானே தனக்குள் வைத்துக் கொள்வான். சேதனர்களுக்குள் தன் சேவையை தானே செய்தவாறு, எப்போதும் இந்த உலகில் இருக்கும் ஜீவர்களில் இருந்து, மிகவும் புண்ணியவந்தன் என்று தான் புகழ்ந்து, அதனால் தனக்குத் தானே மகிழ்வான்.

இதற்கான referenceஆக ஹரிகதாம்ருதஸாரத்தில் இந்த பத்யத்தினை சொல்லலாம்.

ஒப்பனலி நிந்தாடுவனு ம
த்தொப்பனலி நோடுவனு பேடுவ
நொப்பனலி நீடுவனு மாதாடுவனு பெரகாகி |
அப்பரத ஹெத்தெய்வனிவ ம
த்தொப்பரனு லெக்கிசனு லோகதொ
ளொப்பனெ தா பாத்ய பாதகனாஹ நிர்பீத || (2-9)

ஒருவன் உள்ளிருந்து விளையாடுகிறான். இன்னொருவரின் உள்ளிருந்து பார்க்கிறான். மற்றொருவரின் உள்ளிருந்து வேண்டுகிறான். இன்னொருவரின் உள்ளிருந்து கொடுக்கிறான். ஒருவருக்குள் இருந்து வியப்படைகிறான். பயங்கரமாக அனைவரையும் பயமுறுத்தும் காளி முதலான தேவதைகளைவிட மிகப்பெரிய தேவனாக இருக்கிறான். ஒருவரையும் லட்சியம் செய்யாதவன். பயமில்லாமல் தான் ஒருவனே இந்த உலகத்தில் பாத்யனாக (சம்பந்தப்பட்டவனாக) இருக்கிறான்.

**வேத4 மொத3லாத3வர ஸாத்விகரெனிஸலெளஸி**
**ஸாது4 ஷாந்தத்வ ஸ்வரூபதி3ந்த3ருதிப்ப**
**க்ரோதி4 ஶம்ப3ரதை3த்ய கலி முக்2ய தா3னவரொளிப்ப நதி1கோபதி3ந்த3**
**ஈ வஸூந்த4ரெயொளகெ3 கோபஶாந்திக3ளெரடு3**
**ஆவ தே3ஷதொ3ளாதொ3ட3ம் கூடி3னடெ3த3புவெ**
**தே3வ மாடு3வ க்ருத்யக3ளனு நிந்தி3பருண்டே ஆவாவ லோகக3ளொளு ||6**

வேத மொதலாதவர - வேதங்கள் ஆகியவற்றை கற்றறிந்தவர்களில்; ஸாத்விகரெனிஸலெளஸி - ஸாத்விகர்கள் என்று சொல்லிக் கொண்டு; ஸாது - ஸ்ரீஹரியானவன்; ஷாந்தத்வ - அமையாதியான; ஸ்வரூபதிந்திருதிப்ப - ஸ்வரூபத்தினால் இருக்கிறான்; க்ரோதி - க்ரூரர்களான; ஷம்பரதைத்ய கலி - ஷம்பர, கலி போன்ற தானவர்களில்; முக்ய தானவரொளிப்பனு - இத்தகைய முக்கியமான தானவர்களில்; அதி கோபதிந்த - மிகவும் கோப ஸ்வரூபனாக இருக்கிறான்; ஈ வஸூந்தரெயொளகெ - இந்த பூமியில்; கோப ஷாந்திகளெரடு - இந்த கோபம், அமைதி ஆகிய இரண்டும்; ஆவ தேஷதொளு - எந்த இடத்திலாவது?; ஆதொடம் - யாரிடமாவது; கூடினடெதபுவெ - சேர்ந்து இருக்கிறதா? (இல்லை); தேவ மாடுவ க்ருத்யகளனு - ஸ்ரீஹரி செய்யும் செயல்களை; ஆவாவ லோகதொளு - அந்தந்த உலகங்களில்; நிந்திபருண்டே - திட்டுபவர்கள் இருக்கிறார்களா?.

ஸ்ரீஹரி அந்தந்த ஜீவர்களின் குணங்களுக்கேற்ப அவரவர்களில் அப்படியே இருக்கிறான். ஒருபோதும் மாறி இருப்பதில்லை என்பதை இங்கு சொல்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

வேதங்கள் ஆகியவற்றை கற்றறிந்தவர்களில் ஸாத்விகர்கள் என்று சொல்லிக் கொண்டு ஸ்ரீஹரியானவன் அவர்களில் அமையாதியான ஸ்வரூபத்தினால் இருக்கிறான். க்ரூரர்களான (கோபிஷ்டர்களான) ஷம்பர, கலி போன்ற அனைத்து தானவர்களில் மிகவும் கோப ஸ்வரூபனாக இருக்கிறான். இந்த பூமியில் இந்த கோபம், அமைதி ஆகிய இரண்டும் எந்த இடத்திலாவது, யாரிடமாவது சேர்ந்து இருக்கிறதா? (அல்லது மாறி இருக்கிறதா? இல்லை). ஸ்ரீஹரி செய்யும் செயல்களை திட்டுபவர்கள் எங்காவது இருக்கிறார்களா?. (இந்த காரணத்திற்காக திட்டுபவர்கள்).

**தேஹஸ்தா2னத3 ஜீவனு களவனாசரிஸி**
**தே3ஹக்கெனிக3ள ப3ந்த4னவப்ப தெரெத3ந்தெ**
**தே3ஹினிகரதொ3ளு ஹரி தானிந்து சேஷ்டெயம் மாட3லத3ரத3ர ப2லகெ1 |**

**ஈ தே$^{3}$வவந்த்$^{3}$ய ஸுக$^{2}$துக்க$^{2}$ போ$^{4}$க்தனு எந்தொ$^{3}$**
**டா$^{3}$தே$^{3}$வகே$^{3}$னஹுது$^{3}$ குந்து$^{3}$ கொரதெக$^{3}$ளிந்து**
**மாத$^{4}$வனெ ஆசரிஸி நுடி$^{3}$து$^{3}$ ஸந்தஸப$^{3}$டு$^{3}$வ ஸகல ப்ராணிக$^{3}$ளொளித்து$^{3}$ ||7**

தேஹஸ்தனாத ஜீவனு - தேகத்தை கொண்டவனான ஜீவன்; களவனாசரிஸெ - தனக்கு உண்டான செயல்களை செய்ய; தேஹக்கெனிகள பந்தனவப்ப தெரெதந்தெ - மறுபடி பல தேகங்களைப் பெற்று இந்த சம்சாரத்திலேயே சிக்கிக் கொண்டிருப்பதைப் போல; தேஹி நிகரதொளு ஹாரி தானிந்து - இத்தகைய தேகிகளின் கூட்டத்தில் ஶ்ரீஹரியானவன் தான் நின்று; சேஷ்டெயம் - செயல்களை; மாடலதரதர பலகெ - செய்து அந்தந்த பலன்களை அவர்களுக்கே தருகிறான்; ஈ தேவவந்த்ய - இந்த ஶ்ரீஹரியானவன்; ஸுகதுக்க போக்தனு - சுகதுக்கங்களை ஏற்றுக் கொள்ளும் போக்தனாக இருக்கிறான்; எந்தொடெ - என்றால்; தேவகேனஹுது - அந்த ஶ்ரீஹரிக்கு என்ன ஆகும்?; குந்து கொரதெகளிந்து - குற்றம் குறைகள்; ஸகல ப்ராணிகளொளித்து - அனைத்து ப்ராணிகளிலும் இருந்து கொண்டு; மாதவனே ஆசரிஸி - அந்த ஶ்ரீஹரியே செய்து; நுடிது - கூறி; ஸந்தஸபடுவ - மகிழ்ச்சி அடைகிறான்;

ஶ்ரீஹரியே ஜீவர்களில் இருந்துகொண்டு, அனைத்து செயல்களையும் செய்து செய்விக்கிறான் என்பதை இங்கு மறுபடி வலியுறுத்துகிறார் ஶ்ரீகுரு ஶ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

தேகத்தை கொண்டவனான ஜீவன், தனக்கு உண்டான செயல்களை செய்ய, மறுபடி பல தேகங்களைப் பெற்று இந்த சம்சாரத்திலேயே சிக்கிக் கொண்டிருப்பதைப் போல, (அந்த சமயங்களில்), இத்தகைய தேகிகளின் கூட்டத்தில் ஶ்ரீஹரியானவன் தான் நின்று செயல்களை செய்து அந்தந்த பலன்களை அவர்களுக்கே தருகிறான். இந்த ஶ்ரீஹரியானவன் சுகதுக்கங்களை ஏற்றுக் கொள்ளும் போக்தனாக இருக்கிறான், என்றால் அந்த ஶ்ரீஹரிக்கு என்ன ஆகும்? குற்றம் குறைகள்

(எதுவும் அவனை பாதிக்காது). அனைத்து ப்ராணிகளிலும் இருந்து கொண்டு, அந்த ஶ்ரீஹரியே செய்து, கூறி, மகிழ்ச்சி அடைகிறான்;

நாடி ப்ரகரண ஸந்தியில், ஶ்ரீஜகன்னாத தாஸர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

போக்ய போக்த்ருகளொளகெ ஹரி தா
போக்ய போக்தனு எனிஸி யோக்யா
யோக்ய ரசகள தேவ தானவ கணகெ உணிசுவனு |
பாக்யநிதி பக்தரிகெ சத்வை
ராக்ய பக்தி ஞானவீவ அ
யோக்யரிகெ த்வேஷாதிகள தன்னல்லி கொடுதிப்ப ||22

பக்தி, ஞானாதிகளே ஐஸ்வர்யம் என்று நினைக்கும் பக்தர்களுக்கு நிதியைப் போல இருக்கும் ஶ்ரீபரமாத்மன், அவர்களில் இருந்து உத்தமமான வைராக்கியம், பக்தி, ஞானங்களைக் கொடுக்கிறான். தமோயோக்யர்களுக்கு தன்னில் த்வேஷங்களையே வளர்க்கிறான். இப்படி செய்வதற்கு, அவரவர்களின் யோக்யதையே முக்கிய காரணம் என்று அறியவேண்டும்.

அடுத்த 4 பத்யங்களில், 4 வர்ணத்தவர்களில் இருக்கும் பகவந்தனின் ரூபத்தினையும், அந்த ரூபத்தின் செயல்களையும் விளக்குகிறார் ஶ்ரீதாஸர்.

**பூ4ஸுரர தே3ஹதொ3ளகி3ருவ ஜீவனொளிப்ப**
**வாஸுதே3வனெ விப்ரனெந்து3 தா கரெஸுவம்**
**ஈ ஸமஸ்த புராணவேத3 சாஸ்திரோக்த கர்மக3ளனாசரிஸுதிஹனு |**
**ஸ்வோசித ஸுமார்க்க3க3ளனாசரிஸ பே3கெந்து3**
**வாசிஸுத மூரு வர்ணத3 ஜீவரொளகி3ப்ப**
**கீ1சகாரிப்ரியகெ3 ஸூசிஸுதனெலஸிஹம் ஆஸெ க்லேஷக்கெ ஸிலுகதெ3 ||8**

பூஸுரர தேஹதொளகிருவ - பிராமணர்களின் தேகத்தில் இருக்கும்; ஜீவனொளிப்ப - ஜீவனில் இருக்கும்; வாஸுதேவனெ - வாஸுதேவ ரூபியான ஸ்ரீஹரியே; விப்ரனெந்து தா கரெஸுவம் - விப்ரன் என்று அழைத்துக் கொள்கிறான்; ஈ சமஸ்த புராண வேத சாஸ்திரோக்த - இந்த அனைத்து புராண வேத சாஸ்திரங்களின்படி; கர்மகளனாசரிஸுதிஹனு - கர்மங்களை செய்து வருகிறான்; ஸ்வோசித ஸுமார்க்களனு ஆசரிஸ பேகெந்து - அதில் சொல்லப்பட்டுள்ள கர்மங்களையே பின்பற்ற வேண்டுமென்று; வாசிஸுத மூரு வர்ணத ஜீவரொளகிப்ப - மற்ற மூன்று வர்ணங்களில் இருப்பவனான; கீசகாரிப்ரியகெ - கீசகனின் எதிரியான பீமனின் நண்பனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு; ஸூசிஸுத நெலஸிஹம் - விளக்கியவாறு இருக்கிறான்; ஆஸெ க்லேஷக்கெ ஸிலுகதெ - தான் எவ்வித ஆசை, துன்பத்திற்கும் சிக்கிக் கொள்ளாமல் இருக்கிறான்.

பிராமண ஜீவர்களுக்குள் இருக்கும் வாஸுதேவ நாமக ஸ்ரீஹரியின் செயல்களைப் பற்றி இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

பிராமணர்களின் தேகத்தில் இருக்கும் ஜீவனில் இருக்கும் வாஸுதேவ ரூபியான ஸ்ரீஹரி, விப்ரன் என்று தன்னை அழைத்துக் கொள்கிறான். அனைத்து வேத புராண சாஸ்திரங்களின்படி கர்மங்களை செய்து வருகிறான். அதில் சொல்லப்பட்டுள்ள கர்மங்களையே பின்பற்ற வேண்டுமென்று, மற்ற மூன்று வர்ணங்களில் இருப்பவனான, கீசகனின் எதிரியான பீமனின் நண்பனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு, விளக்கியவாறு இருக்கிறான். தான் எவ்வித ஆசை, துன்பத்திற்கும் சிக்கிக் கொள்ளாமல் இருக்கிறான்.

**மானவப தே$^{3}$ஹஸ்த$^{2}$னாத$^{3}$ ஜீவரொளித்து$^{3}$**
**தானெ க்ஷத்ரியனெந்து$^{3}$ கரெஸுதனுதி$^{3}$ன வன**
**ஜனாப$^{4}$ ஸங்கர்ஷணனெ து$^{3}$ஷ்ட நிக்$^{3}$ரஹ ஸிஷ்டபரிபாலனெய மாடி$^{3}$ |**
**ஸானுராக$^{3}$தி$^{3}$ ஸகலவர்ணாஶ்ரமாசார**

**ஹீனவாக³த³ தெரதி³ பாலிஸுதலனுதி³னதி³**
**தானே பூஜிபனு விப்ரஸ்த²னாகி³ஹ வாஸுதே³வனெ வினயதி³ந்த³ ||9**

மானவப - ராஜஸ; தேஹஸ்தனாத ஜீவரொளித்து - தேகத்தைக் கொண்ட ஜீவர்களில் இருந்து கொண்டு; தானே க்ஷத்ரியனெந்து - தானே க்ஷத்ரியன் என்று; கரெஸுத - அழைத்துக் கொண்டு; அனுதின - தினம்தோறும் (எப்போதும்); வனஜனாப - தாமரைக் கண்ணனான; ஸங்கர்ஷணனெ - ஸங்கர்ஷண ரூபி ஸ்ரீஹரியானவர்; துஷ்ட நிக்ரஹ - துஷ்டர்களை அழித்தவாறு; சிஷ்ய பரிபாலனெய மாடி - தன் பக்தர்களை (பின்பற்றுவோரை) காப்பாற்றியவாறு; ஸானுராகதி - இடைவிடாமல்; ஸகல வர்ணாசிரம ஆசார - அனைத்து வர்ணாசிரம தர்மங்கள்; ஹீனவாகத தெரதி - எதிலும் குறையே வராமல்; பாலிஸுதலனுதினதி - எப்போதும் பின்பற்றியவாறு; விப்ரஸ்தானாகிஹ - விப்ர ஸ்தானத்தில் இருப்பவரான; வாஸுதேவனெ - ஸ்ரீவாஸுதேவ ரூபியை; வினயதிந்த - மிகுந்த பக்தி மரியாதைகளுடன்; தானெ பூஜிபனு - தான் பூஜிப்பான்.

க்ஷத்ரிய ஜீவர்களுக்குள் இருக்கும் ஸங்கர்ஷண நாமக ஸ்ரீஹரியின் செயல்களைப் பற்றி இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

ராஜஸ தேகத்தைக் கொண்ட ஜீவர்களில் இருந்து கொண்டு, தானே க்ஷத்ரியன் என்று அழைத்துக் கொண்டு, தினம்தோறும் (எப்போதும்), தாமரைக் கண்ணனான ஸங்கர்ஷண ரூபி ஸ்ரீஹரியானவர், துஷ்டர்களை அழித்தவாறு, தன் பக்தர்களை (பின்பற்றுவோரை) காப்பாற்றியவாறு, இடைவிடாமல், அனைத்து வர்ணாசிரம தர்மங்கள், எதிலும் குறையே வராமல், எப்போதும் அவற்றை பின்பற்றியவாறு, விப்ர ஸ்தானத்தில் இருப்பவரான, ஸ்ரீவாஸுதேவ ரூபியை, மிகுந்த பக்தி மரியாதைகளுடன், தான் பூஜிப்பான்.
உதாரணம்: ஸ்ரீவ்யாஸராஜர் - ஸ்ரீகிருஷ்ண தேவராயர்.

**ஈ நளினஜாண்ட$^{3}$தொ$^{3}$ளகு$^{3}$ள்ள வைஶ்யரகாய**
**ஜாலக$^{3}$ளொளிப்ப சேதன நிகரதொ$^{3}$ளு நிந்து**
**வாணிஜ்ய வ்ருத்திக$^{3}$ள ஸேவாதி$^{3}$ க்ருத்யக$^{3}$ளனாசரிப ப்ரத்$^{4}$யும்னனு |**
**தானெ பூஜக பூஜ்யனாதொ$^{3}$ட$^{3}$ம் பே$^{3}$ஸரதெ$^{3}$**
**தானெ பூஜிப தானெ இட்டிஹாக்ஞானமம்**
**ஸானுராக$^{3}$தி$^{3}$ ஜீவததிகி$^{3}$த்து அவர ஸ்வபா$^{4}$வயெனிஸுவனு கருணி ||10**

ஈ நளினஜாண்டதொளகுள்ள - இந்த பிரம்மாண்டத்தில் உள்ள; வைஷ்யர காய ஜாலகளு இப்ப - வைஷ்யர்களின் தேகத்தைக் கொண்ட; சேதன நிகரதொளு நிந்து - சேதனர்களின் குழுவினர்களில் நின்று; வாணிஜ்ய வ்ருத்திகள - வணிக வியாபாரங்களை / செயல்களை; ஸேவாதி க்ருத்யகளனு - ஸேவாதி செயல்களை; ப்ரத்யும்னனு ஆசரிப - ப்ரத்யும்னன் செய்கிறான்; தானெ பூஜக பூஜ்யனாதொடம் - தானெ பூஜக, பூஜ்யனாக இருந்து; பேஸரதெ - எவ்வித சோர்வும் இன்றி; தானே பூஜிப - தானே பூஜிக்கிறான்; தானெ இட்டிஹ அஞ்ஞானமம் - தானே அஞ்ஞானத்தை வைத்தான்; ஸானுராகதி - எப்போதும்; ஜீவததிகித்து - ஜீவர்களுக்கு அளித்து; அவர ஸ்வபாவ எனிஸுவனு கருணி - அதுவே அவர்களுடைய ஸ்வபாவம் என்று சொல்வான், கருணாளு.

வியாபாரங்களை செய்யும் வைஷ்யர்களைப் பற்றி, அவர்களில் இருக்கும் பகவத் ரூபங்களைப் பற்றி இங்கு சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

இந்த பிரம்மாண்டத்தில் உள்ள வைஷ்யர்களின் தேகத்தைக் கொண்ட சேதனர்களின் குழுவினர்களில் நின்று வணிக வியாபாரங்களை / செயல்களை, ஸேவாதி செயல்களை ப்ரத்யும்னன் செய்கிறான். தானெ பூஜக, பூஜ்யனாக இருந்து, எவ்வித சோர்வும் இன்றி, தானே பூஜிக்கிறான். தானே அஞ்ஞானத்தை எப்போதும் ஜீவர்களுக்கு அளித்து அதுவே அவர்களுடைய ஸ்வபாவம் என்று சொல்வான், கருணாளு.

**தாவெ பி3த்துவ பெ3ளெவனித்த தா4ன்யக3ளதா**
**போவி அவனிபதி மொத3லாத3வர்கீ3யுதிஹ**
**ஆவி அஜ வ்ருஷப4 மொத3லாத3 ஜீவததிய ஸலஹுவம் ஷூத்3ரனெனிஸி |**
**ஈ வனஜ க3ர்ப்பா4ண்ட3தொ3ளகு3ள்ள ஜீவரொளு**
**பா4விதனு அனிருத்த3 நாமந்தி3த3லெ கரெஸி**
**ஈ வித4தி3 சதுஷ்டாது தானெனிஸிகொளுதிப்ப மாவிதி4 ப்ரமுக2ஸ்துத்ய ||11**

தாவெ பித்துவ - தாமே விதைக்கும்; பெளெவனித்த - விதைகள் கொடுக்கும்; தான்யகள - தானியங்களை; தா போவி - தாங்களே சென்று; அவனிபதி மொதலாதவகெ - அரசன் முதலானவர்களுக்கு; ஈயுதிஹ - கொடுக்கிறான்; ஆவி - செம்மறி ஆடு; அஜ - ஆடு; வ்ருஷப - எருது; மொதலாத ஜீவததிய - ஆகிய ஜீவர்களின் குழுவினை; ஸலஹுவம் - காப்பான்; ஷூத்ரனெனிஸி - ஷூத்ர என்று அழைத்துக்கொண்டு; ஈ வனஜ கர்ப்பாண்டதொளு உள்ள - இந்த பிரம்மாண்டத்தில் உள்ள; ஜீவரொளு - ஜீவர்களில்; பாவிதனு - இருக்கிறான்; அனிருத்த நாமதிந்தலெ கரெஸி - அனிருத்த என்னும் பெயரால் அழைத்துக் கொண்டு இருக்கிறான்; ஈ விததி - இவ்வாறாக; சதுஷ்பாது - நான்கு வர்ணத்தவர்களிலும்; தானெனிஸிகொளுதிப்ப - தான் அவ்வாறு அழைத்துக் கொள்கிறான்; மா விதி ப்ரமுக ஸ்துத்ய - லட்சுமி, பிரம்மா, முக்யபிராணர் ஆகியோரால் வணங்கப்படுபவன் (ஸ்ரீஹரி).

நான்காம் வர்ணத்தவர்களில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபத்தினைப் பற்றி இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

தாமே விதைக்கும் விதைகள்; அவை கொடுக்கும் தானியங்களை, தாங்களே சென்று அரசன் முதலானவர்களுக்கு கொடுக்கிறான். செம்மறி ஆடு, ஆடு, எருது, ஆகிய ஜீவர்களின் குழுவினை காப்பான். ஷூத்ர என்று அழைத்துக்கொண்டு இந்த பிரம்மாண்டத்தில் உள்ள ஜீவர்களில் இருக்கிறான். அனிருத்த என்னும் பெயரால் அழைத்துக் கொண்டு இருக்கிறான். இவ்வாறாக

நான்கு வர்ணத்தவர்களிலும் தான், அவ்வாறு அழைத்துக் கொள்கிறான் - லட்சுமி, பிரம்மா, முக்யபிராணர் ஆகியோரால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி.

**கோ$^{3}$வுக$^{3}$ளொளிருதிப்பனு உத்கீ$^{3}$தனாமகம்**
**ஆவி அஜக$^{3}$ளொளிஹனு ப்ரஸ்தாவ ஹீம்கா**
**ரவாஹனாஸ் பத$^{3}$வாத$^{3}$ ஹயக$^{3}$ளொளகி$^{3}$ருதிப்பனு ப்ரதிஹாரனெனிஸிகொண்டு$^{3}$ |**
**ஜீவனப்ரத நித$^{4}$னனாம மனுஜரொளித்து$^{3}$**
**தே$^{3}$வதா$^{3}$னவரெனிப ஸகல சேதனருக$^{3}$ள**
**யாவதி$^{3}$ந்த்$^{3}$ரிய போ$^{4}$க்$^{3}$யரஸக$^{3}$ளனு ஸ்வீகரிப ஸ்தூ$^{2}$லபு$^{4}$கு விஶ்வாக்$^{2}$யனு ||12**

கோவுகளொளு - பசுக்களில்; உத்கீத நாமகம் - உத்கீத நாமக பரமாத்மன்; இருதிப்பனு - இருக்கிறான்; ஆவி அஜகளொளு இஹனு - செம்மறி ஆடு மற்றும் ஆடுகளில் இருக்கிறான்; ப்ரஸ்தாவ ஹீங்கார - ப்ரஸ்தாவ, ஹீங்கார (என்னும் இரு பெயர்களில்); வாஹனாஸ்பதவாத - வாகனமாக இருக்கக்கூடிய; ஹயகளொளு இருதிப்ப - குதிரைகளில் இருக்கிறான்; ப்ரதிஹாரனு எனிஸிகொண்டு - ப்ரதிஹார நாமக ஸ்ரீஹரி; ஜீவனப்ரத - வாழ்க்கையை கொடுத்து அருள்பவனான ஸ்ரீஹரி; நிதன நாம - நிதன நாமகனாக மனுஜரொளித்து - மனிதர்களில் இருக்கிறான்; தேவதானவரெனிப - தேவதைகள், அசுரர்கள் எனப்படும்; ஸகல சேதனருகள - அனைத்து சேதனர்களின்; யாவதிந்த்ரிய போக்ய ரஸகளனு - அவர்களின் இந்திரிய போக ரஸங்களை; ஸ்வீகரிப - ஏற்றுக் கொள்கிறான்; ஸ்தூலபுகு - பதார்த்தங்களை (பலன்களை) அவர்களையே உண்ணச் செய்கிறான்; விஷ்வாக்யனு - பிரபஞ்சத்தை காத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி.

4 வர்ண ஜீவர்களைத் தொடர்ந்து பல பிற ஜீவர்களில் இருக்கும் பகவத் ரூபங்களைப் பற்றி இங்கு சொல்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

பசுக்களில், உத்கீத நாமக பரமாத்மன் இருக்கிறான். செம்மறி ஆடு மற்றும் ஆடுகளில் ப்ரஸ்தாவ, ஹீங்கார (என்னும் இரு பெயர்களில்) இருக்கிறான். வாகனமாக இருக்கக்கூடிய குதிரைகளில் ப்ரதிஹார நாமக ஸ்ரீஹரி இருக்கிறான். வாழ்க்கையை கொடுத்து அருள்பவனான ஸ்ரீஹரி, நிதன நாமகனாக மனிதர்களில் இருக்கிறான். தேவதைகள், அசுரர்கள் எனப்படும் அனைத்து சேதனர்களின், அவர்களின் இந்திரிய போக ரஸங்களை ஏற்றுக் கொண்டு, பிரபஞ்சத்தை காத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி, பதார்த்தங்களை (பலன்களை) அவர்களையே உண்ணச் செய்கிறான்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தில், பஞ்சமஹா யக்ஞ ஸந்தியில், ஸ்ரீஜகன்னாத தாஸர் கூறியுள்ள இந்த பத்யம் அப்படியே இங்கு வந்திருக்கிறது என்பதை அறிகிறோம்.

கோ3வுக3ளொளுத்கீ3த4னிஹ ப்ர
ஸ்தா1வ ஹீங்கா1ரரெடு3 ரூப1தி3
ஆவி அஜக3ளொளிஹனு ப்ரதிஹாராஹ்வ ஹயக3ளொளு |
ஜீவனப்ரத3 நித4ன மனுஜரொ
ளீவித3தொ3ளிக3 பஞ்ச ஸாமவ
ஜாவ ஜாவகெ1 நெனெவரிகெ3 ஐதி3ஸனு ஜனுமக3ள ||14

**கேஶஸாஸிர பா4க3கெ3ய்ஸுலெனிதிஹ ஜீவ**
**நீஸுத்3ருட3தரவாக3த3வனு பு4ஞ்சிபனெனலெ**
**வாஸவார்ச்சிதபாத3 ஸ்ரீஷ நக3தி3ஹனெ தன்னய க்ருத்ய தா நெனெது3 |**
**ஸூஸிகருணவ தானு கைபிடி3த3 சேதனனொ**
**ளேஸு காலக3ளாதொ3ட3ம் ஜீவக்ருதவனிஸ**
**கா4ஸிகொ3ளிஸலு ஜக3த3 ஜீவரொளகி3த்தா3டி3 ஜன்மம்ருதிக3ள கொடு3வனு ||13**

கேஷ ஸாஸிர பாக கெய்ஸு - முடியை ஆயிரம் பாகங்களாக ஆக்குவேன்; எனுதிஹ ஜீவனு - என்று சொல்லும் ஜீவன்; ஏஸு த்ருட தர வாகதவனு - சிறிதும் திடம் இல்லாதவன் (அ-ஸ்வதந்த்ரன்); புஞ்சிபனு எனலெ - (மேற்கண்ட) மிருகங்களை

தான் உண்வேன் என்று சொல்ல; வாஸவார்ச்சிதபாத - பிரம்மாதி தேவதைகள் வணங்கும் பாதங்களைக் கொண்ட; ஸ்ரீஷ - ஸ்ரீஹரியானவர்; தன்னய க்ருத்ய தா நெனெது - தன் செயல்களை தான் நினைத்துக் கொண்டு; நகதிஹனெ - சிரிக்கிறான்; ஸூஸிகருணவ - கருணையுடன்; தானு - தான்; கைபிடித - தேகத்தை வழங்கிய; சேதனனொளு - இந்த சேதனர்களில்; ஏஸு காலகளாதொடம் - பற்பல காலங்களாக இருந்து; ஜீவக்ருதவனிஸ - ஜீவர்கள் செய்ய வேண்டிய செயல்களில்; அகாஸிகொளிஸலு - விருப்பம் கொள்வதற்கு; ஜகத ஜீவரொளகித்தாடி - உலகத்தின் ஜீவர்களில் இருந்துகொண்டு, செயல்களை செய்து; ஜன்ம ம்ருதிகள கொடுவனு - பிறப்பு இறப்புகளை கொடுக்கிறான்.

ஜீவனின் அஸ்வதந்த்ரத்தை இந்த பத்யத்தில் அழகாக விளக்கியிருக்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர். (இந்த பத்யத்தின் முதல் பாதிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தங்கள் இருக்கலாம். எனக்கு பாடம் எடுத்த விதத்தில் இதனை இங்கு சொல்லியிருக்கிறேன்).

முடியை ஆயிரம் பாகங்களாக ஆக்குவேன் என்று பெருமையாக சொல்லும் ஜீவன், சிறிதும் திடம் இல்லாதவன் (அ-ஸ்வதந்த்ரன்); (மேற்கண்ட) மிருகங்களை தான் உண்வேன் என்று சொல்ல, பிரம்மாதி தேவதைகள் வணங்கும் பாதங்களைக் கொண்ட ஸ்ரீஹரியானவர், தன் செயல்களை தான் நினைத்துக் கொண்டு சிரிக்கிறான். கருணையுடன் தான் தேகத்தை வழங்கிய இந்த சேதனர்களில், பற்பல காலங்களாக இருந்து, ஜீவர்கள் செய்ய வேண்டிய செயல்களில், விருப்பம் கொள்வதற்கு உலகத்தின் ஜீவர்களில் இருந்துகொண்டு, செயல்களை செய்து, பிறப்பு இறப்புகளை கொடுக்கிறான்.

**ஜீவரந்தர்யாமியாகி³ப்ப ஹரி லிங்க³**
**தே³ஹத³பி⁴மானி லகுமியொளிருவ தனகெ³ தா**
**நோவி ப்ரேரிஸெ ப³ளிக லிங்க³ஸ்த²னாத³ வாரிஜ ப⁴வாந்தர்யாமிகெ³ ।**
**ஜீவப்ராவரண லிங்காபி⁴மானியொளித்³து³**

**மாவிஸுத ஹரி தனகெ[3] தானெ ப்ரேரிஸலஹவு**
**தீ[1]வியுந்தி[3]ருவ அனிருத்[3]த[4] தே[3]ஹதொ[3]ளிப்ப ஜீவததியொளு நெலெஸிஹ ||14**

ஜீவரந்தர்யாமியாகிப்ப ஹரி - ஜீவர்களின் அந்தர்யாமியாக இருப்பவனான ஸ்ரீஹரி; லிங்கதேஹத அபிமானி - லிங்க தேகத்தின் அபிமானியான; லகுமியொளிருவ தனகெ தானு - ஸ்ரீலட்சுமிதேவியின் உள்ளே இருக்கும் தனக்கு, தானே; ஓவி ப்ரேரிஸெ பளிக - வேண்டி கேட்டுக்கொண்ட பிறகு; லிங்கஸ்தனாத - அந்த லிங்க தேகத்தில் இருப்பவனான; வாரிஜ பவாந்தர்யாமிகெ - பிரம்ம, வாயு, ருத்ர ஆகியோர் அந்தர்யாமிக்கு; ஜீவ ப்ராவரண - ஜீவனை சுற்றியிருக்கும்படியான; லிங்காபிமானியொளித்து - லிங்காபிமானியில் இருந்து; மாவினுத ஹரி - லட்சுமிதேவியால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி; தனகெ தானெ - தனக்குத் தானே; ப்ரேரிஸலஹவு - வேண்டிக் கொண்டு; தீவிமுந்திருவ - அதற்கு மேலாக இருக்கக்கூடியதான; அனிருத்த தேஹதொளிப்ப -அனிருத்த தேகத்தில் இருக்கும்; ஜீவததியொளு நெலெஸிஹ - ஜீவனில் நிலைத்திருக்கிறான்.
லிங்க மற்றும் அனிருத்த தேகங்களில் ஸ்ரீஹரியின் இருப்பினை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

ஜீவர்களின் அந்தர்யாமியாக இருப்பவனான ஸ்ரீஹரி, லிங்க தேகத்தின் அபிமானியான ஸ்ரீலட்சுமி தேவியின் உள்ளே இருக்கும் தனக்கு, தானே வேண்டி கேட்டுக்கொண்ட பிறகு, அந்த லிங்க தேகத்தில் இருப்பவனான, பிரம்ம, வாயு, ருத்ர ஆகியோர் அந்தர்யாமிக்கு, ஜீவனை சுற்றியிருக்கும்படியான லிங்காபிமானியில் இருந்து லட்சுமிதேவியால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, தனக்குத் தானே வேண்டிக் கொண்டு, அதற்கு மேலாக இருக்கக்கூடியதான, அனிருத்த தேகத்தில் இருக்கும் ஜீவனில் நிலைத்திருக்கிறான்.

**பா4விஸேஷ பதா3ர்ஹ முக்2யதே3வார்ச்சித**
**ஸ்ரீவினுத ஹரிகெ3 ப்ரேரணெ ஸ்தூ2லதொ3ளு ஹொளெவ**
**தே3வதா3னவ ஸேவ்ய விஷ்வாக்2யக3ஹுது3 அனிருத்3த4 தே3ஹஸ்த2னாகி3 |**
**எணிஸி விஶ்வாக்2யனாசரிப தன்மய ஆக்ஞே**
**தனகெ3 தானே மீரத3லெ ஸத்ய ஸங்கல்ப**
**த3னுஸார ஸ்தூ2லதொ3ளகி3த்3து3 தத்3ரூப தன்னாமதி3ம் கரெஸிகொண்டு3 ||15**

பாவி சேஷ பதார்ஹ - பாவி சேஷர் என்று அழைக்கப்படும் ருத்ரதேவர்; முக்யதேவார்ச்சித -முக்ய பிராணரால் அர்ச்சிக்கப்படுபவரான; ஸ்ரீவினுத ஹரிகெ - ஸ்ரீலட்சுமி தேவி வணங்கும் ஸ்ரீஹரிக்கு; ப்ரேரணெ - ப்ரேரணை செய்து; ஸ்தூலதொளு ஹொளெவ - ஸ்தூல தேகத்தில் இருப்பவனான; தேவதானவ ஸேவ்ய - தேவதானவர்களால் வணங்கப்படுபவனான; விஷ்வாக்யகஹுது - விஷ்வாக்ய என்று அழைக்கப்பட்டு; அனிருத்த தேஹஸ்தனாகி - அனிருத்த தேகத்தில்; எணிஸெ - இருந்து; விஷ்வாக்யனாசரிப - இந்த விஷ்வாக்யன ஆனவன் செய்வான்; தன்னய ஆக்ஞெ தனகெ தானெ மீரதலெ - தன்னுடைய ஆணையை தானே மீறாமல்; ஸத்ய ஸங்கல்பத அனுஸார - ஸத்ய ஸங்கல்ப என்னும் தன் பெயருக்கு ஏற்ப; ஸ்தூலதொளகித்து - ஸ்தூல தேகத்தில் இருந்து; தத்ரூப தன்னாமதிம் - அந்தந்த ரூபங்களில், அந்தந்த பெயர்களில்; கரெஸிகொண்டு - அழைக்கப்படுகிறான்.

அனிருத்த மற்றும் ஸ்தூல தேகங்களில் ஸ்ரீஹரியின் இருப்பினை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

பாவி சேஷர் என்று அழைக்கப்படும் ருத்ரதேவர், முக்ய பிராணரால் அர்ச்சிக்கப்படுபவரான, ஸ்ரீலட்சுமி தேவி வணங்கும் ஸ்ரீஹரிக்கு, ப்ரேரணை செய்து, ஸ்தூல தேகத்தில் இருப்பவனான, தேவதானவர்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, விஷ்வாக்ய என்று அழைக்கப்பட்டு, அனிருத்த தேகத்தில் இருந்து, இந்த விஷ்வாக்யன ஆனவன் செய்கிறான். தன்னுடைய ஆணையை

தானே மீறாமல், ஸத்ய ஸங்கல்ப என்னும் தன் பெயருக்கு ஏற்ப, ஸ்தூல தேகத்தில் இருந்து, அந்தந்த ரூபங்களில், அந்தந்த பெயர்களில், அழைக்கப்படுகிறான்.

**ஈவிதா4த்யாத்ம தொ3ளகீ3வ ப்ரேரகனாகி3**
**ஆவகர்மவ ஈஷனாக்ஞெயிந்தா3சரிப**
**ஆவகர்மவ மாட3லிர்த3புது3 சைதன்ய சேதனாபா4ஸகங்கே3 |**
**கோவிதோ3த்தமரெனிஸி நியாயபா3ஹிரரெனிஸி**
**ஆவுதொ3ந்த3ரிய த3க்ஞானமிஸ்ரரு எனிஸி**
**ஈ வித4தி3 ஜீவரனு மூருகு3ணதொ3ளகி3ட்டு ஸலஹுவம் க்ருதிரமணனு ||16**

ஈவித - இவ்வாறாக; ஆத்யாத்மத ஔளகீவ - ஆத்யாத்மத்தின் (சரீரங்களின்) உள்ளே இருந்து; ப்ரேரகனாகி - அனைத்து செயல்களை செய்யுமாறு ப்ரேரணை செய்து; ஆவகர்மவ - யாரொருவன் தன் செயல்களை; ஈஷனாக்ஞெயிந்த ஆசரிப - ஸ்ரீஹரியின் ஆணைப்படி செய்கிறானோ; ஆவகர்மவ மாடலிர்தபுது - அந்த செயல்களை செய்து முடித்தபின்; சைதன்ய சேதனாபாஸகங்கெ - அத்தகைய சைதன்ய சேதனனை உபாஸனை செய்பவர்களை; கோவிதோத்தமரெனிஸி - கோவிதோத்தமர் என்று அழைத்து; ஆவுதொந்தரியத - எதுவும் தெரியாதவர்களை; ந்யாய பாஹிரரெனிஸி - தர்மத்திற்கு அப்பாற்பட்டவர்கள் என்று சொல்லி; அஞ்ஞான மிஸ்ரரு எனிஸி - தவறாக புரிந்து கொண்டிருப்பவர்களை, மிஸ்ரர் என்று அழைத்து; ஈ விததி - இவ்வாறாக; ஜீவரனு - ஜீவர்களை; மூரு குணதொளகிட்டு - மூன்று குணங்களில் அடக்கி; ஸலஹுவம் - (அவரவர் யோக்யதைக்கேற்ப) காக்கிறான்; க்ருதி ரமணனு - க்ருதி ரமணனான பிரத்யும்னன்.

மூன்று வித ஜீவர்களை பகவந்தன் எப்படி காக்கிறான் என்பதை இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

இவ்வாறாக, ஆத்யாத்மத்தின் (சரீரங்களின்) உள்ளே இருந்து, அனைத்து செயல்களை செய்யுமாறு ப்ரேரணை செய்து,

யாரொருவன் தன் செயல்களை ஸ்ரீஹரியின் ஆணைப்படி செய்கிறானோ, அந்த செயல்களை செய்து முடித்தபின், அத்தகைய சைதன்ய சேதனனை உபாஸனை செய்பவர்களை, கோவிதோத்தமர் என்று அழைத்து, எதுவும் தெரியாதவர்களை, தர்மத்திற்கு அப்பாற்பட்டவர்கள் என்று சொல்லி, தவறாக புரிந்து கொண்டிருப்பவர்களை, மிஸ்ரர் என்று அழைத்து, இவ்வாறாக, ஜீவர்களை மூன்று குணங்களில் அடக்கி, க்ருதி ரமணனான பிரத்யும்னன், (அவரவர் யோக்யதைக்கேற்ப) காக்கிறான்.

**ஜீவரந்தர்யாமியாகி$^3$த்து$^3$ ப்ரேரிஸுவ**
**பாவனனெனிப்ப ப்ராணனொளித்து$^3$ ஸாக்ஷியஹ**
**வோவி கார்யக$^3$ள நடெ$^3$ஸுவ ஸ்தூ$^2$லதொ$^3$ளகி$^3$த்து$^3$**
**விஷ்வாக்$^2$யனெனிஸிகொண்டு$^3$ |**
**யாவதிந்த்$^3$ரியத$^3$ வ்யாபாரக$^3$ள நடெ$^3$ஸுவடெ$^3$**
**ஆவகாலகு ஜீவததிகெ$^3$ ஸ்வாதீ$^4$னவில்ல**
**பாவனனெனிப்ப ஹரியிட்ட தெரனந்திருவுதே$^3$ ஜீவத$^4$ர்மகர்ம ||17**

ஜீவரந்தர்யாமியாக இத்து ப்ரேரிஸுவ - ஜீவர்களின் அந்தர்யாமியாக இருந்து ப்ரேரணை செய்கிறான்; பாவனனெனிப்ப ப்ராணனொளித்து - காப்பவனான முக்யபிராணனில் இருந்து; ஸாக்ஷியஹ - சாட்சியாக இருக்கிறான்; ஸ்தூலதொளகித்து - ஸ்தூல தேகத்தில் இருந்து ; ஓவி கார்யகள நடெஸுவ - வேண்டியவாறு, காரியங்களை நடத்துகிறான்; விஷ்வாக்யனெனிஸிகொண்டு - விஷ்வாக்ய என்று அழைத்துக் கொள்கிறான்; யாவதிந்த்ரியத வ்யாபாரகள - இந்திரியங்களின் எந்த வேலைகளை; நடெஸுவடெ - செய்வதற்கும்; ஆவகாலகு - எந்த காலத்திலும்; ஜீவததிகெ ஸ்வாதீனவில்ல - ஜீவனுக்கு ஸ்வாதீனம் (ஸ்வதந்த்ரன்) இல்லை; பாவனனெனிப்ப ஹரியிட்ட - காப்பவன் எனப்படுபவனான ஸ்ரீஹரி செய்வதைப் போலவே; தெரனந்திருவுதே ஜீவ தர்ம கர்ம - இருப்பது ஜீவனின் தர்ம மற்றும் கர்ம ஆகும்.

ஜீவர்கள் அஸ்வதந்த்ரர்கள் என்பதை இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

ஜீவர்களின் அந்தர்யாமியாக இருந்து ப்ரேரணை செய்கிறான். காப்பவனான முக்யபிராணனில் இருந்து சாட்சியாக இருக்கிறான். ஸ்தூல தேகத்தில் இருந்து, வேண்டியவாறு, காரியங்களை நடத்துகிறான். தன்னை விஷ்வாக்ய என்று அழைத்துக் கொள்கிறான். இந்திரியங்களின் எந்த வேலைகளை செய்வதற்கும், எந்த காலத்திலும், ஜீவனுக்கு ஸ்வாதீனம் (ஸ்வதந்த்ரன்) இல்லை. காப்பவன் எனப்படுபவனான ஸ்ரீஹரி செய்வதைப் போலவே இருப்பது ஜீவனின் தர்ம மற்றும் கர்ம ஆகும்.

**ஜீவ ஜீவகெ$^3$ பி$^3$ம்ப$^3$னெனிஸி கொம்பு$^3$வுது$^3$ண்டே**
**பாவனனெனிஸிகொண்டு$^3$ ஹரி தானெ நிந்த$^1$கி$^2$ள**
**ஜீவரொளு ப்ரத்யேகவாகி$^3$ கரெஸுவ பி$^3$ம்ப$^3$ப்ரதிபி$^3$ம்ப$^3$ நாமதி$^3$ந்த$^3$**
**ஜீவனிகரகெ யோக்$^3$யதெக$^3$ளில்ல விஷ்வஜக$^3$**
**தீவலய ஜீவரொளகி$^3$த்து$^3$ கர்மவமாடி$^3$**
**தானேபேளுவ யோக$^3$தி$^4$ஷ்டான நீசரெந்தா$^3$வாவ காலக$^3$ளொளு ||18**

ஜீவ ஜீவகெ பிம்பனெனிஸி கொம்புவுதுண்டே - ஜீவன் ஜீவனுக்கு பிம்பன் என்று சொல்லிக் கொள்ள முடியுமா?; பாவனனெனிஸிகொண்டு - காப்பவன் என்று சொல்லிக் கொண்டு; ஹரி தானே நிந்து - ஹரி தானே நின்று; அகிள ஜீவரொளு - அனைத்து ஜீவர்களுக்குள்ளும்; பிம்பப்ரதிபிம்ப நாமதிந்த - பிம்ப பிரதிபிம்ப என்னும் பெயர்களால்; ப்ரத்யேகவாகி கரெஸுவ - தனித்தனியாக அழைத்துக் கொள்கிறான்; ஜீவ நிகரகெ - ஜீவர்களின் குழுவிற்கு; யோக்யதெகளில்ல - யோக்யதைகள் இல்லை (ஸ்வதந்த்ரர் எனப்படுவதற்கு); விஷ்வ ஜகதீவலய - பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து; ஜீவரொளகித்து - ஜீவர்களுக்குள்ளும் இருந்து; கர்மவமாடி - கர்மங்களை செய்து; ஆவாக காலகளொளு - அனைத்து காலங்களிலும்; யோகதிஷ்டான நீசரெந்து - யோக அதிஷ்டான, நீசர் என்று; தானே பேளுவ - தானே சொல்லிக் கொள்கிறான்.

பிம்ப பிரதிபிம்ப பாவத்தை இங்கு விளக்கியுள்ளார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர் என்பதை பார்க்கலாம்.

ஜீவன் ஜீவனுக்கு பிம்பன் என்று சொல்லிக் கொள்ள முடியுமா?. காப்பவன் என்று சொல்லிக் கொண்டு ஹரி தானே நின்று, அனைத்து ஜீவர்களுக்குள்ளும், பிம்ப பிரதிபிம்ப என்னும் பெயர்களால் தனித்தனியாக அழைத்துக் கொள்கிறான். ஜீவர்களின் குழுவிற்கு, யோக்யதைகள் இல்லை (ஸ்வதந்த்ரர் எனப்படுவதற்கு). பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து ஜீவர்களுக்குள்ளும் இருந்து, ஸ்ரீஹரியானவன் கர்மங்களை செய்து, அனைத்து காலங்களிலும், யோக அதிஷ்டான, நீசர் என்று தானே சொல்லிக் கொள்கிறான்.

**ஆதி$^{3}$யொளு ஸ்ருஷ்டிகாலதி$^{3}$ ப்ரக்ருதியொளு நிந்து**
**தா த$^{3}$யதி$^{3}$ மூரு கு$^{3}$ணக$^{3}$ளஸ்ருஜிஸி மேதி$^{3}$னிய**
**மேலெ ஸாத்விக ரஜோதாமஸக$^{3}$ளெந்து$^{3}$ பெஸரிடெ$^{3}$ ஸத்ய ஸங்கல்ப**
**ஈ தே$^{3}$வதே$^{3}$வகொ$^{3}$த$^{3}$கி$^{3}$து தவஸூஸாரப$^{3}$ளி**
**கீசராசர ஜீவததிய கு$^{3}$ணதொ$^{3}$ளகி$^{3}$ட்டு**
**ஹாதி$^{3}$ தப்பிஸலுகொ$^{3}$ட$^{3}$தெ$^{3}$ கர்மானுஸார நடெ$^{3}$வனு ஸத்யஸங்கல்பனு ||19**

ஆதியொளு ஸ்ருஷ்டிகாலதி - துவக்கத்தில் ஸ்ருஷ்டி காலத்தில்; ப்ருக்ருதியொளுனிந்து - ப்ரக்ருதிக்குள் நின்று; தா தயதி - தான் கருணையுடன்; மூரு குணகள ஸ்ருஜிஸி - மூன்று குணங்களை படைத்து; மேதினிய மேலெ - இந்த உலகில்; ஸாத்விக ரஜோ தாமஸகளெந்து - ஸாத்விக ரஜோ தமஸ் என்று; பெஸரிடெ - பெயர் வைத்து; ஸத்ய ஸங்கல்பக - ஸத்ய ஸங்கல்பன் ஆனவன்; ஈ தேவதேவகெ ஒதகிது - இந்த ஸ்ரீஹரிக்கு கிடைத்தது; தவஸூஸாரபளிக - பிறகு, அந்த செயல்களின் சாரமே (கிடைத்தது); ஈ சராசர - இந்த சராசரங்களில் இருக்கும்; ஜீவததிய - ஜீவர்களில்; குணதொளகிட்டு - அந்த குணங்களை வைத்து; ஹாதி தப்பிஸலுகொடதெ - அவர்களை மாறாமல் இருக்கச் செய்து;

கர்மானுஸார - கர்மங்களுக்கு ஏற்பவே; நடெவனு - நடப்பான்; ஸத்யஸங்கல்பனு - ஸ்ரீஹரி ஸத்ய ஸங்கல்பன் ஆகிறான்.

மூன்று குணங்களை படைத்து, அவற்றை ஜீவர்களில் வைத்து, செயல்களை செய்வித்து, அதன் ஸாரத்தினை மட்டும் ஸ்ரீஹரி ஏற்றுக் கொள்கிறான் என்று இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

துவக்கத்தில் ஸ்ருஷ்டி காலத்தில், ப்ரக்ருதிக்குள் நின்று, தான் கருணையுடன் மூன்று குணங்களை படைத்து, இந்த உலகில் ஸாத்விக ரஜோ தமஸ் என்று அவற்றிற்கு பெயர் வைக்கிறான் ஸத்ய ஸங்கல்பன் ஆனவன். இந்த சராசரங்களில் இருக்கும், ஜீவர்களில், அந்த குணங்களை வைத்து, அவர்களை மாறாமல் இருக்கச் செய்து, கர்மங்களுக்கு ஏற்பவே, நடப்பான் அந்த ஸ்ரீஹரி ஸத்ய ஸங்கல்பன் ஆகிறான். இந்த ஸ்ரீஹரிக்கு பிறகு கிடைத்தது, அந்த செயல்களின் சாரமே (கிடைத்தது).

**தானெ கார்யவ மாடி$^3$பாபவெந்த$^3$ருபுவம்**
**தானெ க்ருத்யவ நடெ$^3$ஸி ஸுக்ருதவெந்து$^3$ ஸூரித$^3$ப**
**தானரியத$^3$வன தெரதொ$^3$ளகி$^3$த்து$^3$ மிஷ்ரனெந்தா$^3$டு$^3$வம் ஜீவததிய |**
**தானெ தன்னய மனவனித்து ஜீவரபொரெவ**
**தானெ மதகொ$^3$ட$^3$தெ$^3$ ஜீவர மேலெ கோ$^1$பி$^1$ஸுவ**
**தானுதா$^3$ஸினகை$^3$த$^3$வன தெரதொ$^3$ளிருத ஹரி கு$^3$ணயுக்த சேதனரொளு ||20**

தானெ கார்யவ மாடி - தானே செயல்களை செய்து; பாபவெந்தருபுவம் - அவற்றை பாவம் என்று சொல்கிறான்; தானெ க்ருத்யவ நடெஸி - தானே செயல்களை செய்வித்து; ஸுக்ருதவெந்து ஸூரிதப - அவற்றை நற்செயல்கள் என்று சொல்லி; தானரியதவன தெரத ஔகித்து - தான் எதுவும் அறியாவனைப் போல உள்ளே இருந்து; மிஸ்ரனெந்தாடுவம் - மிஸ்ர என்று சொல்லுவான்; ஜீவததிய - ஜீவர்களுக்கு; தானெ தன்னய மனவனித்து - தானே, தன்னுடைய மனதினை கொடுத்து; ஜீவரபொரெவ - ஜீவர்களை காப்பான்; தானெ மதகொடதெ - தானே

(அந்த செயல்களை) ஏற்காமல்; ஜீவர மேலெ கோபிஸுவ - ஜீவர்கள் மேல் கோபம் கொள்வான்; தானு உதாஸின கெய்து - தான் அவர்களை உதாசீனம் செய்வதைப் போல இருந்து; அவன தெரது ஒளிருத - அவனில் இருந்து ஒளிர்கிறான்; ஹரி குணயுக்த சேதனரொளு - நற்குணங்களைக் கொண்ட சேதனர்களில்.

ஸ்ரீஹரியானவன் அவனே அனைத்தையும் எப்படி செய்து, செய்விக்கிறான் என்பதை இங்கு அழகாக விளக்கியுள்ளார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

தானே செயல்களை செய்து, அவற்றை பாவம் என்று சொல்கிறான். தானே செயல்களை செய்வித்து, அவற்றை நற்செயல்கள் என்று சொல்கிறான். தான் எதுவும் அறியாவனைப் போல உள்ளே இருந்து மிஸ்ர என்று சொல்லுவான். ஜீவர்களுக்கு, தானே, தன்னுடைய மனதினை கொடுத்து, ஜீவர்களை காப்பான். தானே (அந்த செயல்களை) ஏற்காமல், ஜீவர்கள் மேல் கோபம் கொள்வான். தான் அவர்களை உதாசீனம் செய்வதைப் போல இருந்து, நற்குணங்களைக் கொண்ட சேதனர்களில் இருந்து ஒளிர்கிறான்.

**ஜீவரிகெ$^{3}$ ருணரூபவாத$^{3}$ கு$^{3}$ணவனெ ஸ்ருஜிஸி**
**மாவினுத தன்ன ஆக்ஞதி ஜீவரிகெ$^{3}$ ஹோரிஸி**
**ஈ வித$^{4}$த$^{3}$ எரடொ$^{3}$ந்து$^{3}$ கு$^{3}$ணவ ருணகடெ$^{3}$யாகி$^{3}$யிரலோஸுக$^{3}$வெ அவரொளு ||**
**ஜீவ கர்த்ருத்வ ப$^{3}$ந்த$^{4}$கஶக்ருதி ரூபாந்து**
**பாவனனெனிஸி கொண்டு$^{3}$ லிப்தனாக$^{3}$தெ$^{3}$ நிந்து**
**ஆவாவ பக்வகாலக$^{3}$ளரிது கு$^{3}$ணருணவ ஸாவதா$^{4}$னதி$^{3}$தித்$^{3}$து$^{3}$வ ||21**

ஜீவரிகெ - ஜீவர்களுக்கு; ருணரூபவாத - அவர்களின் ருணங்களுக்கேற்பதான; குணவனெ ஸ்ருஜிஸி - குணங்களை படைத்து; மா வினுத - ஸ்ரீலட்சுமிதேவியால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி; தன்ன ஆக்ஞதி - தன் ஆணைப்படியே (இஷ்டப்படியே); ஜீவரிகெ ஹோரிஸி - அவற்றை

ஜீவர்களுக்கு கொடுத்து; ஈ விதத எரடொந்து குணவ - இப்படியான 3 குணங்களை; ருணகடெயாகி இரலோஸுகவெ - இந்த குணங்களிலேயே அவர்கள் இருக்குமாறு; அவரொளு -அவர்களில்; ஜீவ கர்த்ருத்வ பந்தக ஷகுதி - ஜீவ கர்த்ருத்வ பந்தக சக்தியினை; பாவனனெனிஸிகொண்டு - தன்னை, காப்பவன் என்று சொல்லிக் கொள்பவன்; ரூபாந்து - ஒரு ரூபத்தில் (அவர்களில்); லிப்தனாகதெ நிந்து - நிர்லிப்தனாக இருந்து; ஆவாவ பக்வகாலகளரிது - அவ்வப்போது அவர்களின் பக்வ காலங்களை அறிந்து; குணருணவ - குணங்களின் ருணத்தை; ஸாவதானதி தித்துவ - அவ்வப்போது திருத்துவான் (அவர்களை மேம்படுத்துவான் - அவர்களின் பலனை கொடுப்பான்).

ஜீவர்களில் இருந்துகொண்டு, பகவந்தன் ஆனவன், அனைத்து செயல்களை செய்து செய்விக்கிறான் என்பதை மறுபடி இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.
ஜீவர்களுக்கு, அவர்களின் ருணங்களுக்கேற்பதான குணங்களை படைத்து, ஸ்ரீலட்சுமிதேவியால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, தன் ஆணைப்படியே (இஷ்டப்படியே), அவற்றை ஜீவர்களுக்கு கொடுத்து இந்த குணங்களிலேயே அவர்கள் இருக்குமாறு, அவர்களில், ஜீவ கர்த்ருத்வ பந்தக சக்தியினை, தன்னை, காப்பவன் என்று சொல்லிக் கொள்பவன், ஒரு ரூபத்தில் (அவர்களில்), நிர்லிப்தனாக இருந்து, அவ்வப்போது அவர்களின் பக்வ காலங்களை அறிந்து, குணங்களின் ருணத்தை, அவ்வப்போது திருத்துவான் (அவர்களை மேம்படுத்துவான் - அவர்களின் பலனை கொடுப்பான்).

**ஆவ கு$^3$ணருண பக்வகால ப$^3$ல்லனோஜீவ**
**ஆவ கர்மக$^3$ள து$^3$ர்மத ப$^2$லவ நெரெப$^3$ல்ல**
**ஆவ துஷ்க்ருத ஸுக்ருத ப$^2$ல உண்ட$^3$ ப்ரக்ஞா விஶேஷவிப்புதோ$^3$ ஜனுமதொ$^3$ளு ।**
**தீவிகொண்டி$^3$ஹ ஜன்மகு$^3$ணருண மஹாப$^4$யவு**
**டா$^2$வரிது$^3$ ஜீவரனு பாரகா$^3$ணிஸெ முக்த**

**ஸ்ரீயரஸனொலியத[3]லெ ஒலிஸப[3]ல்லவருண்டே ஜட[3]சேதனர மத்[4]யதி[3] ||22**

ஆவ குணருண பக்வகால பல்லனோஜீவ - ஜீவனானவன், குணருண, பக்வ கால என்று எதை அறிவான்? (அறியமாட்டான்); ஆவ கர்மகள மர்மத பலவ நெரெபல்ல - எந்த கர்மங்களின் மர்மமான பலன்களையும் சொல்ல முடியும்? (முடியாது); ஆவ துஷ்க்ருத ஸுக்ருத பல உண்ட - எந்த கெட்ட செயல்களால், நற் செயல்களால் வந்த பலன்களை அனுபவித்து; ப்ரக்ஞாவிசேஷவிப்புதோ - அதன் மூலம் என்ன சிறந்த அனுபவம் கிடைக்கப்போகிறதோ; ஜனுமதொளு - ஜீவனது பிறவிகளில்; தீவிகொண்டிஹ ஜன்ம குணருண - இதுவரை நம்மிடம் வந்து சேர்ந்திருக்கிற குணருணம் என்னும்; மஹாபயவு - இதைப் பற்றிய பயங்கள்; டாவிரிது - அதன் நிலைகளை அறிந்து; ஜீவரனு பாரகாணிஸெ - ஜீவர்களை (சம்சார சாகரத்திலிருந்து) காப்பாற்றுபவன்; ஜடசேதனர மத்யதி - இந்த ஜட அல்லது சேதனர்களின் நடுவில்; ஸ்ரீயரஸனொலியதலெ - ஸ்ரீஹரியைத் தவிர; ஒலிஸபல்லவருண்டெ - வேறு யாராவது காப்பாற்ற முடியுமா?;

ஸ்ரீஹரி மட்டுமே நம்மை நமது சம்சார துக்கத்தினை போக்க வல்லவன் என்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.
ஜீவனானவன், குணருண, பக்வ கால என்று எதை அறிவான்? (அறியமாட்டான்). எந்த கர்மங்களின் மர்மமான பலன்களை அவனால் சொல்ல முடியும்? (முடியாது). எந்த கெட்ட செயல்களால், நற் செயல்களால் வந்த பலன்களை அனுபவித்து, அதன் மூலம் என்ன சிறந்த அனுபவம் கிடைக்கப் போகிறதோ, ஜீவனது பிறவிகளில்? (அதுவும் தெரியாது). இதுவரை நம்மிடம் வந்து சேர்ந்திருக்கிற குணருணம் என்னும், இதைப் பற்றிய பயங்களை, அதன் நிலைகளை அறிந்து, ஜீவர்களை (சம்சார சாகரத்திலிருந்து) காப்பாற்றுபவன், இந்த ஜட அல்லது சேதனர்களின் நடுவில், ஸ்ரீஹரியைத் தவிர, வேறு யாராவது காப்பாற்ற முடியுமா?;

**நோவொந்து$^3$ தனகா$^3$கி$^3$ பரிஹரிஸிகொளலரியெ**
**பாவகி$^3$த விஷவ நிர்வஹிஸி கொளலந்தரிய**
**ஜீவனு ரமாப்ரம்ம ருத்ராத்$^3$யசிந்த்ய ஸத்கு$^3$ணபூர்ண நரஹரியனு |**
**தாவொலிஸி மெச்சிஸி ப$^4$வார்ணவவ தா$^3$டுவுதி$^3$**
**தா$^3$வ காலகு ஸாத்$^3$யவஹுதெ$^3$ அனஸூயெயம்**
**தா ஒலிது$^3$ அனிமித்த பொரெவனெனலவனெ நிர்கு$^3$ண ஜீவனீ த$^4$ரெயொளு ||23**

ஜீவனு ஈ தரெயொளு - ஜீவனானவன் இந்த பூமியில்; நோவொந்து தனகாகி - தனக்கு ஒரு நோய் வந்தால்; பரிஹரிஸி கொளலரியே - தானாக அதனை பரிகரித்துக் கொள்ள முடியாதவன்; பாவகிவ விஷவ - விஷத்தை குடித்துவிட்டால்; நிர்வஹிஸி கொளலந்தரிய ஜீவனு - அதனை சரிப்படுத்திக் கொள்ள முடியாதவனான ஜீவன்; ரமாபிரம்ம ருத்ராத்யசிந்த்ய - ரமா பிரம்மா ருத்ர ஆகியோரால் வணங்கப்படும்; ஸத்குணபூர்ண நரஹரியனு - ஸத்குணபூர்ணனான நரஹரியை; தாவொலிஸி மெச்சிஸி - தான் மகிழ்வித்து, புகழ்ந்து (அவனின் அருளைப் பெற்று); பவார்ணவவ தாடுவுது - இந்த சம்சார சாகரத்தை தாண்டுவது என்பது; இது ஆவ காலகு ஸாத்யவஹுதெ - இது எந்த காலத்திலும் நடக்கக் கூடிய செயலா?; அனஸூயெயம் தா ஒலிது - எவ்வித பொறாமையும் இல்லாமல் தான் தரிசனம் அளித்து; பொரெவனு - காக்கிறான்; அனிமித்த எனலு அவனே நிர்குண - அவனே அனிமித்த நண்பன், நிர்குணன்.

ஜீவனின் அஸ்வதந்த்ரத்தை மறுபடி இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.
ஜீவனானவன் இந்த பூமியில் தனக்கு ஒரு நோய் வந்தால், தானாக அதனை பரிகரித்துக் கொள்ள முடியாதவன். விஷத்தை குடித்துவிட்டால், அதனை சரிப்படுத்திக் கொள்ள முடியாதவனான ஜீவன், ரமா பிரம்மா ருத்ர ஆகியோரால் வணங்கப்படும் ஸத்குணபூர்ணனான நரஹரியை, தான் மகிழ்வித்து, புகழ்ந்து (அவனின் அருளைப் பெற்று), இந்த சம்சார சாகரத்தை தாண்டுவது என்பது, இது எந்த காலத்திலும் நடக்கக் கூடிய செயலா?. எவ்வித

பொறாமையும் இல்லாமல் தரிசனம் அளித்து ஸ்ரீஹரியே காக்கிறான். அவனே அனிமித்த நண்பன், நிர்குணன்.

**ஈ வித$^{4}$த$^{3}$ பா$^{4}$வனெயு ஆவ ஜீவனொளித்து$^{3}$**
**தானோவி கருணதி$^{3}$ம் மாள்பனோ ஶிரிரமண**
**பூ$^{4}$வலயதொ$^{3}$ளகெ$^{3}$ தச்சேதன கு$^{3}$ணதோ$^{3}$ஷக$^{3}$ளனு தா லெக்கிஸத$^{3}$லெ**
**பா$^{4}$வி ஆகா$^{3}$மி ஸஞ்சிதக$^{3}$ளனு களெது$^{3}$ ப$^{4}$வ**
**நோவனீயதெ$^{3}$ தன்ன ப$^{4}$க்தி ஸம்பத$^{3}$வித்து**
**ஈ வஸூந்த$^{4}$ரெயொளகெ$^{3}$ ஸ்ருஷ்டிகெ$^{3}$ காவ தன்னொளகி$^{3}$ட்டு ஸுகு$^{3}$ணி கருணி ||24**

ஈ வித‌த பாவனெயு - இப்படியான மேற்கூறிய சிந்தனைகள்; ஆவ ஜீவனொளித்து - எந்த ஜீவனில் இருந்து; தானோவி கருணதிம் - தான் அன்பு, கருணையுடன்; மாள்பனோ - செயல்களை செய்கிறானோ; ஷிரிரமண - ஸ்ரீரமணன்; பூவலயதொளகெ - இந்த பூமியில்; தத்சேதனன - அந்த சேதனனின்; குணதோஷகளனு - அவனின் குண தோஷங்களை; தா லெக்கிஸதலெ - தான் எண்ணாமல் (கவனத்தில் கொள்ளாமல்); பாவி ஆகாமி ஸஞ்சிதகளனு களெது - ஸஞ்சித மற்றும் ஆகாமி இந்த இரண்டு கர்மங்களையும் களைந்து; பவ நோவனீயதெ - சம்சார நோயினை கொடுக்காமல் (சம்சார சுழற்சியிலிருந்து விடுவித்து); தன்ன பக்தி ஸம்பதவித்து - தன்னுடைய பக்தி என்னும் செல்வத்தைக் கொடுத்து; ஈ வஸூந்தரெயொளகெ - இந்த பூமண்டலத்தில்; ஸ்ருஷ்டிகெ காவ - அடுத்து செய்யப்போகும் ஸ்ருஷ்டி காரியத்திற்காக; தன்னொளகிட்டு - அவர்களை தனக்குள் வைத்துக் கொண்டு; காவ - காப்பான்; ஸுகுணி கருணி - நற்குணங்களைக் கொண்ட கருணாளுவான ஸ்ரீஹரி.

தன்னுடைய அத்யந்த பக்தர்களுக்கு பவ நோயினை பரிகரிக்கிறான் ஸ்ரீஹரி என்பதை இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீகுரு ஸ்ரீனிவாஸ விட்டல தாஸர்.

இப்படியான மேற்கூறிய சிந்தனைகள், எந்த ஜீவனில் இருந்து, தான் அன்பு, கருணையுடன், செயல்களை செய்கிறானோ, ஸ்ரீரமணன் ஆனவன், இந்த பூமியில், அந்த சேதனனின், அவனின் குண தோஷங்களை, தான் எண்ணாமல் (கவனத்தில் கொள்ளாமல்), ஸஞ்சித மற்றும் ஆகாமி இந்த இரண்டு கர்மங்களையும் களைந்து, சம்சார நோயினை கொடுக்காமல் (சம்சார சுழற்சியிலிருந்து விடுவித்து), தன்னுடைய பக்தி என்னும் செல்வத்தைக் கொடுத்து, இந்த பூமண்டலத்தில், அடுத்து செய்யப்போகும் ஸ்ருஷ்டி காரியத்திற்காக, அவர்களை தனக்குள் வைத்துக் கொண்டு காப்பான், நற்குணங்களைக் கொண்ட கருணாளுவான ஸ்ரீஹரி.

* சஞ்சித = முந்தைய பிறவிகளில் சம்பாதித்த கர்மங்களுக்காக இந்த பிறவியில் அனுபவிப்பவை
* ஆகாமி = இந்த பிறவியில் செய்த, செய்யப்போகும் கர்மங்களுக்காக, அடுத்த பிறவிகளில் அனுபவிக்க வேண்டியவை.

**தானே கோபிஸி தானே ஷாந்தனாத³பனொம்மெ**
**தானெ பெ³ய்வம் தானெ த³யகெ³ய்வனொளொம்மெ**
**தானெ நரகவனித்து மரளி த³யவிட்டு மோக்ஷவனீவ ப⁴க்தக³ணகெ**
**ஈ வித⁴த கோ¹ப ஷாந்திக³ளிகா³ஸ்பத³வாத³**
**ஜீவக்ருத்யக³ள தானாசரிஸி நடெ³யுதிஹ**
**தே³வ கு³ரு ஸ்ரீனிவாஸவிட்டலகெ³ வைஷம்யவுண்டெ க⁴ன சினுமயங்கெ³ ||25**

தானே கோபிஸி தானே ஷாந்தனாதபனொம்மெ - தானே கோபம் கொள்கிறான், அமைதியும் படுத்துகிறான்; தானெ பெய்வம் தானே தயகெய்வனொளொம்மெ - தானே திட்டுகிறான், தானே மன்னிப்பும் கேட்கிறான்; தானெ நரகவனித்து - தானே நரகத்தினை கொடுத்து; மரளி தயவிட்டு - மறுபடி கருணை புரிந்து; மோக் ஷவனீவ பக்தகணகெ - தன் பக்தர்களின் கணத்திற்கு மோட்சத்தை கொடுக்கிறான்; ஈ விதத கோப ஷாந்திகளிகெ - இப்படியாக கோபம், சாந்தம் ஆகியவற்றிற்கு; ஆஸ்பதவாத - வாய்ப்பு இருக்கக்கூடிய; ஜீவக்ருத்யகள - ஜீவர்களின் செயல்களை; தானாசரிஸி

நடெயுதிஹ - தானே செய்து, செய்வித்து இருப்பவனான; தேவ குரு ஸ்ரீனிவாஸ விடலகெ - தேவனான குருஸ்ரீனிவாஸ விட்டலனுக்கு; வைஷம்யவுண்டெ - பாரபட்சம் இருக்கிறதா?; கன சினுமயங்கெ - அபாரமான, சின்மய மூர்த்தி ஆனவனுக்கு?.

குரு ஸ்ரீனிவாஸ விட்டலனுக்கு பாரபட்சம் கிடையாது என்பதை இந்த பத்யத்தில் சொல்லி, இந்த சந்தியினை தன் பிம்ப மூர்த்திக்கு சமர்ப்பணம் செய்கிறார் ஸ்ரீகுருஸ்ரீனிவாஸ தாஸர்.

தானே கோபம் கொள்கிறான், அமைதியும் படுத்துகிறான். தானே திட்டுகிறான், தானே மன்னிப்பும் கேட்கிறான். தானே நரகத்தினை கொடுத்த, மறுபடி கருணை புரிந்து, தன் பக்தர்களின் கணத்திற்கு மோட்சத்தை கொடுக்கிறான். இப்படியாக கோபம், சாந்தம் ஆகியவற்றிற்கு வாய்ப்பு இருக்கக்கூடிய ஜீவர்களின் செயல்களை தானே செய்து, செய்வித்து இருப்பவனான, தேவனான குருஸ்ரீனிவாஸ விட்டலனுக்கு, அபாரமான, சின்மய மூர்த்தி ஆனவனுக்கு பாரபட்சம் இருக்கிறதா?.

ஒப்ப3னலி நிந்தா1டு3வனு ம
த்தொப்ப3னலி நோடு3வனு பே3டு3வ
நொப்ப3னலி நீடு3வனு மாதாடு3வனு பெ3ரகா3கி3 |

என்று ஸ்ரீஜகன்னாத தாஸர் சொல்வதைப் போல ஸ்ரீஹரியானவன் அவனே அனைத்தையும் செய்து, செய்விக்கிறான் என்று இங்கு ஸ்ரீதாஸர் சொல்கிறார்.

அதைப் போலவே,
மாரமணனவரவர யோக்யதெ
மீரத3லெ கு3ண கர்மக3ள அனு
ஸார நடெ3ஸுவ தே3வனிகெ3 வைஷம்ய வெல்லிஹுதோ3 ||

என்று சொல்வதைப் போல, ஸ்ரீஹரிக்கு வைஷம்ய தோஷம் இல்லை என்று இங்கு மறுபடி தீர்மானமாக சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

***

## ஸ்ரீகமலாபதி விட்டலதாஸர் இயற்றிய பலஸ்துதி ஸந்தி

**ஸ்ரீமத3ஃப்வ க்3ரீவனொலுமெகெ3**
**தா4மரெனிப ஸ்ரீ வாதி3ராஜரு**
**ஸ்வாமி ஸ்ரீ வ்யாஸார்ய விட்டலோபாஸ்ய ஸ்வப்னத3லி |**
**ஸ்ரீ மனோரமனெனிப தத்வ ஸு**
**ஸௌமனத3 மாலிகெயனித்து**
**த்3தா4ம கி3ரந்த2வ ரசிஸினுதலி நுடி3த3 காரண3தி3 ||1**

ஸ்ரீமதஷ்வக்ரீவ - ஸ்ரீஹயக்ரீவ; ஒலுமெகெ தாமரெனிப - அருளைப் பெற்றவரான; ஸ்ரீவாதிராஜரு - ஸ்ரீவாதிராஜர்; மற்றும், ஸ்ரீவ்யாஸார்ய - ஸ்ரீவ்யாஸராஜர்; மற்றும், விட்டலோபாஸ்ய - விட்டலனை வணங்கும் ஸ்ரீபுரந்தரதாஸர் ஆகியோர்; ஸ்வப்னதலி - (ஸ்ரீஜகன்னாத தாஸரின்) கனவில் வந்து; ஸ்ரீமனோரமனெனிப - ஸ்ரீலட்சுமிதேவியின் பதியான ஸ்ரீஹரியின் அற்புதமான; தத்வ ஸுஸௌமனத மாலிகெயனு - தத்வங்கள் மற்றும் அவருடைய கதா அம்ருதத்தின் ஸாரத்தினை; இத்து - ஸ்ரீதாஸருக்கு அருளி / உபதேசித்து; உத்தாம கிரந்தவ - மிகச் சிறந்ததான ஒரு கிரந்தத்தினை; ரசிஸினுதலி - இயற்ற வேண்டும் என்று; நுடித காரணதி - கூறிய / ஆணையிட்ட காரணத்தினால்;

குருவர்யர்களான ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர் ஆகியோரில் ஆணைப்படியே, ஸ்ரீஜகன்னாத தாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தை இயற்ற முன்வந்தார் என்று ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர் இங்கு கூறுகிறார்.

ஸ்ரீஹயக்ரீவரின் அருளைப் பெற்றவரான, ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் விட்டலனை வணங்குபவரான ஸ்ரீபுரந்தரதாசர் ஆகியோர், ஸ்ரீஜகன்னாத தாஸரின் கனவில் வந்து இவ்வாறு கூறினர். ஸ்ரீலட்சுமிதேவியின் பதியான ஸ்ரீஹரியின் அற்புதமான தத்வங்கள் மற்றும் அவருடைய கதா அம்ருதத்தின் ஸாரத்தினை ஸ்ரீதாஸருக்கு உபதேசித்து, அதனை விளக்குவதான

ஒரு கிரந்தத்தினை நீங்கள் இயற்ற வேண்டும் என்று கூறிய காரணத்தினால்...

**பா4ரத ஸு பா4க3வத வாமன**
**கா3ருட3 ப4விஷோத்தர பத3வு**
**சாரு விஷ்ணுரஹஸ்ய வாயு பஞ்சராத்ராக3மா**
**ஸார கு3ரு வ்ருத்த ப்ரவ்ருத்த**
**ஈர ஸம்ஹிதாதி3த்ய வாக்3னேய**
**பார ரஸக3ள தோர்ப ஸ்ரீ கு3ருமத்4வஶாஸ்திரவு ||2**

பாரத ஸுபாகவத - மகாபாரத, பாகவத; வாமன காருட பவிஷ்யோத்தர பதவு - வாமன, கருட, பவிஷ்யோத்தர புராணங்களின்படி; சாரு விஷ்ணுரஹஸ்ய - அபூர்வமான விஷ்ணு ரகசிய; வாயு பஞ்சராத்ராகமா ஸார - வாயு புராண, பஞ்சராத்ர ஆகம ஆகியவற்றின் ஸாரத்தினை; குரு - மூத்தவர்கள் / ஸ்ரீவேதவ்யாஸர்; வ்ருத்த - கூறிய; ப்ரவ்ருத்த - எதைப் பற்றிய விஷயங்கள் இவற்றில் இருக்கின்றனவோ, அவற்றை; ஈர ஸம்ஹித - வாயு ஸம்ஹிதை; ஆதித்ய ஆக்னேய - ஆதித்ய ஆக்னேய புராணங்களின்; அபார ரஸகள - அபாரமான ஸாரங்களை; தோர்ப - கொண்டதான; ஸ்ரீகுருமத்வ சாஸ்திரவு - ஸ்ரீமதாசார்யரின் த்வைத ஸித்தாந்தத்தின்;

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரமானது எதனை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பதை இங்கு பட்டியலிடத் துவங்குகிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.

மகாபாரத, பாகவத, வாமன, கருட, பவிஷ்யோத்தர புராணங்கள், விஷ்ணு ரகசிய, வாயு புராண, பஞ்சராத்ர ஆகம ஆகியவற்றின் ஸாரத்தினை, ஸ்ரீவேதவ்யாஸர் கூறிய விஷயங்கள், வாயு ஸம்ஹிதை, ஆதித்ய, ஆக்னேய புராணங்கள் இவற்றின் ஸாரங்களைக் கொண்டதான ஸ்ரீமதாசார்யரின் த்வைத ஸித்தாந்தத்தின்...

**ஸார க்ரோடி3கரிஸலனுதி3ன**
**ஸாரெ வர்ணாபி4மானி தீ3னோ**
**த்3தா4ரகோ3ஸுக3 ஹரிகதா2ம்ருதஸாரவனு ரசிஸி |**
**ஸ்தை2ர்ய மானஸதி3ந்த3 பா4வி**
**பா4ரதிபதி வாதி3ராஜர**
**பூ4ரி கோஶகெ வொப்பிஸுதலாபார முத3 படெ3த3 ||3**

ஸார - ஸாரத்தினை; க்ரோடிகரிஸலு - தொகுத்து, இந்த ஹரிகதாம்ருதஸாரத்தினை இயற்ற முற்பட; அனுதின - தினம்தோறும்; ஸாரெ - அனைத்து; வர்ணாபிமானி - வர்ணாபிமானி தேவதைகளும் உதவ; தீனோத்தாரகோஸுக - ஸ்ரீஹரியின் அனைத்து பக்தர்களுக்கும் அருள்வதற்காக; ஹரிகதாம்ருதஸாரவனு ரசிஸி - ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தினை இயற்றி; ஸ்தைர்ய மானஸதிந்த - தன் மனப்பூர்வகமாக, அதனை; பாவி பாரதிபதி - பாவி ஸமீரரான; வாதிராஜர - ஸ்ரீவாதிராஜரின்; பூரி கோஷகெ - அபாரமான கிரந்த சமுதாயத்திற்கு; ஒப்பிஸுதலு - இதனை (ஸ்ரீகதாம்ருதஸாரத்தினை) சமர்ப்பித்து; அபார முத படெத - அதிகமான மகிழ்ச்சியை அடைந்தார்.

ஸ்ரீஜகன்னாத தாஸர் ஹரிகதாம்ருத ஸாரத்தை இயற்றி சமர்ப்பித்ததை இங்கு சொல்கிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.

மேற்கூறிய விஷயங்களின் ஸாரத்தினை தொகுத்து, இந்த ஹரிகதாம்ருதஸாரத்தினை ஸ்ரீஜகன்னாத தாஸர் இயற்ற முற்பட்டார். தினம்தோறும் அனைத்து வர்ணாபிமானி தேவதைகளும் உதவ, ஸ்ரீஹரியின் அனைத்து பக்தர்களுக்கும் அருள்வதற்காக, ஸ்ரீஹரிகதாம்ருத ஸாரத்தினை இயற்றி, அதனை மனப்பூர்வமாக, பாவி ஸமீரரான ஸ்ரீவாதிராஜரின், அபாரமான கிரந்த சமுதாயத்திற்கு இதனை சமர்ப்பித்து, அதிகமான மகிழ்ச்சியை அடைந்தார்.

**ஸாஸிரார்த்த2தொ3ளொந்து3 பத3கவ**
**காஶ விருவோ ஸ்ரீத3 ப்3ருஹதி**
**ஸாஸிரத3 நாமவனு யோசிஸி இவரு கி3ரந்தத3லி |**

**ஈ ஸூரஹஸ்யவனரிது படி[2]பகெ[3]**
**யேஸு தூ[3]ரவோ முக்தி ப[3]ரிதா[3]**
**யாஸ ப[3]ட்டத[3]ரிந்த[3] ப[2]லவேனில்லவே ஜக[3]தி[3] ||4**

ஸாஸிரார்த்ததொளொந்து பதகெ - ஒரு சொல்லுக்கு ஆயிரம் அர்த்தங்களைக் கொள்ளும்; அவகாஷ விருவோ - சந்தர்ப்பம் இருக்கும் (இந்த ஹரிகதாம்ருதஸாரத்தில்), (அதாவது, ஒவ்வொரு முறை படிக்கும்போதும் ஒவ்வொரு விதமான, புதிதுபுதிதான அர்த்தம் வரும் இந்த கிரந்தத்தில்); ஸ்ரீத ப்ருஹதி சாஸிரத நாமவனு யோசிஸி - பகவந்தனின் பெயர்களை (அவனது மகிமைகளை / சிறப்புகளை / அம்ருத ரஸத்தினை) சிந்தித்து, அனுசந்தானம் செய்தவாறு; இவர் கிரந்ததலி - ஸ்ரீஜகன்னாத தாஸர் இயற்றிய இந்த கிரந்தத்தில்; ஈ ஸூரஹஸ்யவனரிது - இத்தகைய ரகசியத்தினை அறிந்து; படிபகெ - இந்த ஹரிகதாம்ருதஸாரத்தினை படிப்பவனுக்கு; யேஸு தூரவோ முக்தி - முக்தி மிகவும் தூரமா? (இல்லை); ஜகதி - இந்த உலகில்; பரிதாயாஸ - (இந்த கிரந்தத்தை விட்டுவிட்டு) வெறும் சோர்வுடன்; பட்டதரிந்த பலவேனில்லவே - வேறு எதையாவது செய்வதால் என்ன பலன்? (ஒரு பலனும் இல்லை).

ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தை படித்தால் முக்தி நிச்சயம் என்று இங்கு சொல்கிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.

ஒரு சொல்லுக்கு ஆயிரம் அர்த்தங்களைக் கொள்ளும் சந்தர்ப்பம் இருக்கும் (இந்த ஹரிகதாம்ருதஸாரத்தில்), (அதாவது, ஒவ்வொரு முறை படிக்கும்போதும் ஒவ்வொரு விதமான, புதிதுபுதிதான அர்த்தம் வரும் இந்த கிரந்தத்தில்); பகவந்தனின் பெயர்களை (அவனது மகிமைகளை / சிறப்புகளை / அம்ருத ரஸத்தினை) சிந்தித்து, அனுசந்தானம் செய்தவாறு, ஸ்ரீஜகன்னாத தாஸர் இயற்றிய இந்த கிரந்தத்தில், இத்தகைய ரகசியத்தினை அறிந்து, இந்த ஹரிகதாம்ருதஸாரத்தினை படிப்பவனுக்கு, முக்தி மிகவும் தூரமா? (இல்லை). இந்த உலகில், (இந்த கிரந்தத்தை விட்டுவிட்டு) வெறும் சோர்வுடன், வேறு எதையாவது செய்வதால் என்ன பலன்? (ஒரு பலனும் இல்லை).

**ஹ எனலு ஹரியொலிவனு தா**
**ரி எனலு ரிக்தத்வ ஹரியுவ**
**க எனலு கத்தலெய அஞ்ஞானவனு பரிஹரிப**
**தா எனலு ஸ்தா2பிஸுவ ஞானவ**
**ம்ரு எனலு ம்ருதி1 ஜனிய பி3டி3ஸுவ**
**த எனலு ஹரி தன்ன மூர்த்திய தோருவனு நித்ய ||5**

ஹ எனலு ஹரியொலுவனு தா - ஹ என்றால் ஸ்ரீஹரி மகிழ்ச்சி அடைகிறான்; ரி எனலு ரிக்தத்வ ஹரியுவ - ரி என்றால் அபாரமான செல்வத்தை அருள்கிறான்; க எனலு கத்தலெய அஞ்ஞானவனு பரிஹரிப; க என்றால் அஞ்ஞானம் என்னும் இருட்டினை பரிகரிக்கிறான்; தா எனலு ஸ்தாபிஸுவ ஞானவ - தா என்றால் யதார்த்த ஞானத்தை கொடுக்கிறான்; ம்ரு எனலு ம்ருதி ஜனிய பிடிஸுவ - ம்ரு என்றால் ஜனன மரணத்தை பரிகரிக்கிறான் (மோட்சத்தை கொடுக்கிறான்); த எனலு ஹரி தன்ன மூர்த்திய தோருவனு நித்ய - த என்றால் தன்னையே காட்டிக் கொள்கிறான் (பிம்ப அபரோக்ஷம் ஆகிறது).

ஹரிகதாம்ருதஸார என்றால் என்ன அர்த்தம் என்பதை இந்த மற்றும் அடுத்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.

ஹ என்றால் ஸ்ரீஹரி மகிழ்ச்சி அடைகிறான்; ரி என்றால் அபாரமான செல்வத்தை அருள்கிறான்; க என்றால் அஞ்ஞானம் என்னும் இருட்டினை பரிகரிக்கிறான்; தா என்றால் யதார்த்த ஞானத்தை கொடுக்கிறான்; ம்ரு என்றால் ஜனன மரணத்தை பரிகரிக்கிறான் (மோட்சத்தை கொடுக்கிறான்). த என்றால் தன்னையே காட்டிக் கொள்கிறான் (பிம்ப அபரோக்ஷம் ஆகிறது).

**ஸா எனலு ஸாதி4ஸுவ முக்தீ**
**ர எனலு ரதி இத்து ரமிபனு**
**காய வாங்மனதெ3ண்டு அக்ஷர நுடித3ரத3ரொளகெ3 |**
**ஸ்ரீயரஸ விஷ்வாதி3 அஷ்டை**
**ஶ்வர்யரூபதி3 நிந்து தா பர**

**கீய நெனிஸதெ$^{3}$ இவன மனதொ$^{3}$ளு ராஜிபனு பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ||6||**

ஸா எனலு ஸாதிஸுவ முக்தி - ஸா என்றால் முக்தியை கொடுக்கிறான்; ர எனலு ரதி இத்து ரமிபனு - ர என்றால் மகிழ்ச்சியை கொடுத்து காக்கிறான்; காய வாங்மன - தேகத்தினால், வாக்கினால் மனதினால்; எண்டு அக்கர - ஹரிகதாம்ருதஸார என்னும் எட்டு எழுத்தினை; நுடிதர - கூறினால்; அதரொளகெ - அதற்குள்; ஸ்ரீயரஸ - ஸ்ரீஹரியானவர்; விஷ்வாதி அஷ்டைஷ்வர்ய ரூபதி - விஷ்வ முதலான எட்டு ரூபங்களால் (விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம); நிந்து - (அவனின் தேகத்தில் நின்று); தா - தான்; பரகீய நெனிஸதெ - வேறானவன் என்று நினைக்காமல்; இவன மனதொளு - இந்த ஜீவனின் மனதில்; ராஜிபனு பிடதெ - நின்று நிலைக்கிறான்.

ஹரிகதாம்ருதஸாரத்தை படித்தால், பிம்ப அபரோக்ஷம் ஆகிறது என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.
ஸா என்றால் முக்தியை கொடுக்கிறான். ர என்றால் மகிழ்ச்சியை கொடுத்து காக்கிறான். தேகத்தினால், வாக்கினால் மனதினால், ஹரிகதாம்ருதஸார என்னும் எட்டு எழுத்தினை கூறினால், அதற்குள், ஸ்ரீஹரியானவர், விஷ்வ முதலான எட்டு ரூபங்களால் (விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம), அவனின் தேகத்தில் நின்று, தான் வேறானவன் என்று நினைக்காமல், இந்த ஜீவனின் மனதில், நின்று நிலைக்கிறான்.

**ஹரியெனிபக$^{3}$னிருத்$^{3}$த$^{3}$ த$^{4}$ர்மவு**
**தொ$^{3}$ரகிஸுவனு பரம ஹருஷதி$^{3}$**
**த்வர கதா$^{2}$யெனெ க்ருதிரமணனர்த்தி$^{2}$க$^{3}$ள ஹனிக$^{3}$ரெவ |**
**வர அம்ருத யெனலாக$^{3}$ ஸ்ரீ ஸங்**
**கருஷணனெ காமஹனு யோசிப**
**ஸரஸஸாரனெ வாஸுதே$^{3}$வனு மோக்ஷ கொடு$^{3}$திப்ப ||7||**

ஹரியெனிபகெ - ஸ்ரீஹரி என்று சொல்பவருக்கு; அனிருத்த - அனிருத்த ரூபியான ஸ்ரீஹரி; தர்மவு தொரகிஸுவனு - தர்மத்தை அருள்கிறான்; பரம ஹருஷதி த்வர - உடனடியாக, மிகவும்

மகிழ்ச்சியுடன்; கதாயெனி - கதா என்று சொல்பவருக்கு; க்ருதிரமணனு - க்ருதி ரமணனான பிரத்யும்ன ரூபியான ஸ்ரீஹரி; அர்த்திகள ஹனிகரெவ - அர்த்திகளின் மழைகளையே பொழிவான்; வர அம்ருத யெனலாக - சிறந்ததான அம்ருத என்றபோது; ஸ்ரீசங்கர்ஷணனெ - ஸ்ரீஸங்கர்ஷண ரூபியான ஸ்ரீஹரி; காமஹனு - காமத்தை அருள்கிறான்; ஸரஸ ஸாரனெ - பக்தியுடன் ஸார என்றால்; வாஸுதேவனு - ஸ்ரீவாஸுதேவனான ஸ்ரீஹரி; மோக்ஷ கொடுதிப்ப - மோட்சத்தையே கொடுக்கிறான்.

ஸ்ரீஹரிகதாம்ருதஸார என்று சொல்பவர்களுக்கு ஸ்ரீஹரியானவன், எப்படி தர்மார்த்த காம மோட்சங்களைக் கொடுக்கிறான் என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர்.

ஸ்ரீஹரி என்று சொல்பவருக்கு, அனிருத்த ரூபியான ஸ்ரீஹரி, உடனடியாக மிகவும் மகிழ்ச்சியுடன், தர்மத்தை அருள்கிறான். கதா என்று சொல்பவருக்கு, க்ருதி ரமணனான பிரத்யும்ன ரூபியான ஸ்ரீஹரி, அர்த்திகளின் மழைகளையே பொழிகிறான். மிகச் சிறந்ததான அம்ருத என்றபோது, ஸ்ரீஸங்கர்ஷண ரூபியான ஸ்ரீஹரி, காமத்தை அருள்கிறான். பக்தியுடன் ஸார என்றால், ஸ்ரீவாஸுதேவனான ஸ்ரீஹரி, மோட்சத்தையே கொடுக்கிறான்.

**ஈ ரஹஸ்யவனரிது ப்ரதிதி$^3$ன**
**ஸாரஸாக்ஷன பாத$^3$கமலகெ**
**ஆரு பத$^3$னந்திருவ ஸுஜனகெ மேலே நுடி$^3$த$^3$ ப$^2$ல |**
**ஸாரி ஸாரிகெ$^3$ வத$^3$கி$^3$ ப$^3$ருதலெ**
**ஸேரிஸுவரை விஷ்ணு மந்தி$^3$ர**
**தோருவனு நிந்த$^3$கர நிக$^1$ரகெ$^1$ நிரயவனு நித்ய ||8**

ஈ ரஹஸ்யவனரிது - இத்தகைய ரகசியத்தை அறிந்து; ப்ரதிதின - தினம்தோறும்; ஸாரஸாக்ஷன - ஸ்ரீஹரியின்; பாதகமலகெ - பாத கமலங்களை; ஆரு - யார்; பதனந்திருவ - சரணாகதராகி இருக்கிறாரோ, அத்தகைய ; ஸுஜனகெ - பக்தர்களுக்கு; மேலே நுடித - மேற்கூறிய; பல - பலன்களை; ஸாரி ஸாரிகெ - மிகவும்

அதிகமாக; வதகி பருதலெ - அருளி வருகிறார்; விஷ்ணு மந்திர - விஷ்ணு மந்திரத்தில் (முக்தியில்); ஸேரிஸுவரை - அவரை சேர்க்கிறார்; நிந்தகர நிகரகெ - அவரை உதாசீனம் செய்பவர்களின் கூட்டத்திற்கு; நித்ய - எப்போதும்; நிரயவனு - நரகங்களை; தோருவனு - காட்டுகிறார் (அடையச் செய்கிறார்).

இத்தகைய ரகசியத்தை அறிந்து, தினம்தோறும், ஸ்ரீஹரியின் பாத கமலங்களை யார் சரணாகதராகி இருக்கிறாரோ, அத்தகைய பக்தர்களுக்கு மேற்கூறிய பலன்களை மிகவும் அதிகமாக அருளி வருகிறார். கடைசியில் முக்தியில் அவரை சேர்க்கிறார். அவரை உதாசீனம் செய்பவர்களின் கூட்டத்திற்கு எப்போதும் நரகங்களையே காட்டுகிறார்.

**சாருதனதி[3] ஹரிகதா[2]ம்ருத**
**ஸாரக்ருத ரிஷி பா[4]ரத்[3]வாஜர**
**ஸார ஹ்ருத[3]யதி[3] நிந்தா[3] ஸகல ஸுஶாஸ்திரதா[3] லோகா |**
**ஸாரிஸாரிகெ[3] மாடி[3] மாடி[3]ஸி**
**ஸூரெகொ[3]ட்டானந்த[3] சின்மய**
**பா[1]ரவாரஶயன ஸ்ரீ கமலாபதிவிட்டலா ||9**

சாருதனதி - மிகவும் அழகாக; ஹரிகதாம்ருதஸாரக்ருத - ஹரிகதாம்ருத ஸாரத்தை இயற்றிய; ரிஷி பாரத்வாஜர ஸார ஹ்ருதயதி நிந்தா - ரிஷி பாரத்வாஜரின் இதயத்தில் நின்று; ஸகல ஸுசாஸ்திரதா - அனைத்து நற் சாஸ்திரங்களையும்; லோகா ஸாரிஸாரிகெ மாடி மாடிஸி - உலகத்திற்காக பலவற்றை செய்து செய்வித்து; ஸூரெகொட்டானந்த - அபாரமான ஆனந்தத்தைக் கொடுத்தான்; சின்மய - சின்மய மூர்த்தியான; பாரவாரஷயன - அனந்த பத்மனாபனான; ஸ்ரீகமலாபதி விட்டலா - ஸ்ரீகமலாபதி விட்டலன்.

கடைசி பத்யத்தினை ஸ்ரீகமலாபதி விட்டல தாஸர், தனது பிம்பமூர்த்தியான ஸ்ரீகமலாபதி விட்டலனுக்கு சமர்ப்பிக்கிறார்.

மிகவும் அழகாக, ஹரிகதாம்ருத ஸாரத்தினை இயற்றிய, ரிஷி பாரத்வாஜரின் இதயத்தில் நின்று, அனைத்து நற் சாஸ்திரங்களையும், உலகத்திற்காக பலவற்றை செய்து செய்வித்து, அபாரமான ஆனந்தத்தை, சின்மய மூர்த்தியான அனந்த பத்மனாபனான, ஸ்ரீகமலாபதி விட்டலன் கொடுத்தான்.

** வேத அத்யயனத்திற்காகவே தன் முழு வாழ்க்கையை அர்ப்பணித்த ரிஷி பாரத்வாஜர். அதைப் போலவே, தன் வாழ்க்கையையும் அர்ப்பணித்த ஸ்ரீஜகன்னாத தாஸரை, பாரத்வாஜருக்கு ஒப்பிட்டு சொல்கிறார் என்று கொள்ளலாம்.

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**